உ

கடவுள் துணை.

# தனிப்பாடற்றிரட்டு.



இவை.

இராமநாதபுரம் ஸமஸ்தானம் ம-ா-ா-ஸ்ரீ

பொன்னுசாமி தேவரவர்கள்

அனுமதியினால்

முன்பதிப்பித்த பற்பலபிரதிகளைக்கொண்டும்

இன்னுஞ்சிலபாடல்களும் நூதனமாகச் சேர்த்து

இஃது,

மயிலம்.

சுப்பிரமணிய சுவாமிகளால்

பார்வையிடப்பட்டு.

சென்னை-இட்டா

பார்த்தசாரதி நயுடு

அவர்களாற்றமது

சென்னை

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

—*—

1907.

சென்னை ஆச்சாரப்பன் தெரு-நெ, 84





ஸ்ரீலட்சுமீகடாக்ஷசுமஸ்து

ஸ்ரீமகாபாரதகீர்த்தனஞ்செய்த

ம-௱-௱-ஸ்ரீ, முத்துராமமுதலியாரவர்கள் தமையனார் குமாரர்

கோ-சபாபதிமுதலியாரவர்கள் இயற்றிய

# சிறப்புப் பாயிரம்.

---

கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

தண்ணளிமிழற்றுபைங் கற்பகநன்னீழலிற் றனியாகபுவியிந்திரனும், தலைமைசேரும்ராம நாதபுரநற்சமஸ் தானமாநேசரென்னும், அண்ணன்மதவேள்பொன்னு சாமிதேவப்ரபலாஅமரராமகிலத்தினோர், அகமகிழ்ந்துட்கொளத் திருமாலெனுந்தில்லை யம்பூரரும்புவிதுதி, பண்ணவருமுயர்ச்சாத்ர சேகரக்கவிராஜபண்டிதரெழிற்கச்சியம், பதிமருவு வித்துவான் கச்சபாலயரெனப் பகருமிவ்விருவரைக்கொண், டெண்ணரும் புலவர்கள் கவிகளாங்கடலைமல ரிணையின்மதிமந்திரத், தால், எளிதிற்கடைந்தமுத மாந்தனிப்பாடலை யெடுத்திங்களித்தனரரோ. க

தலைமைபெரும்திசைவாழ் சிவஞானதேவர்சுதர் தகுராமநாதபுரநற், சமஸ்தானமதனுக்குமுயர்பரமசிவனடிதனக்குமாநேசர்வழுதி, தாமென்னமுத்துதமிழ்ப் பைங்கூழ்தழைத்திறச் சந்ததம்பொன்மாரி பெய், தகைமையவனும்பொன்னு சாமிதேவர்பெயர்கொள் தனுமரபர்புகல்வளவில், தலைகளுணர்தில்லையம் பூர்ச்சந்த்ரசேகரக் கவிராஜ பண்டிதரும்வண், காஞ்சிமாநகர்மேவுமுசிதகனவித்துவான் கச்சபாலருமவர்தம், கருத்தின்படிக்குச்செய் தீதவோமெனக்கணங்கங்கணங்கட்டியே, கனைகடலிடப்பல விடங்களிற்சிதறிவெகு காலமுன்வீழ்ந்திருந்த, அகிலனற்பொருடனைக் கண்டெடுத்ததினடிசொலர்த்தமிவைதாருமாறு, அவனியில்வழங்குமெண்ணறுதனிப்பாடல்களைவக் குணமுயற்றவைகளை, அன்றுசொன்னவர்கருத் திற்கணுவும்வழுவாதனந்தமுறை யதிநுட்பமாய், ஆராய்ந்தொருங்குசேர்த் தகிலமெல்லாம்புகழ வச்சிற்பதித்ததைக்கண், டுலகிலிவ்விருவர்தங் கல்வித்திறத்தையோர்ந் துளாராவித்தைதக்கியான், ஒருவனேயென்றெண்ணவிழிவென்னவறுமுகவனெளிரகங்குன்றிநின்றான், உயர்முனிவரெண்சாணுடம்புமொருசாணினு மொடுங்குறுனிவாபுலமைதேர்ந், துநேவெந்தொருகாலருந்திவிழியிமையாவலோடிதயமுற்றனனரோ. உ

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.

---

உ

ஸ்ரீலட்சுமீகடாக்ஷிக்ஷமஸ்து.

# சாத்துக்கவிகள்.

இவை.

சென்னைத் துரைத்தனக்கல்விச்சாலையில் தமிழ்த் தலைமைப் புலமை
நடாத்தும் இயற்றமிழாசிரியராகிய
திருத்தணிகை
விசாகப்பெருமாளையரவர்களா லியற்றப்பட்டது.

நிலைமண்டிலஆசிரியப்பா.

சீர்மலிஏர்பெறு திகழ்கடலுடுத்த
பார்தனிலார்தரு பற்பலமொழிகளுள்
பண்ணருந்தமிழாம் பாற்கடலதனைச்
சொன்னயப்பொருணயச் சுவைமிகவுணர்ந்து
துங்கமிருத்திடு சங்கப்புலவர்கள்
வள்ளுவரௌவை வான்காளமேகம்
தெள்ளுபொய்யாமொழி திகழ்கம்பராதியாம்
நாவலரென்னு நலமுகில்பருகி
ஓவறவாங்காங் கொழுக்கியகவியாம்
தண்ணுறுமமுதை யண்ணவர்செவியால்
உண்டுகளிப்பதே யுறுதியென்றோர்ந்து
தென்னாடதனிற் பொன்னேடொக்கும்
நிலைமன்னவதனத் திலகியதிலகமாம்
பலர்புகழிராம நாதநற்பதியில்
இனிதுவீற்றிருந்து மநுநூல்விதிவழிச்
செங்கோனடாத்து சங்கேந்துதிருமால்
திரிபலர்மடங்கல் சற்குணமேரு
அறிவையற்குருவ மாகியவங்கசன்
மன்னுறுகலிதனை மாற்றுமருந்து
சென்னியின்மதிபுனை சிற்பரனடிதொழூஉம்
சிவஞானதேவன் செய்தவப்பயனே
புவமிசையுருக்கொடுப்போந்தெனத்தோன்றிய
பொன்னுசாமி யெனும்பூபாலன்
தன்மனமுவந்து தயங்குறவெழுதா
வெழுத்திற்பொருத்தே யீந்திடுகென்ன
அறியதவத்தரும் பெரியோர்களும்வாழ்
பொன்னிருஞ்சென்னி புன்னாடதனில்
மன்னுதில்லையம் பூரெனும்பதிவாழ்
வாகுறுசந்திர சேகரனென்னும்
புலவராசர்புகழ் கவிராஜபண்டிதனுல்

பழுத்திடும்வருக்கையின் செழுத்தகனியினை
வான்கவிகவ்வவூ உடைந்திழிந்து
தானூடறீர்க்குந் தண்டலையுடுத்த
மணலியம்பதிவாழ் மாண்புறுநல்லோன்
குணநிதிநறுமலர்க் குவளைத்தாரான்
பெரியதம்பியா முரியபெயரினன்
வழுவுக்களைவித்து வாகுறுமச்சிற்
கெழுவுறப்பதித்துக் கிளர்வித்தனனமேரர்

இவை.

காஞ்சீபுரம்-பச்சையப்பமுதலியாரவர்கள் கல்விச்சாலையில்
தமிழ்த்தலைமைப் புலமைநடாத்திய
வித்வான் காஞ்சீபுரம்
சபாபதிமுதலியாரவர்களா லியற்றப்பட்டது.

நேரிசை-ஆசிரியப்பா.

திங்கள்சேர்செஞ்சடைத் தேவனியம்
மங்கைமணாளன் மதுரைபெருமான்
இறையெனமேவி யியற்றமிழாய்ந்த
பொறைமிகுசங்கப் புலவரேயாகி
யாண்டுளபுலவரு மினிதின்முன்னரே
பூண்டுளவளமெலாம் பொற்புடனினிவரும்
நற்றமிழ்வல்லோர் நாமுமதன்வளம்
தெற்றெனவுரைக்குதுஞ் சிறிதெனத்தத்தம்
நாப்புடையபெயரா வண்ணனலத்திகழ்
கோப்புடைக்கவியார் கூறியதாகி
அன்னவர்பின்வரு மறிஞர்களனைவோர்ந்
தென்னெனப்புகழ்ந்து மித்தமிழ்நாட்டினை
ஒல்லும்வகையா லுரைத்துமெனனிலோ
சொல்லியசொல்லுஞ் சுசமாகுதுமனு
எண்ணியெண்ணி யேக்கங்கொண்டப்
புண்ணியசங்கப் புலவர்புகன்ற
செய்யுட்கவெள்ளையுஞ் செவ்விதினோதி
உய்வதேபயனென் னுவப்புறாஉம்பாண்டிநன்
னாட்டுளவிராமநாதர்தங்கமலைத்
தாட்டலைகொண்டு தகவுடனேத்தி
அவமெலாமகற்ற வருள்முதன்னானுஞ்
சிவஞானதேவர் செயதலைக்கட்டிடைத்
தோற்றியசெம்மணி தூயகுணமணி
நாற்கவிப்புலவர் நாடும்புகழ்மணி
அந்தணர்சிவபிரா னடியவரவர்க்கும்
வந்துளவளமெலாம் வழங்கவுண்மகிழ்ந்து

இயாதொருபொருளு மில்லையென்றுதருள்
சேதுபதியெனுஞ் செல்வன்செங்கோல்
கோடாவகையாநீறிஇக் குடிகள்பலரும்
வாடாவகையான் மகிழ்ந்துபுரந்தே
அறத்தாறித்தென் றறிந்தான்தமைந்தசொற்
றிருத்தாறறியுந் தேர்ச்சிநன்னூலொடு
மதிநுட்பமுமுள மாண்தமைவள்ளல்
அதிநுட்பமியாவையு மகற்றமாண்டதை
தனபெயரதனுற் றன்பதியிவனென
மண்புவியோர்கண் மதித்திடவாய்ந்த
பொன்னுசாமிப் புலவர்சிகாமணி
துன்னுற்சாக மொடுதொகுத்தியற்றுக
என்றுரைசெய்ய வியற்றமிழ்க்கடலை
குன்றுடைமுனியெனக் குடியாதுடித்துக்
களிப்புறுகினற கவிராஜபண்டிதன்
தளிப்புறுசெஞ்சடைச் சங்கரன்பதமலர்
அல்லும்பகலு மன்புடனேத்தும்
தில்லையம்பூர் செந்நாப்புலவன்
சந்திரசேகர தகுபெயரறிஞன்
புந்தியினுய்த்த பொற்புள தாந்தனிப்
பாடற்றிரட்டெனும் பாற்றிரட்டதனை
நீடக்கருங்கோலா னிகழ்வித்திடாது
பாருள்வாழ்வோர் பண்டுகண்டிலாச்
சீருள்வரியார் திகழப்பதித்தனன்
கனிதமிலாதளங் காட்டுபுவிளங்கும்
மணிலிநன்னகர்வாழ் மகிபதிகனவிலும்
சிவனடிமறவாச் சிந்தையன்சான்றோர்
தவவிலாக்கேள்வித் தகைசாலறிஞன்
பெரியதம்பிப் பெயரினன்
உறிபவுலக முவப்புறற்பொருட்டே

இவை.

சென்னைத்துரைத்தனக்கல்விச்சங்கத்தில் தமிழ்ப்புலவராகிய
அஷ்டாவதானம்.
வீராசாமிசெட்டியாரவர்களா லியற்றப்பட்டது.

நேரிசை ஆசிரியப்பா.

திருமலிகூடற் பெருநகர்வைகிய
புலம்புரிபுலவராம் வலம்புரிச்சங்கமும்
காளமேகமா நீள்கரிமருப்பும்
வள்ளுவரென்னுந் தெள்ளுநற்கதலியும்
இருமௌவையாரெனுஞ்சாலியும்

ஒட்டக்கூத்தராம்வட்டவாரிசமர்ம்
புகழேந்தியென்னுந் திகழேந்துதிகிரியும்
உம்பர்வியந்திடுங் கம்பராகன்னலும்
அழிவுறாபொய்யா மொழியெனும்பூகமும்
தேசுறுசிவப்பிர காசராமதியமும்
மாசிவஞான தேசிகப்புயலும்
எனைப்புலவராம் பானிறவப்பியும்
அற்புதமாகப் பற்பலவமையத்
தாங்காங்குதவிய பாங்காகியதனிற்
பாடலென்னும் பீடுறுபலவகைச்
சத்தங்கேறீஇ நந்துநன்பணியன்
வர்க்கமதனைப் பொறகப்பியன்போல்
வடுத்தவிர்ந்திடவாய்ந் தெடுத்துவிளுத்தகச்
சேர்த்தொருவடமாக் கோத்துநிறல்பட
இப்புவியோர்க ளிறும்பூதெய்தச்
செப்பமாகத் திரட்டியச்சிடுகென்
றரசரேறுவிறை செய்பூந்தாரான்
இரவலர்கற்பகம் வாகுணமேரு
மருமலர்க்கதனி கருணைவாரிதி
பல்வளமோங்குஞ் செல்வப்புவிமகன்
இலகுமுகத்திற் றிலகமெனக்கிளர்
மேதகுராமநாதபுரம்வாழ்
சிவஞானதேவன் றவமோருருவாய்
வந்தவதரித்த மைந்தனிலத்திடை
அருங்கலையனைத்து மொருங்கினிதுணர்ந்தோன்
தென்னவன்போற்றமிழ் தன்னைவளர்ப்பவன்
பொன்னுசாமி யென்னும்புரந்தரன்
நன்னயமாகச் சொன்னசொன்மேற்கொளீஇ
ஆழ்திரைப்பொன்னி சூழ்பொன்னாட்டினில்
மல்லலம்மழனத் தில்லையம்பூர்வரும்
இந்திரதருநிகர் சந்திரசேகரகவி
ராஜபண்டிதனு லாசறத்திருத்தித்
தேமலர்ச்சோலையும் தாமறவாவியும்
மன்னியமணலி யென்னுமாநகரோன்
சால்புறுகின்ற சைவசிகாமணி
பாலியென்னுஞ் சீலமார்நதியினன்
திருவுளநல்லொளிசேர் குவளைமாலையான்
விரிபுகழ்நிலவிய பெரியதம்பி
எனப்பெயர்மருவியவன்பெயர்குணநிதி
கவிஞர்குழாங்கண்டு வகையின்வியக்கப்

பற்பலதிசையும் பரவப்
பொற்புடன்பதித்துப் புலப்படுத்தினனே.

சென்னைக்கல்விச்சங்கத்து மதறசாஈஆஜம் பாடசாலையில்
தமிழ்ப்புலமைநடாத்தும்-கூவம்,
சு-சிதம்பரமுதலியாரவர்களாலியற்றப்பட்டது.
கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

சொல்லயப்பூரணமதிற்றபுத்தாய்ந்துண்மை
கொடாபொருடேர்திருக்கடவுட்பலகைச்சங்கத்
தொலைவில்புகழ்ங்கவிஞர்முதற்றமிழ்மேதக்க
கருதிமொழித்தலைவர்பண்டுதொகுத்துச்சேர்த்து
செல்லையம்பூருகத்தியசுவைபாலிக்குஞ்
செழுங்கனியவெனப்பயத்தற்கியநூலன்றுச்
சிலகிமித்தத்துவருற்றுப்பலகவிதைசெம்பொன்
றிகைமறைந்தங்குறவுளிகாண்பெரியதாகத்
தில்லையம்பூர்ச்சந்திரசேகரப்பேர்வாய்ந்த
தெளிகருநாவலனெனுமஞ்சனங்கண்கொண்டு
தெரிந்தெடுத்தச்சிற்பதிப்பித்தெவர்க்குங்கல்விச்
சிறுமைகடக்களிதுலைங்குந்திறந்தந்தானுற்
றெல்லையம்பூர்சடிலனையுண்ணெகிழ்ந்துபோற்றுந்
தூய்மையும்வாய்மையுமுடையான்ராமநாதச்
சான்மருவுபுரன்பொன்னுசாமிமாறன்
சொல்மணலிப்பதிப்பெரியதம்பிவேளே.

இவைதமிழ்ப்புலவராகியகூடலூர்
இருசப்பஉபாத்தியாயரவர்களா லியற்றப்பட்டது
கழிநெடிலடி-ஆசிரியவிருத்தம்.

நற்கவிஞராங்கம்பர் காளமேகம் நவில்பொய்யாமொழியவ்வை
நயந்துரைத்த, பொற்கவியைத்திரட்டியச்சிற் பதிக்கவெனப் பொன
னுசாமித்தேவன பொறையான்மிக்கோன், சிற்குணன்றருள்பணியன்
ன்சொல்லச் சந்திரசேகரனுங்கவிராஜன் திருத்திநல்க, எற்குலபெரி
தம்பிமணலிவாசன் இருஞ்சிலைமேலெழுத்துப்போலியற்றினனே
தனிப்பாடல்களைத்திரட்டிக்கொடுத்ததிருக்காட்டுப்பள்ளி
இராமசாமிமுதலியாரவர்கள்சிறப்பு.
கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்டமணிமாடமேனிலையின்முகிலுலவச்சிறப்பினோங்கு
திருக்காட்டுபள்ளியெனு மெழிலூரன்செங்குவளைச் செழும்பூந்தா
ன்,கார்கொண்டவேங்கடநன்மலையானோர்பாலிந்தியுடையோன்கன்
ன்வாகொண்டமுலைமாதர் மடலூருமெழின்மாரன் மதிக்குஞ்சீரன்
வாய்மைபெறுராமசாமிக்குரிசிலோரைம்பான்வருடஞ்சாரும்,ஏர்கொ
ண்டவன்பினொடு பொருள்செலவிட்டருஞ்செய்யு ளினிதிற்றேடிஎ
திவைத்தபலபாட்டுப் பிரதியொன்றுதந்துபுக ழிங்குற்றானே.

சாத்துகவிகள்-முற்றுப்பெற்றது.

உ

கடவுள்துணை.

வித்வசிரோன்மணியாகிய

காளமேகப்புலவர்.

அவ்வவ்வமயங்களிற்கூறிய

# தனிப்பாடற்றிரட்டு.

காப்பு.

வெண்பா.

எரானைக்காவிலுறை யென்னானைக்கன்றளித்த
பேரானைக்கன்றுதனைப் போற்றினால்-வாராத
புத்திவரும்பத்திவரும் புத்திரவுற்பத்திவரும்
சத்திவருஞ்சித்திவருந் தான்.

வெள்ளைக்கலையுடுத்தி வெள்ளைப்பணிபூண்டு
வெள்ளைக்கமலத்தில் வீற்றிருப்பாள்-வெள்ளை
அரியாசனத்தி லரசரோடென்னைச்
சரியாசனம்வைத்த தாய்.

(சிலேடைகள்)

ஆமணக்கு யானைக்கும்.

முத்திருக்குங்கொம்பசைக்கு மூரித்தண்டேந்திவரும்
கொத்திருக்குநேரே குலைசாய்க்கும்எத்திசைக்கும்
தேமணக்குஞ்சோலைத் திருமலைராயன்வரையில்
ஆமணக்குமால்யானை யாம்.

வைக்கோலுக்கும் யானைக்கும்.

வாரிக்களத்தடிக்கும் வந்துபின்புகோட்டைபுகும்
போரிற்சிறந்து பொலிவாகும்-சீருற்ற
செக்கோலமேனியனைத் திருமலைராயன்வரையில்
கைக்கோலுமால்யானை யாம்.

பாம்புக்கும்-வாழைப்பழத்துக்கும்.

நஞ்சிருக்குந்தோலுரிக்கு நாதர்முடிமேலிருக்கும்
வெஞ்சினத்திற்பட்டால் மீளாது-விஞ்சுமலர்த்

தேம்பாயுஞ்சோலைத் திருமலைராயன்வரையில்
பாம்பாகும்வாழைப் பழம்.

பாம்புக்கும் எள்ளுக்கும்.

ஆடிக்குடத்தடையு மாடும்போதேயிரையும்
மூடித்திருக்கின் முகங்காட்டும்-ஓடிமண்டை
பற்றின்பரபரெனும் பாரிற்பிண்ணாக்குமுண்டாம்
உற்றிடும்பாம்பெள்ளெனவே யோது.

பிண்ணாக்கு பிளவுள்ளநாக்கு

பாம்புக்கும்-எலுமிச்சம்பழத்துக்கும்.

பெரியவிடயேசேரும் பித்தர்முடியேறும்
அரியுண்ணுமுப்புமே லாடும்-எரிகுணமாம்
தேம்பொழியுஞ்சோலைத் திருமலைராயன்வரையில்
பாம்புமெலுமிச்சம் பழம்.

(அரு-காற்று-அரிபடர்.)

முகுந்தனுக்கும் முறத்துக்கும்

வல்லரியாயுற்றிடலான் மாதர்கையிற்பற்றிடலான்
சொல்லரியமாப்புடைக்கத் தோன்றுதலால்-வல்லோ
அகங்கனிலேவாழ்தலா லன்றுவுலகளந்த
முகுந்தனுமேயாகும் முறம்.

சந்திரனுக்கும்-மாலைக்கும்.

நிலவாய்விலங்குதலா னீள்வான்படிந்து
சிலபோதுலாவுதலாற் சென்று-தலைமேல்
உதித்துவரலா லுயர்மாமலையை
மதிக்குநிகராக வழுத்து.

நாய்க்குந் தேங்காய்க்கும்.

ஓடுமிருக்குமத னுள்வாய்வெளுத்திருக்கும்
நாடுங்குலைதனக்கு நாணாது-சேடியே
தீருகானதில்லாத திருமலைராயன்வரையிற்
தேங்காயுநாயுமெனச் செப்பு.

மீனுக்கும் பேனுக்கும்.

மன்னீரிலேபிறக்கு மாற்றலையிலேமேயும்
பின்னீச்சிற்குத்தும் பெருமையால்-சொன்னேன்கேள்
தேனுந்துசோலைத் திருமலைராயன்வரையில்
மீனும்பேனுஞ்சரி-யாமே.

### பனைமரத்துக்கும்-வேசைக்கும்.

கட்டித்தழுவுதலாற் காய்சேரவேறுதலால்
எட்டிப்பன்னாடை யிழுத்தலால்-முட்டப்போய்
ஆசைவாய்க்கள்ளை யருந்துதலாலப்பனையும்
வேசையெனலாமே விரைந்து. ௧௩

### வெற்றிலைக்கும்-வேசைக்கும்.

கொள்ளுகையானீரிற் குளிக்கையான்மேலேறிக்
கிள்ளரையாற்கட்டிக் கிடக்கையால்-தெள்ளுபுகழ்ச்
செற்றலரைவென்ற திருமலைராயன்வரையில்
வெற்றிலையும்வேசை யாமே. ௧௪

### கண்ணாடிக்கும்-அரசனுக்கும்.

யாவருக்கும்ரஞ்சனைசெய் தியாவருக்குமவ்வவராய்ப்
யாவனையாய்த்தீதகலப் பார்த்தலால்மேவும்
எதிரியைத்தன்னுள்ளாக்கி யேற்றரசத்தால்
சதிருறலாலாடியரசாம். ௧௫

### கூத்தியாருக்கும்-குரங்குக்கும்.

ஓட்டங்கடியதா னுள்ளவரைமேவுதலால்
சேட்டையெவரிடத்துஞ் செய்தலால்-நாட்டமுடன்
காத்திரத்திற்குட்டியுறக் கட்டுதலாற்றெட்டுதலாச்
கூத்தியார்க்குநேராங் குரங்கு. ௧௬

(ஓட்டம்-உதடு)

### குதிரைக்கும்-காவிரியாற்றுக்கும்.

ஓடுஞ்சுழிசுத்த முண்டாகுந்துன்னலரைச்
சாடும்பரிவாய்த் தலைசாய்க்கும்-நாடறியத்
தேடுபுகழான திருமலைராயன்வரையில்
ஆடுபரிகாவிரியாமே. ௧௭

(துன்னலர்பகைவர்-பலர்.)

### கீரைப்பாத்திக்கும்குதிரைக்கும்.

கட்டியடிக்கையாற் கான்மாறிப்பாய்கையால்
வெட்டிமறிக்கின்ற மேன்மையால்-முட்டப்போய்
மாறத்திரும்புகையால் வண்கீரைப்பாத்தியுடன்
ஏறப்பரியாகுமே. ௧௮

### கதவுக்கும் - ஆட்டுக்கும்.

செய்யுட்கிடைமறிக்குஞ் சேர்பலகையிட்டுமுட்டும்
ஐயமறமேற்றாளடர்க்குமே - துய்யநிலை

தேடும்புகழ்சேர் திருமலைராயன்வரையில்
ஆடுங்கதவு நிகராம். கஎ

குதிரைக்கும்-ஆட்டுக்கும்.

கொம்பிலையேதீனிதின்னுங் கொண்டதன்மேல்வெட்டுதலால்
அம்புவியினன்னடைய தாதலால்-உம்பர்களும்
தேடுநற்சோலைத் திருமலைராயன்வரையில்
ஆடுங்குதிரையு நேராம். கஅ

துப்பாக்கிக்கும்-ஓலைச்சுருளுக்கும்.

ஆணிவரையுறலா லானகுறிப்பேதரலால்
தோணக்கருமருந்தைத் தோய்ந்திடலால்-நீணிலத்தில்
செப்பார்க்குதவாத் திருமலைராயன்வரையில்
துப்பாக்கியோலைச் சுருள். கக

வானவில்லுக்கும்-விஷ்ணுவுக்கும்-வெற்றிலைக்கும்.

நீரிலுளவா னிறம்பச்சையாற்றிருவால்
பாரிற்பகைதீர்க்கும் பான்மையால்-சாருமனுப்
பலவினையைமாற்றுதலாற் பாரீர்பெருவான
வில்விண்டுநேர்வெற்றிலை. உய

(பல்வினை-பல்நோய்-தந்தரோகம்.)

பூசனிக்காய்க்கும் பரமசிவனுக்கும்.

அடிநந்திசேர்தலா லாகம்வெளுத்துக்
கொடியுமொருபக்கத்திற் கொண்டு-வடிவுடைய
மாசுணத்தைப்பூண்டு வளைத்தழும்புபெற்றதனால்
பூசனிக்காயீசனெனப் போற்று. உக

(நந்தி காப்பு.)

ஓடத்துக்கும்-நிதம்பத்துக்கும்.

பலகையிடுமுள்ளே பருமாணிகைக்கும்
சலமிறைக்குமாளேறித் தள்ளும்-உலகறிய
ஓடமுமொன்றே யுலகாளும்பெண்டீர்
மாடமுமொன்றேற்ற மயிர். உஉ

கரண்டகத்துக்கும்-பெண்குறிக்கும்.

இட்டிட்டுவாங்குதலா லின்பவெள்ளைதோன்றுதலால்
மட்டிட்டுமூடி மறக்கையால்-முட்டத்
தெருண்டோர்கள்போற்றுந் திருமலைராயன்சீர்க்
கரண்டகமும்பெண்குறியுங் காண். உங

அரகாதிருச்சிற் றம்பலவாணனவர்
தரரூபமகேசசிதம்-பரதே
வசிதம்பரதே வசிதம்பரதே
வசிதம்பரதே வனே. உக

இந்தோ திலகநுதல் ராமாராமாவனசக்
கொந்தோகளபமுலை கோவிந்தா-சந்ததமும்
வேலோவிணைவிழிகள் வேங்கடவாநல்லவயி
ருலோகாணாராயணா. உரு

ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறு வேழெட்டு
ஒன்பது பத்துப் பதினொன்று பன்னி
ரண்டு பதிமூன்று பதினான்கு பதினைந்துபதி
னாறு பதினேழ் பதினெட்டு உசா

ஞ-டு-வரப் பாடியது.

ஓ, கா, மா, வீ, தோ, வுரைப்பேன், டு, டு, டு, டு, டு,
நாகார்குடந்தை நகர்க்கதிபர்-வாகாய்
எடுப்பார்நடமிடுவ ரேறுவரன்பர்க்குக்
கொடுப்பரணிவர் குழைக்கு. உஎ

எடுப்பர்-ஓடு, நடனமிடுவார்-காடு, ஏறுவர்-மாடு, அன்பர்க்குக்கொ டுப்பார்-வீடு, குழைக்கணிவர்-தோடு.

குடத்திலேகங்கையடங்குமெனப் பாடியது.

விண்ணுக்கடங்காமல் வெற்புக்கடங்காமல்
மண்ணுக்கடங்காமல் வந்தாலும்-பெண்ணை
இடத்திலேவைத்த விறைவர்சடாமு
குடத்திலேகங்கையடங்கும். உஅ

குடத்திலேகங்கையடங்கும்.

பச்சைவடம்-யாகுசேலை-சோமனென்று பாடியது.

மாயன்றுயின்றதுவு மாமலராள்சொல்லதுவும்
ஏயகுருந்திற்கொண் டேறியதுந்-தூய
இடப்பாகன்சென்னியின்மே லேறியதும்பச்சை
வடப்பாகுசேலை சோமன். உகூ

மாயன்றுயின்றது-பச்சைவடம், மாமலராள்சொல்-பாகு, குருந்தி ற்கொண்டேறியதுசேலை, பரமசிவன்சிரசின்மேலேறியதுசோமன், ப ச்சைவளம்-ஆலிலை.

கின்னரிவாசிக்குங் கிளியெனப்பாடியது.

ஆடல்புரிந்தானென்று மந்நாளிலேமூவர்
பாடலுந்தானென்றும் பான்மையினல்-கூடலிலே
கன்னறிவாசிக்கு நடைப்பயிற்றினனென்றும்
கின்னரிவாசிக்குங் கிளி.

பொன்னுவரையிலே காய்பூவென்றுபாடியது.

உடுத்ததுவும்மெய்த்ததுவு மும்பர்கோன்றன்னல்
எடுத்ததுவும்பள்ளிக் கிரையப்-படுத்ததுவும்
அந்நாளெறிந்ததுவு மன்பினிரந்ததுவும்
பொன்னுவரை யிலே காய் பூ. கக

தேய்ந்தான்மெய்த்தான் குடையாப் தூக்கினன்மேன்மேலாச்
சாய்ந்தாளெறிந்தான்பின் சாப்பிட்டால்-ஆய்ந்துசொலும்
மன்னுவரத்தில்வரு மால்சாமிநாதாகேள்
பொன்னுவரை யிலே காய்பூ. கஉ

செங்கழுநீர்க்கிழங்கென்று பாடியது.

வாதமணரேறியது மாயன்றுயின்றதுவும்
ஆதிதடுத்தாட்கொண்ட வவ்வுருவம்-சீதரனர்
தாள்கொண்டளந்ததுவுந் தண்கச்சிக்காவலா
கேள்செங்கழுநீர்க் கிழங்கு. கங

அமணரேறியது - செங்கழு, மாயன்றுயின்றது-நீர், ஆதிதடுத்தாண்டவுரு-கிழம், தாள்கொண்டளந்தது-கு.

(கு-பூமி.)

நாநீநூநேயென்று பாடியது.

அரையின்முடியி லணிமார்பில்நெஞ்சில்
தெரிவையிடத்தமர்ந்தான் சேவை-புறையறவே
மானுர்விழியீர், ம, ல, ர, ண, வொற்றிற்கும்
ஆனலா, நா, நீ, நூ, நே. கச

நேம்-நெஞ்சில், நூல்-மார்பில், நீர்-முடியில், நாண்-அரையில், நே-அன்பு நேமென மருவியது.

ஈயேற மலேகுலுங்கபாடியது.

வாரணங்களெட்டு மகமேருவுங்கடலும்
தாரணியெல்லாஞ் சலித்தனவாய்-நாரணனைப்
பண்பாவிடைச்சி பெருமத்தினலடித்த
புண்வாயிலீமொய்த்தபோது.

கடுங்காற்றுமழைகாட்டும் கடுநட்புப்பகைகாட்டுமெனப் பாடியது.

நீரோபிறவா நெறிகாட்டியாரெமக்கு
நீரோசமுசை நிலையிட்டீர்-நீரேயிவ்
விங்களமேன் செய்தீர் விடுங்கடுங்காற்றும்மழைகாட்
டுங்கடுநட்புப்பகை காட்டும். கசு

விநாயகர்-முருகர்-பரமசிவனுக்குச் சிலேடை.

சென்னிமுகமாறுளதாற் சேர்கரமுன்னாலுமையால்
இன்னிலத்திற்கேடென் றிருக்கையால்-மன்னுகுளக்
கண்ணாறுதலானுங் கணபதியுஞ்செவ்வேளும்
எண்ணரனுநேராவரே. கஎ

(நாலுகை-தொங்குங்கை! குளம்-வெல்லம்-நெற்றி.)

மும்மூர்த்திகளின் உணவுமுதலியன.

சிறுவனணிபயறு செங்நெற்கடுகு
மறுதிகிரிதண்டு மணுநூற்-பொறியரவம்
வெற்றேறுபுள்ளன்னம் வேதனரன்மாலுக்குக்
கற்றாழம்பூவே கறி. கஅ

(கல்-மலை, தாழம்-ஆழமானநீர்.)

இராசியை அடைசொல்லில்லாமற்பாடியது.

பகருங்கான்மேட மிடபம்மிதுனங்கர்க்க
டகஞ்சிங்கங்கன்னிதுலாம்-விருச்சிகந்த
நுசுமகரங்கும்ப மீனம்பன்னிரண்டும்
வசையறுமிராசி வளம். கசு

தை-மாசி-பங்குனி மாதமென்று பாடியது.

பாணர்க்குச்சொல்லுவதும் பைம்புனலைமூடுவதும்
தாணுவுரித்ததுவுஞ் சக்கரத்தோன்-ஊணதுவும்
எம்மானையேத்துவது மீசனிடத்துஞ்சிரத்தும்
தைமாசி பங்குனி மாதம். உய

பாணர்க்குச்சொல்லுவதுதை. பைம்புனலைமூடுவதும்மாசி, தாணு வுரித்ததுஇபம். சக்கரத்தோனூண்கு, எம்மானையேத்துவதுஉனிசச னிடத்து மாது, சிரகத்து அம், உன்னி உனியென்றாயிற்று.

ஞானசபைகனகசபை சிற்றம்பலம்பே
ரானந்தக்கூடந் திருமூலட்-டானம்பே
ரம்பலம்பஞ்சாவரண நாற்கோபுரம்பொற்
கம்பமண்டபஞ்சிவ கங்கை. உக

சங்குதீர்த்தந்திருச் சாளரவாயில்வீர
சிங்காசனத்திருவுந்திக் காப்பு-பங்குனிமா
தத்திருநாடீர்த்தந் திருவிணதன்கோயில்
உத்தரபாகந்திருவா ரூர். சஉ

அப்பாகுமரகோட்டக் கிரைசெவிலிமேட்
டுப்பாகற்காய்பருத்திக் குழிநீர்-செப்புவா
சற்காற்றுக்கம்பத் தடியிற்றவங்கருமா
றிப்பாய்ச்சல்யார்க்கு மினிது. சங

பாதிவெண்பாவில் மாலவதாரஞ்சொன்னது.

மெச்சுபுகழ்வேங்கடவா வெண்பாவிற்பாதியிலென்
இச்சையிலுன்சென்ம மெடுக்கவா-மச்சாகூர்
மாகோலாசிங்காவா மாராமாரா
மாகோர்பாலாமாவா வாம். சச

திருக்குடந்தையாதி கும்பேசர்செந்தா
மரைக்குளங்கங்கை மகங்கா விரிக்கரையின்
ஓரங்கீழ்க்கோட்டங்கா ரோணமங்கைநாதியார்
சாரங்கபாணி தலம். சரு

மன்னென்றெடுத்து மனுக்கென்றுமுடித்தனு.

மன்னுதிருவண்ணா மலைச்சம்பந்தாண்டார்க்குப்
பன்னுந்தலைச்சவரம் பண்ணுவதேன்-மின்னின்
இளைத்தவிடமாத ரிவன்குடுமிபற்றி
வளைத்திழுத்துக்குட்டா மனுக்கு. சசு

சோகாமா ஏவாதாவென்றுபாடியது.

சேர், கா, மா, ஏ, வா, தா, சொல்லின்மனைக்கூட்டியுமை
பாகார்ந்ததில்லைப் பரமேசர்-வாகாய்த்
தரித்தாரெரித்தார் தரித்தாருதைத்தார்
உரித்தார்கணைபடைத்தா ரூர்க்கு. சஎ

சோமன் காமன் மாமன் ஏமன் வாமன் தாமன் மாயன் கொட்டைப்பாக்கென்றெடுத்துக் களிப்பாக்கென்று முடித்தது.

கொட்டைப்பாக்குக்கொருகண் கூடையைப்பார்க்கும்மடியில்
பிட்டைப்பாக்கும்பாகம் பெண்பார்க்கும் முட்டநெஞ்சே
ஆரணனுநாரணனு மாதிமறையுந்தேடும்
காரணனைக்கொண்டுகளிப் பாக்கு. சஅ

பார்க்குமென்பது-பாக்குமென்மருவியது.

செருப்பென்றெடுத்து விளக்குமாறென்றுமுடித்தது.

செருப்புக்குவீரர்களைச் சென்றுழக்கும்வேலன்
பொருப்புக்குநாயகனைப் புல்ல-மருப்புக்குத்
தண்டேன்பொழிந்ததிருத் தாமறைமேல்வீற்றிருக்கும்
வண்டேவிளக்குமாறே. ௪௯

(விளக்குமாறு விளக்கும்வழி.)

கரியென்றெடுத்து உமியென்றுமுடித்தது.

கரியதனைவேயுரித்த கையாவனையேத்த
தரியகுற்றமெட்டா தவையா-பரிவாக
அண்டரெல்லாங்கூடி யமுதங்கடைந்தபொழு
துண்டநஞ்சையிங்கே யுமி. ௫௦
கரிக்காய்பொரித்தாள் கன்னிக்காயைத்தீர்த்தாள்
பரிக்காயைப்பச்சடியாய்ப் பண்ணாள்-உருக்கமுள்ள
அப்பக்காய்நெய்துவட்ட லாக்கினளத்தைமகள்
உப்புக்காண்சீசி யுமி. ௫௧
கூதிக்கெட்டேழுங் குலைந்துநடுநடுங்கிப்
பூதிக்கொப்பாகவென்றே போய்விடுமே-ஆதி
நாக்காட்டகவரியை நற்சாபமாக்கிச்
சுருக்காவிடினஞ் சுணி. ௫௨

சீத்துப்பூத்தென்று பாடியது.

அப்பூருஞ்செஞ்சடைமே லம்புலியைப்பார்த்துப்பார்த்
தெப்போதுஞ்சீத்துப்பூத தென்னவே-முப்போதும்
வாலங்காட்டாநிற்கும் வாயங்காக்காநிற்கும்
ஆலங்காட்டான் பூணரா. ௫௩

பாற்கடலிற்செந்தாளெழும்பப்பாடியது.

சுத்தபாற்கடலி னடுவினிற்றாளி தோன்றியவதிசயமதுகேள்
மத்தகக்கரியை யுரித்தவன்மீது மதன்பொருதருந்திடுமாற்ற
வித்தகக்கமலைசெவியுறக்கேட்டாள் விழுந்துநொந்தயர்ந்தழுதேங்கிக்
கைத்தலமலரான்மார்புரப்புடைத்தாளெழுந்ததுகலவையின்செந்தாள்
தடக்கடலிற்பள்ளிகொள்வோ மதனைநற்சங்கரனார்
அடற்புலிக்குட்டிக் களித்தானரா மதுகேட்டுநெஞ்சில்
நடுக்கம்வந்துற்றது கைகாலெல்லாநளினத்தியென்னை
அடிக்கடிபாயைச் சுருட்டியேகடியம்பலத்தே. ௫௪

செற்றலரைவென்ற திருமலேராயன்கரத்தில்
வெற்றிபுரியும்வாளே வீரவாள்-மற்றயவாள்
போவாள்வருவாள் புகுவாள்புறப்படுவாள்
ஆவாளிவளாவா ளரம். ருசு

தெருமுட்டப்பானே சிதறிவளர்பூகத்
தருமுட்டச்செவ்வானே தாவும்-திருமுட்டத்
தூரிலேகண்ட ஞெருவிமைபன்றிக்கு
மாறிலேகொம்பான வாறு. ருஎ

நாலாநாலாயிரநா னூற்றுநாற்பத்தொன்பான்
பாலாநானூற்றுநாற் பத்தொன்பான்-மேலானூற்
பத்தொன்பான்சங்கமறு பத்துநாலாடலுக்கும்
கர்த்தன்மதுரையிற்சொக் கன். ருஅ

இம்மென்னுமுன்னே யெழுநூறுமெண்ணூறும்
அம்மென்றாலாயிரம்பாட் டாகாதோ-சும்மா
இருந்தாலிருந்தே னெழுந்தேனேயாமாயின்
பெருங்காளமேகம் பிளாய். ருகூ

குரங்கனலில்வீழ்ந்து வெறிகொண்டுதேள்கொட்டக்
கரஞ்செறியப்பாம்பலவன் கவ்வ-விரைந்துபோய்
பற்றவேகள்ளுண்டு பச்சைமிளகைக்கடித்தால்
எத்தனைபார்சேட்டைக் கிடம். கூய

நீறுவாய்வெற்றி நெருப்பாவாயங்கமிரு
கூறுவாய்மேனி கொளுந்தாவாய்-வாறுத
நட்டமலாய்சோறு நஞ்சாவாய்நாயேனை
இட்டமாய்காப்பா யினி. கூக

சுருக்கவிழ்ந்தமுன்குடுமிச் சோழியாசோற்றுப்
பொருக்குலர்ந்தவாயா புலையா-திருக்குடந்தைக்
கோட்டானேநாயே குரங்கேயுனையொருத்தி
போட்டாளேவேலையற்றுப் போய். கூஉ

பெருமாளுநல்ல பெருமாளவர்தந்
திருநாளுநல்ல திருநாள்-பெருமாள்
இருந்திடத்திற்சும்மா யிராமையினாலேயோ
பருந்தெடுத்துப்போகிறதே பார். கூங

வாலெங்கேநீண்ட வயிறெங்கேமுன்னிரண்டு
காலெங்கேயுட்குழிந்த கண்ணெங்கே-சாலப்
புவிராயர்போற்றும் புலவீர்காணீவிர்
கவிராயரென்றிருந்தக் கால். சுச

நச்சரவம்பூண்ட தில்லை நாதரேதேவரீர்
பிச்சையெடுத்துண்ணப் புறப்பட்டும்-உச்சிதமாங்
காளமேன்குஞ்சரமேன் காற்கடல்போற்றுன்முழங்கும்
மேளமேன்ராசாங்க மேன். சுரு

கத்துகடல்சூழ்நாகைக் காத்தான்றன்சத்திரத்தில்
அத்தமிக்கும்போதி லரிசிவரும்-குத்தி
உலையிலிடவூரடங்கு மோரகப்பையன்னம்
இலையிலிடவெள்ளி யெழும். சுசு

இஃது-துதியும்-வசையும்

மாயனுர்போற்று மதுராபுரிச்சொக்க
நாயனுர்பித்தேரி னுரென்றே-நேயமாங்
கன்னன்மொழியங்கயற்கட் காரிகையாளேயோ
அன்னமிரங்காமலிருந் தாள். சுஎ

எட்டொருமாவெண்காணி மீதேயிருந்தகலை
பட்டொருமாநான்மாவிற் பாய்ந்ததே-சிட்டர்தொழுந்
தேவாதிதேவன் றிருவொற்றியூருடையான்
மாவேறிவீதிவரக் கண்டு. சுஅ

முப்பான்மழுவும் முராரிதிருச்சக்கரமும்
பார்ப்பான்கதையும் பரிபோச்சே-மாப்பார்
வலிமிகுத்தமும்மதத்து வாரணத்தையையோ
எலியிழுத்துப்போகின்ற தென். சுகூ

முக்காலுக்கேகாமுன் முன்னரையில்வீழாமுன்
அக்காலரைக்கால்கண்டஞ்சாமுன்-விக்கி
இருமாமுன்மாகாணிக் கேகாமுன்கச்சி
ஒருமாவின்கீழரையின் றேது. எ0

வண்ணங்கரியனென்று வாய்வேதநாறியென்றுங்
கண்ணனிவனென்றுங் கருதாமன்-மண்ணை
அடிப்பதுமத்தாலே யளந்தானையாச்சி
அடிப்பதுமத்தாலே யாழ. எக

காலனையுங்காமனையுங் காட்டுசிறுத்தொண்டர்தரு
பாலனையுங்கொன்ற பழிபோமோ-சீலமுடை
நாட்டிலேவீற்றிருந்த நாதரேநீர்திருச்செங்
காட்டிலேவீற்றிருந்தக் கால். ௭௨

பூனைக்கியாறுகால் புள்ளினத்துக்கொன்பதுகால்
ஆனைக்குக்கால்பதினை ந்தானதே—மானேகேள்
முண்டகத்தின்மீது முழுநீலம்பூத்ததுண்டு
கண்டதுண்டுகேட்டதில்லை காண். ௭௩

அப்பனிரந்துண்ணி ஆத்தாள்மலைநீலி
ஒப்பறியமாமனுறி திருடி-சப்பைக்கால்
அண்ணன்பெருவயிற ஞறுமுகத்தானுக்கிங்
கெண்ணும்பெருமை யிவை. ௭௪

கூத்தாள்விழிகணெடுங் கூர்வேலாங்கூத்தாள்தன்
மூத்தாள்விழிகண் முழுநீலம்-மூத்தாள்தன்
ஆத்தாள்விழிக ளரவிந்தமாத்தாள்தன்
ஆத்தாள்விழிகளிரண்டாம். ௭௫

என்னைக்கொடுத்தா யிரக்குமெனக்குண்டோ
வன்னக்கமலமுக வல்லியே-துன்னுமதக்
காட்டானைக்கோட்டுமுலைக் காரிகையேநீயந்த
கோட்டானைத்தானே கொடு. ௭௬

முன்னேகடிவாள மூன்றுபேர்தொட்டிழுக்கப்
பின்னேயிருந்திரண்டு பேர்தள்ள-எந்நேரம்
வேதம்போல்வாயான் விகடராமன்குதிரை
மாதம்போங்காத வழி. ௭௭

ஆறும்பதினறு ம்ாமூரில்வேங்கட்டன்
ஏறும்பரிமாவே யேற்றமா-வேறுமா
எந்தமாசும்மா வெழுமாகனிகிளற
வந்தமாசந்தமா மா. ௭௮

ஆடாரோபின்னையவ ரன்பரெல்லாம்பார்த்திருக்க
நீடரஞர்வீதியிலே நின்றுதான்-தோடாரும்
மெய்க்கோபரிமளங்கள் வீசுந்தியாகேசர்
கைக்கேபணமிருந்தக் கால். ௭௯

வள்ளலெனும்பெரிய மாயூரநாதருக்கு
வெள்ளிமலைபொன்மலையு மேயிருக்கத்-தெள்ளுமையாள்
அஞ்சலஞ்சலென்றுதின மண்டையிலேதானிருக்க
நஞ்சுதனையேனருந்தினர். அ௰

நல்லதொருபுதுமை நாட்டிற்கண்டேனதனைச்
சொல்லவாசொல்லவா சொல்லவா-தொல்லை
மதுரைவிக்கினேச்சுரனை மாதுமையாள்பெற்றாள்
குதிரைவிற்கவந்தவனைக் கூடி. அக

வெள்ளையானையேறும் விமலரடிபணியும்
பிள்ளையார்வாழும் பெருந்தெருவில்-வள்ளை
இலைக்கருவிற்பான்மருங்கு விற்றுவிடுமென்று
முலைக்கருவிப்பாரிலையே முன். அஉ

சட்டியிலேபாதியந்தச் சட்டிவத்திலேபாதி
இட்டகலத்திற்பாதி யிட்டிருக்கத்-திட்டமுடன்
ஆடிவந்தசோணேச ரன்றழைத்தபோதுபிள்ளை
ஓடிவந்ததெவ்வா றுரை. அ௩

நேற்றிராவந்தொருவ னித்திரையிற்கைபிடித்தான்
வேற்றானென்று விடாயென்றேன் - ஆற்றியே
கஞ்சிக்குடியென்றான் களித்தின்றுபோவென்றேன்
வஞ்சியரேசென்றான் மறைந்து. அ௪

கண்டீரோபெண்காள் கடம்பவனத்தீசனார்
பெண்டீர்தமைச்சுமந்த பித்தனார் - எண்டிசைக்கும்
மிக்கானதங்கைக்கு மேலேநெருப்பையிட்டார்
அக்காளையேறினாராம். அ௫

மாட்டுக்கோன்றங்கை மதுரைவிட்டுத்தில்லைநகர்
ஆட்டுக்கோனுக்குப்பெண்டாயினள்-கேட்டிலையோ
குட்டிமறிக்கவொரு கோட்டானையும்பெற்றாள்
கட்டி மடிச்சிற்றிடைச்சி காண். அ௬

நாட்டுக்குளாட்டுக்கு நாலுகாலாகின்
ஆட்டுக்கிரண்டுகா லானாலும்-நாட்டமுள்ள
சீர்மேவுதில்லைச் சிவனேயிவ்வாட்டைவிட்டுப்
போமோசொல்லாய்ப் புலி. அ௭

தாண்டியொருத்தி தலையின்மேலேறுளா
பூண்டசெருப்பாலொருவன் போடானோ-மீண்டொருவன்
வையானோவின்முறிய மாட்டானோதென்புலியூர்
ஐயாநீயேழையானால். அஅ

கொங்குலவுந்தென்றில்லைக் கோவிந்தகோனிருக்கக்
கங்குல்பகலண்டர்பலர் காத்திருக்கச்-செங்கையிலே
ஓடெடுத்தவம்பலவர் வோங்குதில்லையுட்புகுந்தே
ஆடெடுத்ததெந்தவுபா யம். அகூ

ஆடுந்தியாகரே யாட்டமேன்றானுமக்கு
வீடுஞ்சார மேலிட்டுக்-கூடிச்
செறுக்கிவிளையாடச் சிறுவரிரண்டாச்சே
இறுக்குமூரொற்றி யாச்சே. கூ0

திங்கணுதலார் திருமணம்போலேகிறிப்
பொங்குகடலுப்பைப் புகட்டியே-எங்களிட
ஆச்சாளுக்கூறுநா யாகாமலாருக்காக்
காச்சாய்வடுகமாங் காய். கூக

அம்பேந்துங்கையா னவன்பதியிலம்மாவைக்
கொம்பேந்திதந்தைபணி கொண்டதோ-அன்பா
அரிந்தமகவை யமுதுக்கழைமென்
றிருந்தவன்றன் செங்காட்டிலே. கூஉ

அம்பேந்துகையான் அகத்தியன் கொம்பேந்துதந்தை பரமசி
வன் ஐம்மா-கால்காற்று

முற்றுதகாஞ்சியினு முல்லையினும்பாலையினுங்
கற்றான்பின்சென்ற கருணைமால்-றெற்றான்தன்
ஆலைப்பதித்தா ரளகத்தியாடகனார்
வேலைப்பதித்தார் விழி. கூங

கஞ்சமுகமுங் களிற்றானையின்கொம்பும்
அஞ்சுமுலைநாலுமுலை யானதுவும்-மிஞ்சுபுகழ்
பெற்றான்றன்மாலை பிறர்க்களித்ததுங்கு தலை
கற்றான்பிறந்தபின்பு காண். கூச

தந்தைபிறந்திறவாத் தன்மையினாற்றன்மாமன்
வந்துபிறந்திறக்கும் வன்மையினால்-முந்தொருநாள்

வீணுக்குவேளை யெறித்தான்மகன்மாமன்
காணிக்குவந்திருந்தான் காண், ௯௫

தாதிதூதோதீது தத்தைதூதோதாது
தூதிதூதொத்திதத்தூத்தே-தாதொத்த
துத்திதத்தாதேது தித்தித்தேதொத்தீது
தித்தித்ததோதித் திதி. ௯௬

முன்னான்கிலொன்றுடையான் முன்னான்கிலொன்றெடுத்து
முந்நான்கிலொன்றின்மே மோதினன்-முந்நான்கில்
ஒன்றறிந்தாலாகுமோ ஓஓமடயிலே
அன்றணைந்தான்வாராவிட் டால் ௯௭

ஆனரிலையே யயனுந்திருமாலும்
காணரடிமுடிமுன் காண்பதற்குமேனாள்
இரவுதிருவாரூரி லெந்தைபிரான்சென்ற
பரவைதருவாயிற் படி. ௯௮

சங்கரற்குமாறுதலை சண்முகர்க்குமாறுதலை
ஐங்கரற்குமாறுதலை யானதேசங்கைப்
பிடித்தோர்க்குமாறுதலை பித்தாணின்பாதம்
படித்தோர்க்குமாறுதலை பார். ௯௯

வாதக்காலாம்தமக்கு மைத்துனர்க்குநீரிழிவாம்
போதப்பெறுவயிறும் புத்திரனுக்-கோதக்கேள்
வந்தவினைதீர்க்க வகையறியார்வேளூர்
எந்தவினைதீர்த்தாரிவர் ௱

சீரங்கத்தாருந் திருவானைக்காவாரும்
போரங்கமாகப் பெருவதேன்-ஓரங்கள்
வேண்டாமிதென்ன விபரந்தெரியாதோ
ஆண்டானுந்தாதனு மானல் ௱க

உத்திரத்துக்கோர்நா ளுரோகணிக்குப்பத்தாநாள்
சித்திரைக்குநேரே சிறந்தநாள்-எத்திசையும்
காராரும்பூஞ்சோலைக் கன்னபுரம்வாழ்கவரி
நாராயணன்பிறந்த நாள். ௱உ

சிரித்துப்புரமெரித்தான் சிந்துறத்தைப்பற்றி
உரித்துதிரம்பாயவுடுத்தான்-வருத்தமுடன்

வாருமடியாருடனே வானவருந்தானவரும்,
ஓடுபயந்தீர்த்தநஞ் சுண்ணி. ௬௩

ஆலங்குடியானை யாலாலமுண்டானை
ஆலங்குடியானென் றூர்சொன்னார்-ஆலங்
குடியானேயாயிற் குவலயத்தாரெல்லாம்
மடியாரோமண்மீதி லே. ௬௪

காவலனெங்கள் கனவைப்பாஞ்சோமேசன்
பாவலிகங்கைமணிவாரி-ஆவனவென்
றப்புளங்கைதோய்க்க வதில்வாரியமுத்தைக்
கொப்புளமென்றா றுங்குரங்கு. ௬௫

பொன்னனஞ்சடையருகம் புல்லுக்கும்பூம்புணற்கும்
தன்னெஞ்சுவகையுத்தாவுமே-அன்னங்கள்
செய்க்கமலத்துற்றலவுந். தில்லைநடராசன்
கைக்கமலத்துற்றமான் கன்று ௬௬

ஏய்ந்ததனங்க ளிரண்டுமிருபாகற்கால்
வாய்விடைசெக்குலக்கை மாத்திரமே-தோய்ந்தகுழல்
முக்கலக்சிக்கும்பிக்கு மீதேவியாள்கமலைக்
குக்கலுச்சிக்குங்கலைச் சிக்கு. ௬௭

நஞ்சுகுடிகொண்டகணை நாலுக்தெரிந்துமதன்
இஞ்சிகுடிதன்னிலும்வந் தெய்வானே-விஞ்சு
முலைச்சிகரத்தாலதித்தி முத்தமிட்டுசெற்றே
கலைச்சிகரத்தாலணைத்தக் கால். ௬௮

தீத்தானுங்கண்ணிலே தீத்தானுங்கையிலே
தீத்தானுமுன்றன் சிரிப்பிலே-தீத்தானுன்
மெய்யெலாம்புள்ளிருக்கும் வேளூராவுன்னையிந்தத்
தையலாளெப்படிச் சேர்ந்தாள். ௬௯

வெண்ணெய்திருடியுண்ட வேணியரனாரிருக்கக்
கண்ணன்மேல்வைத்த களவேது-பெண்ணைத்
தலையிற்சுமந்தான்மால் சர்ப்பத்திலேறி
அலையிற்றுயின்று னரன். ௭०

எட்டிகுளத்திலிருந் துசரக்குவிற்கும்
குட்டிசெட்டிதன்மகனைக் கொண்டுபோய்-நெட்டுதற்கோ

ஆயிரம்யானை யெழுநூறுகூன்பகடு
பாபம்பகடெண்பத் தைந்து. ௧௧௧

தண்டாங்கூர்மாசனங்காள் சற்குணநீரென்றிருந்தேன்
பண்டங்குறையவிற்ற பாவிகள்பெண்டுகளைத்
தேடியுண்ணவிட்டீர் தெருக்கடெருக்கடோறும்
ஆடிமுதலானி வரைக்கும். ௧௧௨

நாராயணனைநா ராயணனென்றேகம்பன்
ஓராமற்சொன்ன வுறுதியால்-நேராக
வாரென்றால்வந்தென்பேன் வாளென்றால்வள்ளென்பேன்
நாரென்றானர்ரென்பேன் நான். ௧௧௩

வாழ்த்ததிருநாகை வாகானதேவடியாள்
பாழ்த்தகுரலெடுத்துப் பாடினாள்-நேற்றுக்
கழுதைகட்டவண்ணான் கண்டேன்கண்டேனென்று
பழுதையடித்தோடிவந்தான் பார். ௧௧௪

காலையிலும்வேலை கடையக்கயிராகும்
மாலையிலும்பூமுடித்து வாழுமே-சோலைசெறி
செய்யிலாரம்பயிலுஞ் செந்துருத்திமாநகர்வாழ்
பொய்யிலாமெய்யரிடும் பூண். ௧௧௫

மண்டலத்திலுளரும் வயித்தியராய்த்தாமிருந்தும்
கண்டவினைதீர்க்கின்றார் கண்டீரோதொண்டர்
விருந்தைப்பார்த்துண்டருளும் வேளூரென்னுந்தர்
மருந்தைப்பார்த்தாற்சுத்தமண். ௧௧௬

கூடல்புனைவாயல் குற்றாலமாப்பனூர்
ஏடகநல்வேலி யிராமேசம்-ஆடானை
தென்பரங்குன்றஞ்சுழியில் தென்றிருப்புத்தூர்காசி
வன்கொடுங்குன்றம்பூ வணம். ௧௧௭

பண்புளருங்கோர்பறவை பாவத்திற்கோரிலக்கம்
நண்பிலரைக்கண்டக்கா ணற்காலி-திண்புவியை
ஆள்வார்மதுரை யழகியசொக்கர்க்கரவம்
நீள்வாகனநன்னிலம். ௧௧௮

சதுரங்கர்சங்கத் தழகர்செங்கைச்சங்கை
அதரமிசைவைத்திலரே யாயின்-முதலை

வருங்குளத்தின்மூண்டகக்கை வைப்பானென்றேயென்று
பொருங்களத்தினூற்றுவர்முன் போய். ௧௧௯

கண்டக்காற்கிட்டுங் கயிலாயங்கைக்கொண்டுட்
கொண்டக்கான்மோட்சங் கொடுக்குமே-கொண்டத்தூர்
தண்டைக்காலம்மை சமைத்துவைத்தபூசினிக்காய்
அண்டர்க்காமீசருக்கு மாம். ௧௨௦

போலநிறமாவார்க்குப் பூணுரைமாவாரை
ஏலவகைசெய்தா லியலபாமோ-சாலப்
பழிக்கஞ்சுந்தென்மதுரைப் பாவையிருநான்கு
விழிக்கஞ்சன்சோமனலைவேந்து. ௧௨௧

கண்ணனிடுங்கறியுங் காட்டுசிறுத்தொண்டரன்பிற்
பண்ணுசிறுவன்கறியும் பற்றுதோ-கண்ணோடு
மட்டேறுஞ்சோலை மருந்தீசரேபன்றிக்
குட்டியையேன்றீர்த்தீர் குறித்து. ௧௨௨

மாடுதின்பான்பார்ப்பான் மறையோதுவான்குயவன்
கூடிமிகமண்பிசைவான் கொல்லனே-தேடி
இரும்படிப்பான்செக்கா னெண்ணெய்விற்பான்வண்ணான்
பரும்புடவைதப்பும் பறை. ௧௨௩

ஆயனுக்கண்மூன்று மாதிசிவனுக்கிருகண்
மாயனுக்குச்செங்கையிலே மான்மழுவா-நேயமுடன்
சங்கரற்குச்சங்காழி தான்மாலுக்காலமாம்
மங்கையிடத்தார்க்காகு மண். ௧௨௪

கண்ணபுரங்கோயிற் கதவடைத்துத்தாள்போட்டார்
மண்ணையுண்டார்வெண்ணையுண்ட மாயனார்-என்னும்
இரக்கப்பறையேந்திச் செங்காட்டிலீசர்
இரக்கப்புரப்பட்டா ரென்று. ௧௨௫

கொன்றைமலர்தரித்தான் கோபாலன்கோலெடுத்து
நின்றுகுழலூதினான் னீள்சடையோன்-பொன்றிகழும்
அக்கணிந்தான்மாய னரவணையின்கண்வளர்த்தான்
சிக்கலிலேவாழுஞ் சிவன். ௧௨௬

திருந்தாடரவணியுந் தென்கயிலையீசர்
இருந்தடாதென்செய் திடுவார்-பொருந்த

ஒருகாலேயல்லவே யொண்டொடித்தாவன்
றிருகா லுஞ்சந்துபோனல். கஉஎ

சந்துபோதல் தூதுபோதல் உண்டைவிலகல்.

உள்ளங்கால்வெள்ளெலும்பு தோன்றவொருகோடி
வெள்ளங்காலந்தரித்து விட்டோமே-உள்ளபடி
ஆமூர்முதலி யமரர்கோனிங்கிருக்கப்
பொழூரறியாமற் போய். கஉஅ

கம்மாளனங்கிக் கணக்கனெனவேதுதித்தார்
செம்மான்மதுரைத் திருவரிசை-அம்மாகேள்
வாணியனும்பொன்னேரி வாழும்வெள்ளாழனுமே
சேணியனுமன்றே தெரிந்து. கஉசு

கம்மாளன் கபாலத்தையுடையவன் அங்கிக்கணக்கன்-அழற்க
ண்ணையுடைய நக்கன்செம்மான் சக்கிலிசிவந்தமானையுடையவன் வா
ணியன்-பிரமன்-பொன்னேரி-அழகையுடைய இலக்குமி வெள்ளாழ
ன்-பாற்கடலையுடையான் சேணியன்-இந்திரன்.

பாரளக்குந்தூதுசொல்லும் பையரவின்மேனடிக்கும்
சீரகலிசாபத்தைத் தீர்க்குமே-ஊரருகில்
சண்டைச்சகடுதைக்குந் தையலாய்தார்நீல
கண்டத்தாருரன் கழல். கருய

காலாற்படியளக்குங் கண்ணிழந்துபூசிக்கும்
சேலாங்கமடமாஞ் சிங்கமாம்பாலாகும்
ஆழியப்பிலேதுயிலு மைவர்க்குத்தூதாகும்
வீழியப்பரேறும்விடை. கருக

(கமடம்-ஆமை.)

கடம்பவனசொக்கருக்குக் கண்ணன்றான்வேறோ
இடம்பெரியகண்ணொன்றை யீந்தான்-உடம்புதனிற்
செம்பாதியானான் சுமக்கவெருதானான்
அம்பானான்றேவியுமா னான். கருஉ

கன்னபுரமாலே கடவுளிலுநீயதிகம்
உன்னிலுமேயானதிக மொன்றுகேள்-முன்னமே
உன்பிறப்போபத்தா முயர்சிவனுக்கொன்றுமில்லை
உன்பிறப்பெண்ணத் தொலையாது. கருரு

ஆனைகுதிரைதரு மன்னதனைக்கொன்றகரி
சேனைமன்னரைக்கய்யதுன் றீயவரை-பூனையுடன்

கூட்டியமுதிட்டான் குருக்கள்மாராபதியான்
வீட்டிலுண்டுவந்தேன் விருந்து. கருச

அன்னவயல்சூழ்ந்திருக்கு மாரூரர்நெஞ்சத்தில்
இன்னம்வயிரமிருப்பதா-முன்னமொரு
தொண்டன்மகனைக்கொன் றுஞ் சோழன்மகளைக்கொன்றுஞ்
சண்டன்மகனைக்கொன் றுந் தான். கருரு

வாலிமடிந்ததுவும் வலலரக்கர்பட்டதுவும்
கோலமுடிமன்னர் குறைந்ததுவுஞ்-சால
மதிலுடைய நூற்றொருவர் மாண்டதுவுமையோ
சதிவிரகத்தால்வந்த தாழ்வு. கருசு

கோரிருக்குமூகர் கோள்களவுகற்றவூர்
காளைகளாய்நின்று கதறுமூர்நாளையே
விண்மாரியற்று வெளுத்துமிகக்கறுத்து
மண்மாரிபெய்கவிந்த வான். கருஎ

கம்பத்தானைக்கடையிற் கட்டினன்கால்சாய
அம்பைத்தாவித்தான்காண் ஆனதே-வம்புசெறி
பூவைகாள்கிள்ளைகாள் பூங்குயில்காளன்றில்காள்
பாவையாளாண்டபதி. கருஅ

கம்பத்தான்-இராவணன், கட்டையிற்கட்டினன்-வாலி, அம்பைத்தாவித்தான்-அரிதாள்.

சாரங்கபாணியான் சக்கரத்தார்கஞ்சனைமுன்
ஓரங்கக்கொய்ய வுகிர்வாளர்-பாரெங்கும்
ஏத்திடுமையாக ரினிதாயிவரும்மைக்
காத்திடுவரெப்போதுங் காண். கருகூ

சாரங்கம்-மான், கஞ்சன்-பிரமன், கம்சன் உமைபாகர்சிவன், மைபாகர்-மால்.

கட்டளைக்கலித்துறை.

விண்ணீரும்வற்றிப் புவிநீரும்வற்றி விரும்பியழத்
தண்ணீரும்வற்றி புலவோர்தவிக்கின்ற காலத்திலே
உண்ணீருண்ணீரென் றுபசாரஞ்சொல்லியுபசரித்துத்
தண்ணீருஞ்சோறுந்தருவான் திருப்பனந்தாபட்டனே. கசம

கிள்ளைப்புதுமையொன்றுண் டாள்வாயினின்மேவுதென்னம்
பிள்ளைக்கொருகுலை மூன்றேகுரும்பைப் பிடித்ததிலே

கொள்ளிக்கணன்றிட்டி யாலோர்குரும்பைகுறிந்தமிர்தம்
உள்ளிற்பொதிந்த விரண்டிளநீர்கச்சுறைந்ததுவே. கசஉ

ஆட்டுக்கிசைந்தவ ரம்பலவாணரவர்க்கெதிரே
நீட்டிற்றுமால்வடபாலினிற் காலெனநீநினைவேல்
சூட்டுற்றமுப்புரஞ் செற்றவாதம்மைச் சுமந்தலுத்த
மாட்டுக்கென்னைவிடங் கானீட்டநல்லசொல்லவழக்கில்லையே

பாரூரறியப் பலிக்குழன்றீர்பற்றிப் பார்க்குமிடத்
தோரூருமில்லை யிருக்கவென்றாலுமுள் ளூருமொற்றி
பேரூரறியத் தியாகரென்றேபெரும் பேரும்பொற்றீர்
ஆரூரிலேயிருப்பீ ரினிப்போய்விடு மம்பலத்தே. கசங

வாணியன்பாட வண்ணான்சுமக்க வடுகன்செட்டி
சேணியன்போற்றக் கடற்பள்ளிமுன்றொழத் தீங்கரும்பைக்
கோணியன்வாழ்த்தக் கருமான்றுகிறனைக் கொண்டணிந்த
வேணியனானவன் றட்டான்புறப்பட்ட வேடிக்கையே. கசச

வாணியன்-பிரமன், வண்ணான்-நந்தி, வடுகன்-வைரவன், செட்டி-முருகன், சேணியன்-இந்திரன், கடற்பள்ளி-மாயன், கரும்பைக் கோணியன்-மதன், கருமான்றுகில் யானைத்தோல், தட்டான்-காண்டற்கரியபரமசிவன்.

கழியும்பிழைபொருட் டள்ளிநன் னூலங் கடலிலுண்டு
வழியும்பொதிய வரையினிற்கால்கொண்டு வன்கவிதை
மொழியும்புலவர் மனத்தேடியிடித்து முழங்கிமின்னிப்
பொழியும்படிக்குக் கவிகாளமேகம் புறப்பட்டதே. கசரு

வில்லாலடிக்கச்செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லாலெறிய பிறம்பாலடிக்க விக்காசினியில்
அல்லாற்பொழிற்றில்லை யம்பலவாணற்கோ ரன்னைபிதா
இல்லாததாழ்வல்லவோ விங்கனேயெளிதானதுவே. கசசா

பாங்குபெருந்திரு வைக்நூற்றிரட்டிய பணவிடையில்
தூங்குமதிலொருமாவேற்றமுண்டு சுரர்முனிவர்
ஆங்கவர்செப்பிற் கடங்காதுலக மனைத்தும்பெறும்
ஓங்குமரங்கத் திருப்பெட்டகத்து ளொருமணியே. கசஎ

சத்தாதியைந்தையுந் தாங்காததெய்வந் தனிமறையும்
கத்தாவெனுந்தெய்வ மம்பலத்தேகண்டுகண்களிரு

பத்தானவென்மைந்தன்பொய்த்தேவியைக்கொல்லப்பார்த்தழு
த-பித்தானவன் றனையோ தெய்வமாகப் பிதற்றுவதே. கசஅ

திரண்டுடையோனு மெதிர்சென்றகாலெதிர்ந் தார்தமைக்கண்
திரண்டிமையோர்தொழுந் தென்னரங்கேசர்முன்செங்கைகளா
டருண்டெழுமைவர்க்குத் தேரூர்பவன்கொலணைவருண்டு
புரண்டொருபுற்றைக் கடங்தொருபுற்றிற்புகுந்ததுவே. கசகூ

மாக்கைக்கிறங்குங் குருகும்வளர்சக்ர வாகப்புள்ளுந்
தாக்கச்சரபங் குழைந்ததெவ்வாறு சகதலத்தை
ஆக்கிப்பெருக்கித் திருவறச்சாலையி லன்னமிட்டுக்
காக்கைக்கொருகொக்கின் கீழேயிருக்குங் கருங்குயிலே. கரு௦

தென்னைக்குஞ்சோலைக் கமலைப்பிரான்செஞ்சடாடவிதான்
என்னைக்குமென்னிலெரியொக்குமந்தவெரியிலிட்ட [செய்
பொன்னைக்குங்கொன்றை கரியொக்கும்வண்டுநற்பொன்பணி
மின்னைக்குங்கங்கைகிழக் கொல்லனைக்கு மவ்வெண்பிறையே

கரியொன்றுபொன்மிகும் பையேறக்கற்றவர் சூழ்ந்துதொழ
எரியொன்றுசெல்வன் றுலாத்தினிலேற விருண்டமஞ்சு
சொரிகின்றகாகமின் சோற்றினிலேறித்தொடர்ந்துவர
நரியொன்றுசொந்தக் கனலேரிவந்ததுநங்களத்தே. கருஉ

கரிகணபதி (பொன்மைசாளி) பொன்மிகும்பை-பெருச்சாளிஎ
ரியென்றுசெல்வன், முருகன்-துலா. (துலாஸ்நானகட்டம் மாயூரமா
தலால்) மாயூரமென்பது-மடல். நாகமின்-உமை சோறு-அன்னப்ப
ட்சி-நரி, சம்பு-சொந்தக்கனல்-நந்தி.

இருந்தாரைக்கேள்வனை யோங்குமராவை யெழுபுனலைத்
திருந்தாரைவன்னிபை முன்முடித்தோன்செய்ய வேளைப்பண்டு
தருந்தாதைநாயகன் சுந்தரன் தூதன் சமரிலன்று
பொருந்தார்புரத்திட்ட தீப்போன்மதியும் புறப்பட்டதே. கருந

தாரைகேள்வன்-சந்திரன், வாலிதிருந்தார்-ஆத்திமாலை,பகைவர்
வன்னிபத்திரம்-ஒரரக்கன்-முடித்தல்-தரித்தல் கொல்லல்,வேல்முருக
ன்மதன்-சுந்தரன்-தூதன்-சுந்தரற்குதூதன் சுந்தரனாகிய இராமனுக்
குத்தூதன்.

ஆறுயுமுத்தமி ழாற்றாரிற்சோழி யழகுகண்டு
நாராயணனெடு மாலாகினான்மற்றை நான்முகனும்

ஓராயிரமட லூர்ந்தான்வின்மார னுருவழிந்தான்
பேரானவர்னவர் கோனுங்கண்ணாயிரம் பெற்றனனே. ௧௫௪

ஓராயிரமடல்தாமரைபடல்

பறவாததும்பி கருகாதவெங்கரி பண்புரண்டே
இறுகாதசந்தி யுருகாதமாதங்க மிந்துநுதல்
நிரவாதசிந்துரம் பூசாக்களப நெடுஞ்சுனையிற்
பிறவாமல் வலஞ்சுழிக்கேவரப் பெற்றனனே. ௧௫௫

கம்பமதகடகளிற்றான் றில்லைவாழும்
கணபதிதன்பெருவயிற்றைக் கண்டுவாடி
உம்பரெல்லாம்விழித்திருந்தா ரயில்வேற்செங்கை
உடையவறுமுகவனுங்கண் ணீராறானான்
பம்புசுடர்க்கண்ணனுமே நஞ்சுண்டான்காமன்
பயமடைந்தானுமையுமுடல் பாதியானாள்
அம்புவியைப்படைத்திடுவ தவமதேயென்
றயனுமன்னமிறங்காம லலைகின்றானே. ௧௫௬

பாளைமணங்கமழுகின்ற கயிற்றாற்றுப்பெருமாளே பழிகாராகேள்
வேளையென்றாலிவ்வேளை பதினாறுநாழிகைக்கு மேலாயிற்றென்
தோளைமுறித்ததுவன்றி நம்புயானையுங்கூடச் சுமக்கச்செய்தால்
நாளையினியார்சுமப்பா ரென்னாளுமுன்கோயி னசைந்தானே. ௧௫௭

வீமனெனவலிதுருத்த திருமலைராயன்கீர்த்தி வெள்ளம்பொங்கத்
தாமரையினயனோடிச் சத்தியலோகம்புகுந்தான்சங்கபாணி மேலறிச்
பூமிதொட்டுமானமட்டும் வளர்ந்துநின்றான் சிவன்கயிலைப்பொருப்பி
சோமனையுந்தலைக்கணிந்துவடவரதத்தண்டாலாழஞ் சோதித்தானே.

அதிமதுர கவிராயர்.

மூச்சுவிடுமுன்னே முந்நூறுநானூறும்
ஆச்சுதென்றாலாயிரம்பாட்டாகாதா-பேச்சென்ன
வெள்ளக்கவிக்காளமேகமே நின்னுடைய
கள்ளக்கவிக்கடையைக் கட்டு. ௧௫௮

தெய்வப்புலமை

ஔவையார்.

அவ்வவ்வமயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு.

மதுரமொழிநல்லுமையாள் சிறுவன்மலரடியை
முதிரநினையவல்லார்க்கரிதோ முகில்போன்முழங்கி

அதிரவருகின்றயானையுந்தேரு மதன்பின்சென்ற
குதிரையுங்காதங்கிழவியுங்காதங் குலமன்னனே. ௧

விறகரிருவர் புகழ்ந்திடவேவேண்டும்
விரனிறையமோதிரங்கள் வேண்டும்-அரையதனிற்
பஞ்சேனுவேம்பேனும் வேண்டுமவர்கவிதை
நஞ்சேனுவேம்பேனு நன்று. ௨

வான்குருவியின்கூடு வல்லரக்குத்தொல்கரையான்
தேன்சிலம்பியாவர்க்குஞ் செய்யரிதால்யாம்பெரிதுப்
வல்லோமேயென்று வலிமைசொல்வேண்டாங்காண்
எல்லார்க்குமொவ்வொன் றெளிது. ௩

இவ்வளவுகண்ணுடையனிவ்வளவுசிற்றிடையாள்
இவ்வளவுபோன்ற விளமுலையாள்-இவ்வளவா
னந்தவுடலாணவமேவுமன்மதன்றன்
ஐந்துகணையாள்வாடினாள். ௪

ஐயமிடுமி னறநெறியைக்கைப்பிடிமின்
இவ்வளவேனுமன்ன மிட்டுண்மின்-தெய்வம்
ஒருவனேயென்று முணரவல்லீரேல்
அறுவினைகளைந்து மறும். ௫

அற்றதலைபோக வறாததலைநான்கினையும்
பற்றித்திருகிப் பறியேனோ-மற்றும்
வாமனையானுக்கிந்த மானைவகுத்திட்ட
பிரமனையான்காணப்பெறின். ௬

காணாமல்வேணதெல்லாங் கத்தலாங்கற்றோர்முன்
கோணாமல்வாய்திறக்கக் கூடாதே-நாணாமற்
பேச்சுப்பேச்சென்னும் பெரும்பூனைவந்தக்கால்
கீச்சுகீச்சென்னுங்கிளி. ௭

சித்திரமுங்கைபழக்கஞ் செந்தமிழுநாப்பழக்கம்
வைத்ததொருகல்வி மனப்பழக்கம்-நித்தம்
நடையும்நடப்பழக்கம் நட்புந்தயையுங்
கொடையும்பிறவிக்குணம். ௮

சுரதந்தனிலிளைத்த தோகைசுகிர்த
விரதந்தனிலிளைத்தமேனி-நிரதம்

கொடுத்திளைத்த தாதா கொடுஞ்சமரிற்பட்ட
வடுத்துளைத்தகல்லபிரா மும். ௯

நம்பனடியார்க்கு நல்காத்திரவியங்கள்
பம்புக்காம்பேய்க்காய் பரத்தையர்க்காம்-வம்புக்காம்
கொள்ளைக்காங்கள்ளுக்காங் கோவுக்காஞ்சாவுக்காங்
கள்ளர்க்காந்தீக்காகுங் காண். ௰

எட்டேகாலட்சணமே யெமனேறும்பரியே
மட்டில்பெரியம்மை வாகனமே-முட்டமேற்
கூரையில்லாவீடே குலராமன்றூதுவனே
ஆரையடாசொன்னா யது. ௧௧

வெய்தாய்நறுவிதாய் வேண்டளவுந்தின்பதாய்
நெய்தானளாவி நிறம்பசந்த-பொய்யா
அளகென்றுசொல்லு மமுதத்தையிட்டான்
கடகஞ்செறிந்த கையாள். ௧௨

விருத்தம்.

இலக்கணக்கவிஞர்சொ லின்பந்தேடுவர்
மலக்குசொற்றேடுவர் வன்கணாளர்கள்
நிலத்துறுங்கமலத்தை நீளும்வண்டதி
றலைக்குறைகமலத்தெச் சாருந்தன்மைப்போல் ௧௩

தண்ணீருங்காவிரியே தார்வேந்தன்சோழனே
மண்ணாவதுஞ்சோழ மண்டலமே-பெண்ணாவாள்
அம்பொற்சிலம்பி யரவிந்தத்தாளணியுஞ்
செம்பொற்சிலம்பியே சிலம்பு. ௧௪

கூரியவாளாற் குறைத்திட்டகூன்பலா
ஓரிதழாய்க்கன்று யுயர்மரமாய்-சிறியவோர்
வண்டுபோற்கொட்டையாய் வண்காயத்தின்பழமாய்ப்
பண்டுபோனிற்க பலா. ௧௫

கூழைபலாத்தழைக்கப் பாடக்குறமகளும்
மூழைக்குழக்குத் தினைதந்தாள்-சோறாகேள்
உப்புக்கும்பாடிப் புளிக்குமொருகவிதை
ஒப்புக்குமென்ற னுளம். ௧௬

கிட்டேரமாக நிதிதேடிமன்னவனும்
இட்டதனைவமச்சா திரப்போனும்-முட்டவே

கூசிநிலைநில்லாக் குலக்கொடியுங்கூசிய
வேசியுங்கெட்டு விடும். ௧௭

காணக்கண்கூசுதே கையெடுக்கநாணுதே
மாணொக்கவாய்திறக்க மாட்டாதே-வீணுக்கென்
என்பெல்லாம்பற்றி யெரிகின்றதையையோ
அன்பில்லாளிட்ட வமுது. ௧௮

இருந்துமுகந்திருத்தி யீரோடுபேன்வாங்கி
விருந்துவந்ததென்று விளம்ப-வருந்திமிக
ஆடினாள்பாடினா ளாடிப்பழமுறத்தால்
சாடினாளோடினான் றான். ௧௯

பத்தாவுக்கேற்ற பதிவிரதையுண்டானா
லெத்தாலுங்கூடி யிருக்கலாம்-சற்றேனு
மேறுமாறாக விருப்பளேயாமாயிற்
கூறாமற்சந்நியாசங் கொள். ௨௰

காணொந்தேனொந்தேன் கடுகிவழிநடந்தேன்
யான்வந்ததூர மெளிதன்று-கூனன்
கருந்தேனுக்கண்ணாந்த காவிரிசூழ்நாடா
யிருந்தேனுக்கெங்கே யிடம் ௨௧

பாரிபரித்த பறியும்பறையனார்க்
காரிகொடுத்த கலைகட்டுஞ்-சேரமான்
வாராயெனவழைத்த வாய்மையுமிம்மூன்றும்
நீலச்சிற்றாடைக்கு நேர். ௨௨

ஒருகொம்பிருசெவியு மும்மதத்தநால்வாய்க்
கரியுரிவைக்கங்காளன் காளாய்-பரிவுடனே
தண்ணாலோலை கடிதொருதவாராயேல்
தண்ணாண்மைதீர்ப்பன் சபித்து. ௨௩

சேரலர்கோன்சேரன் செழும்பூந்திருக்கோவில்
ஊரளவுந்தான்வருக வுட்காதே-பார்மகள்
அங்கவையைக்கொள்ள வரசன்மணமிசைந்தான்
சங்கவையையுங்கூடத் தான். ௨௪

புகார்மன்னன்பொன்னிப் புனனாடன்சோழன்
தகாதென்றுதானங் கிருந்து-தகாதே

கடிநின்வருக்க கடக்கோவலூர்க்கு
விடியப்பதினெட்டாநாள். உ௫

வையகத்துறைவன் மதுரபுரித்தென்னன்
செய்யத்தகாதொன்று தேம்பாதே-தையலர்க்கு
வேண்டுவனகொண்டு விடியவீரொன்பான்
ஈண்டுவருக விசைந்து. உ௬

கருணையாவிந்தக் கடலுலகங்காக்கும்
வருணனேமாமலையன் கோவல்-திருமணத்து
மூன்மாரிபெய்யு மூதுமாரியைமாற்றிப்
பொன்மாரியாகப் பொழி. உ௭

முத்தெரியும்பெண்ணை முதுநீர்கவித்துத்
தத்திநெய்பா லறைப்பெய்து-குதித்திச்
செருமலைதெய்வீகன் றிருக்கோவலூர்க்கு
வருமளவுங்கொண்டோடி வா. உ௮

பொன்மாரிபெய்யுமூர் பூம்பருத்தியாடையாம்
அந்நான்வயளரிசி யாகுமூர்-அந்நாளும்
தேங்குபுகழ்படைத்த சேதிமார்நாடதனில்
ஓங்குந்திருக்கோவலூர் உ௯

சொல்லாமலேபெரியர் சொல்லிச்சிறியர்செய்வர
சொல்லியுஞ்செய்யார் கயவரேகல்
குலைமாலைவேற்கண்ணாய் கூறுவமைநாடிற்
பலாமாவைப்பாதிரியைப்பார். ௩௰

கலித்தாழிசை-அல்லது-அந்தத்தடி-நீண்டிசை-யாகையின்
ஐந்தடிக்கலித்துறை யென்னலுமாம்.

திங்கட்குடைச்சேரனுஞ்சோழனும்பாண்டியனும்
மங்கைக்கருகில்வந்துநின்றார்மணப்பந்தலிலே
சங்கொக்கவெண்குருத்தீன்றபச்சோலைசலசலத்து
நுங்குக்கண்முற்றி யடிக்கண்கறுத்துநுனிசிவந்து
பங்குக்குமூன்று பழந்தரவேண்டும்பனந் துண்டமே. ௩௧

ஆயன்பதியி லரன்பதிவந்துற்றளக
மாயதனாதங்கருவியானாலும்-தூயபணிக்
குன்றம்போல்வீற்ற குவிமுலையாடன்னுடனி
இன்றுபோலென்றுமிரு. ௩௨

சிறப்பார்மணிமவுலிச் சேரமான்றன்னைப்
புறப்பாடியான்கேட்கப் பொன்னுடொன்றீர்ந்தான்
இரப்பவரென்றினுங் கொள்வர்கொடுப்பவர்
தாமறிவார்தன்கொடியின் சீர். ௩௩.

நூற்றுப்பத்தாயிரம் பொன்பெறினு நூற்சிலை
நாற்றிங்கணுக்கு ஐந்தாண்டும்-மாற்றலரை
பொன்றப்பொருதடக்கைப் போர்வேற்களங்கா
என்றுகிழியாதென் பாட்டு. ௩௪

வரகரிசிச்சோறும் வழுதுணங்காய்வாட்டும்
முரமுரெனவேபுளித்த மோரும்-திரமுடனே
புல்வேளூர்ப்பூதன் புகழ்ந்துபரிந்திட்டசோ
றெல்லாவுலகும் பெறும். ௩௫

ஏசியிடலி னிடாமையேநன்றெதிரிற்
பேசுமனையாளிற் பேய்நன்று-நேசமிலா
வங்கணத்திநன்று வலியபகைவாழ்வில்லாச்
சங்கடத்திற்சாவதே நன்று. ௩௬

கரியாய்ப்பரியாகிக் காரெருமைதானாய்
எருதாய்முழப்புடைவை யாகித்-திரியாய்த்
தேரைக்கால்பெற்றுமிகத் தேய்ந்துகாலோய்ந்ததே
கோரைக்காலாள்வான் கொடை. ௩௭

பாடல்பெருமே பலர்மெச்சவாழாமே
நாடறிதன்மணங்க ளுடானே-சேடன்
இவன்வாழும்வாழ்க்கை யிருங்கடல்சூழ்பாரிற்
கவிழ்ந்தென்மலர்ந்தென்ன காண். ௩௮

காலையிலொன்றுவர் கடுப்பகலிலொன்றுவர்
மாலையிலொன்றுவர் மனிதரெலாஞ்சாலவே
முல்லையைப்போல முகமுமகமும்மலர்ந்து
நல்லானைக்கண்டறியோம் நாம். ௩௯

கற்றதுகைம்மண்ணளவு கல்லாதுலகளவென்
றுற்றகலைமடந்தை யோதுகிறாள்-மெத்த
வெறும்பந்தயங்கூற வேண்டாம்புலவீர்
எறும்புந்தன்கையா லெண்சாண். ௪௰

நூலெனிலோகோல்சாயு முத்தமரேல்வெஞ்சமராங்
கோலெனிலோவங்கே குடியாயு-நாலாவான்
மந்திரியுமாவான் வழிக்குத்துணையாவான்
அந்தவரசே யரசு. ௪௧

செம்மான்கரத்தனள் சேயேநெடியோனை
அம்மானெனப்பெற் றருள்வேலா-இம்மான்
கரும்பிறைக்கும்வெண்பிறைக்கும்கண்ணம்பிறைக்கும்
அரும்பிறைக்குக்கூந் தலினை. ௪௨

மதியாதார்முற்றமதித்தொருகாற்சென்று மிதியாமைகோடிபெறும்-உண்ணீருண்ணீரென்றுபசரியார்தம்மனையி லுண்ணாமைகோடிபெறும் கோடிகொடுத்துங்குடிப்பிறந்தார் தம்மோடு கூடுதல்கோடிபெறும், கோடானு கோடிகொடுப்பினுந் தன்னுடைநாக்கோடாமை கோடிபெறும். ௪௩

வாதக்கோனாளையென்றான் வையக்கோன்பின்னையென்றான்
ஏதக்கோன்யாதேனு மில்லையென்றான்-ஓதக்கேள்
வாதக்கோன்சொல்லதினும் வையக்கோன்சொல்லதினும்
ஏதக்கோன்சொல்லே யினிது. ௪௪

சுற்றுங்கருங்குளவி சூரைத்தூறீயப்பேய்
எற்றுஞ்சுடுகா டிடுகரையின்-புற்றில்
வளர்ந்தவடற்பனைக்குள் வைத்ததேனொக்கும்
தளர்ந்தோர்க்கொன் றீயார் தனம். ௪௫

ஆர்த்தசபைநூற்றொருவ ராயிரத்தொன்றாம்புலவர்
வார்த்தைபதினா யிரத்தொருவர்-பூத்தமலர்த்
தண்டாமரைத்திருவே தாதாகோடிக்கொருவர்
உண்டாயினுண்டென் றறு. ௪௬

தண்டாமலீவது தாளாண்மைதண்டி
அடுத்தக்காலீவ துண்மை-அடுத்தடுத்துப்
பின்சென்றாலீவதுகாற் கூலிபின்சென்றும்
ஈயானெச்சம்போ லறு. ௪௭

உள்ளவழக்கிருக்க வூரார்பொதுவிருக்கத்
தள்ளிவழக்கதனைத் தான்பேசி-எள்ளளவும்
கைக்கூலிதான்வாங்குங் ககலறுவான் றன்கிளையும்
எச்சமறுமென்று ல்று. ௪௮

வழக்குடையானிற்ப வலியானைக்கூடி
வழக்கையழிவழக்குச் செய்தோன்-வழக்கிழந்தோன்
சுற்றமுந்தானுந் தொடர்ந்தகண்ணீரால்
எச்சமறுமென்று லறு. ௪௯

வெண்பாவிருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக்கையா லெழுதானைப்-பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப்பெற்றாளே
எற்றேமற்றெற்றேமற் றெற்று. ௫௰

கருங்குளவிசூரைத்தூ றீச்சங்கனிபோல்
வருந்தினரைக்கொன்றீயாதான் வாழ்க்கை-அரும்பகலே
இச்சித்திருந்தபொருள் தாயத்தார்கொள்வாரே
எற்றேமற்றெற்றேமற் றெற்று. ௫௧

வானமுளதான் மழையுளதான் மண்ணுலகிற்
றானமுதலாற் றவமுளதாம்-ஆனபொழு
தெய்த்தோமிளைத்தோமென் றேமாந்திருப்போரை
எற்றேமற்றெற்றேமற் றெற்று. ௫௨

எண்ணாயிரத்தாண்டு நீரிற்கிடந்தாலும்
உண்ணீரம்பற்றாக் கிடையேபோற்-பெண்ணாவாய்
பொற்றொடிமாதர் புணர்முலைமேற்சாராரை
எற்றேமற்றெற்றேமற் றெற்று. ௫௩

கருங்காலிகட்டைக்கு நாணாக்கோடாலி
இருங்கதலித்தண்டுக்கு நாணும்-பெருங்கானிற்
காரெருமைமேய்க்கின்ற காளைக்குநான்றோற்ற
யீரிரவுதுஞ்சாதென் கண். ௫௪

## கொடியது.

கொடியதுகேட்கி னெடியவெவ்வேலோய்
கொடிதுகொடிது வறுமைகொடிது
அதனினுங்கொடிது இளமையில்வறுமை
அதனினுங்கொடிது ஆற்றொணாக்கொடுநோய்
அதனினுங்கொடிது அன்பிலாப்பெண்டிர்
அதனினுங்கொடிது
இன்புறவவர்கையி லுண்பதுதானே. ௫௫

இனியது.

இனியதுகேட்கிற் றினிநெடுவேலோய்
இனிது இனிது ஏகாந்தமினிது
அதனினுமினிது ஆதியைத்தொழுதல்
அதனினுமினிது அறிவுள்ளாரைக்
கனவினுநனவினுங் காண்பதுதானே ௫௬

பெரியது.

பெரியதுகேட்கி னெறிதவழ்வேலோய்
பெரிதுபெரிது புவனம்பெரிது
புவனமோ நான்முகன்படைப்பு
நான்முகன் கரியமாலுந்திவந்தோன்
கரியமாலோ வலைகடற்றுயின்றோன்
அலைகடல் குறுமுனிகையிலொடுக்கம்
குறுமுனியோ கலசத்திற்பிறந்தோன்
கலசமோ புவியிற்சிறுமண்
புவியோ வரவினுக்கொருதலைபாரம்
அரவோ வுமையவள்சிறுவிரன்மோதிரம்
உமையோ விறைவர்பாகத்தொடுக்கம்
இறைவரோ தொண்டருள்ளத்தொடுக்கம்
தொண்டர்தம்பெருமை சொல்லவும்பெரிதே

அரியது.

அரியதுகேட்கின் வரிவடிவேலோய்
அரிதரிது மானிடராதலரிது
மானிடராயினுங் கூன்குருடுசெவிடு
பேடுநீக்கிப் பிறத்தலரிது
பேடுநீக்கிப் பிறந்தகாலையும்
ஞானமுங்கல்வியு நயத்தலரிது
ஞானமுங்கல்வியு நயந்தகாலையும்
தானமுந்தவமுந் தான்செயலரிது
தானமுந்தவமுந் தான்செய்வராயின்
வானவர்நாடு வழிதிறந்திடுமே. ௫௮

மாடில்லான்வாழ்வு மதியில்லான்வாணிபநன்
ஞூடில்லான்செங்கோ னடாத்துவதுங்கூடுங்

குருவில்லாவித்தை குணமில்லாப்பெண்டு
விருந்தில்லாவீடும் விழல். ௫௯

நேசனைக்காணாவிடத்தே நெஞ்சாரவேதுதித்தல்
ஆசானையெவ்விடத்து மப்படியே-வாச
மனையாளைப்பஞ்சணையின் மைந்தர்தமைநெஞ்சில்
வினையாளைவேலை முடிவில். ௬௰

ஆலைபலாவாக்க லாமோவருஞ்சுணங்கன்
வாலைநிமிர்க்க வசமாமோ-நீலநிறக்
காக்கைதனைபேசுவிக்க லாமோகருணையிலா
மூர்க்கனைச்சீராக்க லாமோ. ௬௧

நிழலருமைவெய்யலிலே நின்றறிமினீசன்
கழலருமைவெவ்வினையிற் காண்மின்-பழகுதமிழ்ச்
சொல்லருமைநாலிரண்டிற் சோமன்கொடையருமை
புல்லரிடத்தேயறிமின் போய். ௬௨

காசினியிற்பிள்ளைக் கவிக்கம்புலிபுலியாம்
பேசுமுலாவிற் பெதும்பைபுலி-ஆசி
வல்லவர்க்குவண்ணம் புலியாமற்றெல்லாப்
புலவர்க்குவெண்பாப் புலி. ௬௩

ஈதலருந்தீவினைவிட் டீட்டுபொருளெஞ்ஞான்றுங்
காதலிருவர் கருத்தொருமித்-தாதரவு
பட்டதேயின்பம் பரனைநினைத்திம்மூன்றும்
விட்டதேபேரின்ப வீடு. ௬௪

தாயோடறுசுவைபோம் தந்தையொடுகல்விபோம்
சேயோடுதான்பெற்ற செல்வம்போம்-ஆயவாழ்
வுற்றாருடன்போ முடன்பிறப்பாற்றோள்வலிபோம்
பொற்றாலியோடெவையும் போம். ௬௫

போந்தவுதாரனுக்குப் பொன்றுரும்புசூரனுக்குச்
சேர்ந்தமரணஞ் சிறுதுரும்பு-ஆய்ந்த
அறிவோர்க்குநாரி யருதுரும்பாமில்லத்
துறவிக்குவேந்தன் துரும்பு. ௬௬

மேற்பாற்கணைமந்தருண் மூவாவெருதும்விளங்குகங்கை
சீர்ப்பார்ச்சலிகன்னிலமு முண்டாகியுநின்னிடத்தி

பாற்பாக்கியவதி நீங்காதிருந்துப் பலிக்குழன்றீர்
ஏற்பாக்கிடாம லன்றோபெருங்கோவி லிறையவனே. சுஎ

அகவல்.

மூவர்கோவையு மூவிளங்கோவையும்
பாடியவென்றன் பனுவல்வாயால்
என்னையும்பாடுக வென்றனையெங்ஙனம்
பாடுதுமியங்கா ளிருபடுசெங்க
கண்ணிற்காணீர் வெளிறுபடுநல்யாழ்
விருப்பமாய்க்கேளீர் இலவவாச்சி
யரிமுளைபுல்லீர் புலவர்வாய்ச்சொற்புலம
பனுக்கிரங்கவிர் ஊடருண்ணீர்
கோடீர்கொள்ளீர் ஓவாக்கானத்
துயர்மறம்போலத்தா வாக்கினிற்றோன்றினீரே. சுஅ

கல்வியுடையீர் கருங்கானகத்திடையே
நெல்லியிலையுதிர்ந்து நிற்பதெவன் வல்லாய்கேள்
வெல்லாவழக்கை விலைவாங்கிவெடிக்கும்
வல்லாளன்சுற்றம்போன் மாண்டு. சுகூ

வண்டமிழைத்தேர்ந்த வழுதிகலியாணந்
துண்டபெருக்க முறைக்கக்கேள்-அண்டி
நெருக்குண்டேன்றள்ளுண்டே னீள்பசியினாலே
சுருக்குண்டேசோறுண்டிலேன். எ0

ஆகசெய்யுள்-௩௱௭௰.

—(*)—

ஔவையார் முதலிய எழுவரும்பாடியது.

—(*)—

ஔவையார்.

இட்டமுடனென்றலையி லின்னபடியென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்து விட்டானோ-முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்னாய்
நெஞ்சமேயஞ்சாதே நீ க

உப்பை.

அத்திமுதலெறும்பீ றானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந் தேசிகன்-முற்றவே

கற்பித்தான்போனானோ காக்கக்கடனிலையோ
வற்பனோவன்னா யரன். உ

அதிகமான்.

கருப்பைக்குண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்கு மெய்யன்-உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்கானோ வோகெடுவாயன்னாகேள்
வாட்டமுனக்கேன் மகிழ். ௩

உறுவை.

சண்டைப்பைக்குள்ளுயிர் தன்றாயருந்தத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்ப தாச்சரியம்-மண்டி
அலைகின்றவன்னா யரனுடையவுண்மை
நிலைகண்டுநிலையறிந்து நில். ௪

கபிலர்.

கண்ணுழையாக்காட்டினிற் கருங்கற்றவளைக்கும்
உண்ணும்படியறிந் தூட்டுமவர்-நண்ணும்
நமக்கும்படியளப்பார் நாரியோர்பாகர்
தமக்குந்தொழிலென்ன தான். ரு

வள்ளியம்மை

அன்னைவயிற்றி லருந்திவளர்த்தவன்றான்
இன்னும்வளர்க்கானோ வென்றாயே-மின்னரவம்
சூடும்பெருமான் சுடுகாட்டினின்றருளை
ஆடும்பெருமா னவன். சு

வேழமுடைத்து மலைநாடுமேதக்கச்
சோழவளநாடு சோறுடைத்துப்பூமியர்கோன்
தென்னாடுமுடைத்துத் தெண்ணீர்வயற்றொண்டை
நன்னாடுசான்றோ ருடைத்து. எ

தெய்வப்புலமைத் திருவள்ளுவனாயனார்
அவ்வவ்வமயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு

எவ்வுயிருங்காக்கவொரு வீசனுண்டோவில்லையோ
அவ்வுயிரில்யானொருவ னல்லவோ-வவ்வி
அருகுவதுகொண்டிங் கலைவதேநன்னே
வருகுவதுதானே வரும். அ

பூவிலயனும் புரந்தரனும்பூவுலகைத்
தாவியளந்தோனுந் தாமிருக்க-நாவில்
இழைநக்கிநூனெருடு மேழையறிவேனோ
குழைநக்கும்பிஞ்சகன்றன் கூத்து. ௯

ஐயரென்றுரைத்தீர்நாயேற் கடுக்குமோவருளிலேனை
பொய்யொடுகளவுமற்றுப் புலன்களையொடுக்கிக்கொண்டு
உய்யவேபுலன்களைந்து முயர்பரவெளியுள்ளாக்கி
வெய்யவன்மதியம்போல விரவுவரையராவர். ௧௦

ஞானவானென்றுசொன்னீர் நாதவிந்துவுங்கடந்து
கானலைவரையுஞ்சுட்டுக் கடுவெளிபரமானந்தந்
தானெனுமவையிரண்டும் தவிர்ந்துதன்வசமுங்கெட்டு
மோனமுங்கடந்தேயப்பான் முடிந்தவர்ஞானியாவார். ௧௧

சாதியிலேதொண்ணூற்றொன் பானுஞ்சாதி
சமையத்திற்பதின்மூன்றுஞ் சமயமாகும்
நீதியிலேசிவனுடைய நீதியாகும்
நிலைமையிலேவேதாந்த நிலைமையாகும்
ஆதியிலேயெங்களூர் கருவூராகும்
அந்தத்திற்போயடைவோம் பேரூர்தன்னில்
சோதியிலேபரஞ்சோதிக் கூட்டமாகும்
சொல்லுதற்குமெங்கள்குலஞ் சுக்கிலமதாமே ௧௨

எந்தவூரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர்செய்தி யறியீரோ-வந்தவூர்
முப்பாழும்பாழாய் முடிவிலொருசூனியமாய்
அப்பாலும்பாழென் றறி. ௧௨

நில்லுநில்லென்றுசொன்னீர் நேசபாசங்களைந்தும்
புல்லறிவோடுமாங்காப் புலைகொலைகளவுமற்றுச்
சொல்லுதற்கரியஞானச் சுழிமுனைமுடியின்மீதில்
எல்லையுங்கடந்தேயப்பா லேகமானவர்கணிற்பார். ௧௪

இருமிருமென்றசொன்னீ ரேற்குமோவேழையேற்குத்
தருபொருளுணர்ந்துசைவ சமயமுமனைத்துநீங்கி
மருடருவினையுநீங்கி மாசிலாவுண்மைஞானம்
பொருந்தினமருப்பார்பின்பு பொருதவரிறப்பர்தாமே. ௧௫

போமெனவுரைத்தீரென்னைப் பொறியொடுபுலன்களைந்தும்
ஆமெனும்விச்சையோடு மங்கனைமதித்துக்கொண்டே

ஏமமுஞ்சாமமற்றே யிரவொடுபகலுமற்றுச்
சோமனூர்பதியைவிட்டுத் துறந்தவர்போவரன்றே. கசா

அடிசிற்கினியாளே அன்புடையாளே
படிசொற்றவறாத பாவாய்-அடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியே
என்றூங்குமென்கண் ணிரா. கஎ

ஆக செய்யுள்-உ௩சசா.

**மகாகவியாகியகம்பர்.**

---

அவ்வவ்வமயங்களிற்கூறிய தனிபாடற்றிரட்டு

கடல்கிழக்குத்தெற்குக் கரைபொருவெள்ளாறு
குடதிசையிற்கோட்டைக் கரையாம்-வடதிசையில்
ஏணாட்டுப்பண்ணை யிருபத்துநாற்காதம்
சோநாட்டுக்கெல்லையெனச் சொல் க

வெள்ளாறதுவடக்கா மேற்குப்பெருவழியா
வெள்ளார்புணற்கன்னி தெற்காகும்-உள்ளரா
ஆண்டகடல்கிழக்கா மைம்பத்தறுகாதம்
பாண்டிநாட்டெல்லைப் பதி. உ

வடக்குத்திசைபழனி வான்கீழ்தென்காசி
குடக்குத்திசைகோழி கோடாம-கடற்கறையின்
ஓரமோதெற்காகு முள்ளென்பதின்காதம்
சேரநாட்டெல்லையெனச் செப்பு. ௩

மேற்குப்பவளமலை வேங்கடநேர்வடக்காம்
ஆர்க்குமுவரி யணிகிழக்கு-பார்க்குளுயர்
தெற்குப்பிலனுகி திகழிருபதின்காதம்
நாற்றொண்டைநாடெனவே காட்டு. ச

ஆழியான்புள்ளி யணையேயவன்கடந்த
வாழிவரையின் மத்தாமே-பூமியான்
பூணபுரமெரித்த பொற்சிலையிற்பூட்டுகின்ற
நாணேயகல நட. ரு

மங்கையொருபங்கா மணிமார்பிலாரமே
பொங்குகடல்கடைந்த பொற்கயிரே-திங்களையும்
சீறியதன்மேலூறுந் தெய்வத்திருநாணே
ஏறியபண்பேயிறங்கு. சா

பாறைச்சுமந்த படரவேபங்கயக்கண்
வீரன்குடந்துறங்கு மெல்லணையே-ஈரமதிச்
செஞ்சடையான்பூணுந் திருவாபரணமே
நஞ்சுடையார்தூர நட. எ

சிரம்பார்த்தானீசனயன் றேவிதனைப்பார்த்தான்
கரம்பார்த்தான்செங்கமலக் கண்ணன்-உறஞ்சேர்
மலைவெளுத்ததிண்புயத்து வண்ணன் ஸ்ரீராமன்
கலைவெளுத்தநேர்த்திதனைக் கண்டு. அ

ஆரார்தலைவணங்கா ராரார்தன்கையெடார்
ஆரார்தன்சத்திரத்தி லாறுதார்-சீராரும்
தென்புலியூர்மேவுஞ் சிவனருள்சேரம்பட்டத்
தம்பிபுகர்வாசலிலே தான். கூ

கொற்கையான்மாறன் குலசேகரப்பெருமான்
பொற்கையானனகதை போதாதோ-நற்கமல
மன்றலைவாரி மணிவாயலையசைக்கத்
தென்றலேயேன்வந்தாய் செப்பு. ௰

பேரரசர்தேவிமார் பெற்றமதலையர்தம்
மார்பகலங்கண்டு மகிழ்வாரே-பேர்பெரிய
வல்லானகளங்கன் வாணன்றிருநாமம்
எல்லாமெழுதலா மென்று. கக

உலக்குரியபண்ட முவந்திருக்கச்சென்றால்
கொலைக்குறியவேழங் கொடுத்தான்-தலைக்குரிய
வாணர்கோனுறை மகதேவனுக்கிந்த
பாணனேடென்ன பகை. கஉ

வாணன்பெயரெழுதா மார்புண்டோமாகதர்கோன்
வாணன்புகழுரைய வாயுண்டோ-வானன்
கொடிதாங்கவில்லாத கொப்புண்டோவுண்டோ
அடிதாங்கிநில்லாயரசு. கங

உமையவளுநீயு மொருங்கொப்பேயொப்பே
உமையவளுக்குண்டங் கோளுந்தும்-உமையவடன்
பாகந்தோய்ந்தாண்டான் பலிக்குழன்றான்பாண்டியனின்
ஆகந்தேய்ந்தாண்டா னரசு. ௧௪

மோட்டெருமைவாவிபுக முட்டுவராற்கன்றென்று
வீட்டளவும்பால்சொரியும் வெண்ணெயே-நாட்டில்
அடையாநெடுங்கதவு மஞ்சலென்றசொல்லும்
உடையான்கடையப்ப னூர். ௧௫

வெற்றிபுனைகாதகிக்கும் வேம்புக்கும்பெண்ணுக்கும்
சுற்றும்பெருநழலாய்த் தோன்றுமேகற்றோர்
திறந்தாங்குந்தாங்குஞ் செகமுழுதுந்தாங்கும்
அறந்தாங்குந்தொண்டை யரசு. ௧௬

கந்தமலர்பபிரமன் கன்னிமடவார்க்கெல்லாம்
அந்தவிளநீரைமுலை யாக்கினன்சுந்தரஞ்சேர்
தோற்றமிகுவல்லிக்குத் தோம்பைமுலையாக்கினன்
ஏற்றமிதில்யார்தா னியம்பு. ௧௭

இருந்தவளைப்போனவளை யென்னையவளைப்
பொருந்துவளைபரித்துப் போனன்-பொருந்தவளை
பூத்தத்தேன்சொரியும் பொன்னிவளநன்னாட்டில்
மாத்தான்தன்வீதியினில் வந்து. ௧௮

ஆறியானாழி யயனெழுத்தாணியென்பார்
கோழியான்குன்றெறிய மேலென்பான்-பூழியர்ன்
அங்கைமழுவென்பா னருள்பெரியபாவண்டேர்ச்
சிங்கனுலைக்களத்தில் சென்று. ௧௯

குணகர்குணகட லென்பர்குடகுக்
கிடகர்வடகட லென்ப-வடகடலோர்
தென்கடலென்பர் திருந்துதாரச்சுதனின்
முன்கடைநின்றார்க்கு முரசு. ௨0

திணையிளைத்தார்முற்றந் திணையுணங்குஞ்செந்நெல்
தனைவளைத்தார்முற்றமது தானும்-கனையு
முரசணங்கச்சங்குணங்கு மூரித்தேர்த்தானை
அரசணங்குமச்சுதன் முற்றம். ௨௧

குறையுளாரெங்கிரார் கூர்வேலிராம
விறையாறுதிங்க ளிருந்தான்முறைமையால்
ஆலிக்குந்தார்மார்பா வச்சுதாவந்நாளில்
வாலிக்கிளையான் கடை. உஉ

அரசனளங்க னச்சுதனுமுற்றத்
தரசரவதரித்த வந்நாள்முரசதிரக்
கொட்டிவிடுமோசையினுங் கோவேந்தர்கற்றளையை
வெட்டிவிடுமோசை மிகும். உங

தளையவிழநான்மாலைத் தாயரேயாவி
களையினுமென்கண்டிறந்து காட்டேன்வளைகொடுப்போம்
வன்கண்ணமாவிசையன் மால்யானைத்தன்னெடும்வந்
தென்கண்புகுந்தா னினி. உச

பாண்டியனைப்பேர்மாற்றும் பாணர்க்கரசளித்த
வாண்டகையென்றுன்னை யறியேனோ-மூண்டெழுந்த
கார்மாற்றுஞ்செங்கைக் கடகறிவாணுவுனது
பேர்மாற்றுவதரிதோ பேசு. உரு

வாட்டானைத்தென்னவர்கோன் மாகதற்குத்தோற்றசெய்தி
கேட்டானதீங்குரலுங் கேட்டதற்பின்-நாட்டம்
பொருந்தாயிருவிழியான் பொன்முடியைச்சாய்த்தங்
கிருந்தானிங்கென்னுகுமென்று. உசு

பாணன்மதுரைப் பதியாளவைத்தபிரான்
வாணர்புகழவருமே கம்ப-வாணன்
கரும்போதகமேநின் கால்பணிவேன்மீண்டு
வரும்போதகமே வயன். உஎ

படுபருந்துஞ்சூர்ப்பேசும் பன்மிருகஞ்சொன்னால்
கொடிகழுகுமித்தனையும் கூடி-வடிவுடைய
கோமான்தளப்பாளன் கொல்யானைப்போமாறு
போமாறுபோமாறு போம். உஅ

என்சிவிகை என்கவிகை யென்றுவசமென்கவசம்
என்பரியீதென்கரியீ தென்பரேமன்கவன
மாமேவுந்தனவாணன் வரிசைபரிசுபெற்ற
பாவேந்தரை வேந்தர் பார்த்து. உகூ

சேற்றுங்கமலவயற் றென்னுறைவாணனையான்
சோற்றுக்கரிதாச் சொன்னக்கால்-வேற்றுக்
களிக்குமாவைத்தந்தான் கற்றவர்க்குச்செம்பொன்
அளிக்குமாறெவ்வா றவன். ௫௰

தேருளைப்புரவிவாரணத்தொடிதி திறைகொணர்ந்துவருமன்னரின்
தேசமேதுனதுநாமமேதுபுகல் செங்கையாதடவுபாணகேள்
வாருமெத்தகுடிநீருநாமமு மகதேவனுறைநகர் காவலன்
வாணபூபதிமகிழ்ந்தளிக்கவெகு வரிசைபெற்றுபுலவன்யான். ௫௧

நீருமிப்பரிசுபெற்றுமீளவர லாகுமேகுமவன்முன்றில்வாய்
நிதிலச்சிகரம்மாடமாளிகை நெருங்குகோபுரமருங்கெலாம்
ஆருநிற்குமுயர்வேம்புநிற்கும்வளர் மனையுநிற்குமதனருகிலே
அரசுநிற்குமரசைச்சுமந்தசில வத்திநிற்குமடையாளமே ௫௧

அலங்கணிமார்பனு ரையர்கோன்வாணன்
விலங்கொடுவருகவென்றான்-இலங்கிழையீர்
சோற்கோசோழற்கோ தென்பாண்டிநாடாளும்
வீரற்கோயாற்கோ விலங்கு. ௫௨

பரப்போதனாலமொரு தம்பியாளம்பணிமதியும்
துரப்போனொருதம்பி பின்வரத்தானும்துணைவியுடன்
வரப்போன்மைந்தர்க்குத் தாதைபொறுதுயிர்மாய்ந்தனனெஞ்
சுரப்பேவெனக்கிங்கினியாருவமை யுரைப்பதற்கே. ௫௫

கண்டாயோபார்வேந்தா கானகத்துகள்ளியின்கீழ்
வெண்டாழைபூத்து விளக்கெரியபெண்டாளி
பூட்டுதற்குமுன்னமொரு புத்திரனைப்பெற்றெடுத்தாள்
காட்டிற்கழுகோட்டுங் கை. ௫௪

கன்னிக்கலசமுலையாடன் காமக்குரோதமஞ்சத்தில்
என்னுக்கேழுதிக்கொடுத்தேனென் றியம்பக்கேளாயிகல்வேந்தே
மின்னுக்கெழுதியிடையெழுதி வேண்டும்பொருட்குமெழுதியருட்
பொன்னுக்கெழுதிகொடுத்தேயான்பொய்யுமுறையேன்புகழ்வேந்தே

பாண்டியன்பாடியது.

போற்றினும்போற்றுவர் பொருள்கொடாவிடிற்
தூற்றினுந்தூற்றுவர் சொன்னசொற்களை
மாற்றினுமாற்றுவர் வண்கணாளர்கள்
கூற்றினும்பாவலர் கொடியராவரே. ௩௬

மன்னவனுநீயோ வளநாடுமுன்னதோ
உன்னையறிந்தோதமிழை யோதினேன் -என்னும்
விறைந்தேற்றுக்கொள்ளாத வேந்துண்டோவுண்டோ
குரங்கேற்றுக்கொள்ளாத கொம்பு. ௩௭

அன்றையிலும்வைய மகன்றதோவல்லவென்று
குன்றெடுத்துநீதிருடிக் கொண்டாயோவென்றும்
அடைந்தாரைக்காக்கு மகளநிகர்துங்கா
நடந்தாயோநாலா ரடி. ௩௮

காருமிருசத்து நான்கொழிபக்காசினியை
ஓதக்கடல்கொண் டொளித்ததோ-மேதினியிற்
கொல்லிமலைத்தேன்சொரியுங்கொற்றவாநீமுனிந்தால்
இல்லையோவெங்கட் கிடம். ௩௯

நீரெலாஞ்சேறுநாற்ற நிலமெலாங்கல்லுமுள்ளும்
ஊரெல்லாம்பட்டிதொட்டி யுண்பதோகம்பஞ்சோறு
பேரெல்லாம்பொம்மன்திம்மன் பெண்களோநாயும்பேயும்
காருலாங்கொங்குநாட்டை கனவிலும்நினைக்கொணாதே. ௪0

குமிண்டியும்பண்ணையுங் கூடமுளைக்கின்றகொல்லைக்கம்பை
நிமிண்டியுமூதியுந் தின்னவல்லோரிந்த நீநிலத்திற் [ர்
றுமிண்டியுங்காய்தன்னைமொட்டையம்பாலெய்யுஞ்சூரர்கண்டீ
நமிண்டியிற்பளளிக ளத்தனைபேர்களுநல்லவரே. ௪௧

செட்டிமக்கள்வாசல்வழிச்சொல்லோமேசெக்காரப்
பொட்டிமகள்வாசல்வழி போகோமே-முட்டிபுகும்
பார்ப்பாரகத்தையெட்டிப் பாரோமேயெந்நாளுங்
காப்பாரே வேளாளர் காண். ௪௨

மேழிபிடிக்குங்கை வேல்வேந்தர்நோக்குங்கை
ஆழிதரித்தே யருளுங்கை-சூழ்வினையை
நீக்குங்கையென்று நிலைக்குங்கைநீடூழி
காக்குங்கைகாராளர் கை. ௪௩

மற்சொண்டதிண்புயத்தான் மாநகர்விட்டிங்குவந்து
சொற்கொண்டபாவின் சுவையறிவாரீங்கிலையோ
விற்கொண்டவாணுதலாள் வேலிதருங்கூலி
நெற்கொண்டுபோமளவு நில்லாய்நெடுஞ்சுவரே. ௪௪

விருத்தம்.

தேரையார்செவ்விளநீ ருண்ணூர்பழிசுமப்பர்
நாரியார்தாமறிவார் நாமவரைநத்தாமை
கோரைவாய்பொன்சொறியுங் கொல்லிமலைநன்னாடா
ஊரைவாய்மூடவுலைமூடிதானில்லையே. ௪௫

மட்டுபடாக்கொங்கை மானார்கலவிமயக்கத்திலே
கட்டுபட்டாயென்னகாதல்பெற்றாய் மதன்கையம்பினாற்
பட்டுபட்டாயினுந் தேறுவையேயென்றுபார்த்திருந்தேன்
வெட்டுபட்டாய்மகனே தலைநாளின்விதிப்படியே. ௪௬

வில்லம்புசொல்லம்பு மேதினியிலிரண்டுண்டு
வில்லம்பிற்சொல்லம்பே மேலதிகம்-வில்லம்பு
பட்டதடாவென்மார்பிற் பாண்டியாநின்குலத்தைச்
சுட்டதடாவென்வாயிற் சொல். ௪௭

கரைக்குவடக்கிருக்குங் காளிகாளம்மைக்
கரைந்துவழிசாந்தைத் தொட்டப்போல்-உரைத்து
மற்றைக்கழியறியா தவன்பேயின்கையைக்
குறைக்குமாங்கூன்கத்தி கொண்டு. ௪௮

காலப்புயநிகர் காராளர்தம்மைக் கடனுடுத்த
தாலக்குலமங்கை பெற்றதனாற்சதா காலமுமால்
கோலதிருமுகத் தாலேமுகந்தனன்கூடலிலே
சூலக்காரப்படையான் மலைமீதுசுமந்தனனே. ௪௯

கலங்காடுதனில்விளையாக் கடுநிலத்திற்றான்முளையா
அல்லவிருந்தகருங்கூந்த லணங்குச்கணங்குபோலாவாள்
செல்லென்றேவிமனைகடோறுந்தேடித்திரிந்துங்காணாத
நெல்லஞ்சோறேகம்பஞ்சோர் நினைசேமந்துதிரிவாயே. ௫0

கம்பாகற்றுச்சொல்லி.

மாவுறங்கினபுள்ளுறங்கின வண்டுறங்கினதண்டலைக்
காவுறங்கினவெண்கண்மானிரு கண்ணுறங்கினவிளைபகோ
கோவுறங்குசடதலைக்குல தீப்பவெள்ளூருதட்டிவாய்
ஆவுறங்குபஞ்சாரசஞ்சல பஞ்சலென்னவடுருமே. ௫௧

அம்பிகாபதியுங் கம்பரும்பாடியது.

இட்டடிநோவ வெடுத்தடிகொப்பளிக்க
வட்டில்சுமந்து மருங்கசையக்-கொட்டிக்
கிழங்கோகிழங்கென்று கூறுவாணாவில்
வழங்கோசை வையம்பெறும். ௫௨

அம்பிகாபதி.

சற்றேபருத்த தனமேகுலுங்கதரளவடந்
தூற்றேயசையக்குழையூசலாடத் துவர்கொள்செவ்வாய்
நற்றேனொழுகநடனசிங்கார நடையழகி
பொற்றேரிருக்கத்தலையலங்காரம்புரப்பட்டதே. ௫௩

வெங்கண்சிவந்துவெடிவான்முறுக்கிவெகுண்டெழுந்தேன்
அங்கம்பிளக்கவருங்களிறேயன் றிரணியனைப்
பங்கப்படவுரங்கீண்டேயுதிரப்பருகுநர
சிங்கமிருக்குதுகாண்கெடுவாயென்றன்சிந்தையிலே ௫௪

வீரமுண்டோமதன்கையம்பினால் வெந்துவீழுதைக்கு
நேரமுண்டோவஞ்சி நேர்பட்டகாலினெஞ்சைவிடம்
பேரமுண்டோசொல்லொண்ணாத காமப்பெருநெருப்புக்
கீரமுண்டோவையனே யென்னபாவமினிச்சொல்வதே. ௫௫

உருகியுடல்கருகி யுள்ளீரல்பற்றி
எரிவதவியாதென் செய்வேன்-வரியான
நஞ்சிலேதோய்ந்த நளினவிழிப்பெண்பெருமாள்
நெஞ்சியிலேயிட்ட நெருப்பு. ௫௬

வாணன்புகழ்க்கெல்லை வாழ்த்துவோர்நாவெல்லை
வாணன்புகழ்க்கெல்லை மண்ணெல்லை-வாணன்
கொடைக்கெல்லையேற்பதவங் கோள். ௫௭

நில்லாதுபல்லும் பறிபட்டகூந்தலு நீண்டகரும்
பொல்லாவழுக்குப் புடவையுமாய்வெகு பூச்சியும்போய்ச்
செல்லாப்பணத்துக்குத் தேட்டேனுமற்றுத்தியங்கியென்றும்
இல்லாதபாவிதனக்கார் துணைபோன வீரட்டனமே ௫௮

வாசமலர்மடந்தை போல்வார்மருத்தவனத்
தீசனடியாரெழுபதின்மர்-நேசத்

திரவலர்மேனீட்டுவர்கை யீண்டுலகையாளும்
புரவலர்னீட்டுவர்பொற் றாள். ௫௬

ஆற்றங்கரையி னருகிருக்குமாமரத்திற்
காக்கையிருந்து கஃகுஃகெனக்-காக்கைதனை
எய்யக்கோலில்லாமல் இச்சிச்செனவெய்தான்
வையக்கோனரி மகன். ௬௰

ஏகம்பவாணன் மனைவி.

சேனைதழையாக்கிச் செங்குருதிநீர்தேக்கி
ஆனைமிதித்த வருஞ்சேறி-மானபரன்
பார்வேந்தர்வேந்தன் பறித்துநட்டானேகம்பன்
மூவேந்தாதங்கண் முடி. ௬௧

கம்பர்வீட்டுவெள்ளாட்டி

நெற்படிவிளைகழனி புடைசூழ்நென்மலிவாள்தச்சன்
கற்படிபனைதோளான்பெயரோ கங்கணசணகணவன்
விற்படிவானுதலாண்மனைவி மின்மினிமினிமினிமினிமி
சொற்படிவேலைசெயுமவளோதுந் துதுமிரிதுரிதி. ௬௨

வட்டமதிபோலிருக்கும் வன்னிக்கொடிதாவுங்
கொட்டுவார்கையினிற் கூத்தாடும்சுட்டால்
அரகராவென்னுமே யம்பலசேமாகி
ஒருநாள்விட்டேடனீ துரை. ௬௩

தென்னவாமீனவா சீவிலிமாறுமதுரை
மன்னவாபாண்டி வரராமா-முன்னுங்
கரும்புக்குத்தாரளித்த துய்யதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலே கண். ௬௪

மாப்பைந்தார்க்கல்லமுத்து வண்ணத்தார்க்கல்லவஞ்சி
வேப்பந்தார்க்காசைகொண்டு விட்டாளே-பூப்பைந்தார்
சேர்ந்திருக்குநெல்வேலிச் சீவிலிமாறுதமிழை
ஆய்ந்திருக்கும்வீரமாறு. ௬௫

வேம்பாகினுமினிய சொல்லுக்குநீபுனைந்த
வேம்பாகிலும்முதவவேண்டாமோ-மீன்பாயும்
வேலையிலேவேலைவைத்த மீந்தவாநின்புயத்து
மாலையிலேமாலைவைத்தாண் மாண். ௬௬

இலகுபுகழாறை யேகம்பவாணன்
அகலவரும்வருமென் றஞ்சி-உலகறிய
வானவர்கோன்சென்னிமிசை வண்கைவளையெறிந்த
மீனவர்கோன்கைவிடான் வேம்பு. சுஎ

பாண்டியன்மனைவி.

வேண்டியபோதின்பம் விரும்புமடைந்தையரைத்
தீண்டியகையாலென்னைத் தீண்டாதே-பாண்டியா
முல்லைக்கதிபா முகம்பார்த்தகலநின்று
சொல்லைக்கடவதெல்லாஞ் சொல். சுஅ

கலையான்முலைமுடிக் கண்வளைக்குள்ளாக்கும்
விலைமாதர்தாம்வர விட்டாரோவிலைமாதர்
கொங்கையிலேதோய்ந்த குறைதீரத்துய்யசிவ
கங்கையிலே நீராடிவா. சுகூ

ஆக செய்யுள்-நூயகூ.

---

இலக்கணக்கவிகளாகிய
அவ்வவ்வமயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு

---

கலைவாணிநீயுலகிலிருப்பதுவுங் கல்விவல்லோரைத்
தலையாகக்காப்பதுவுமவர்நாவில் வாழ்வதுவுஞ்சத்தியமேயன்றோ
சிலைவாணநாவிருந்தாயிரம்புயங்க டுணிந்துமுயர்சிவனுற்றான்
தலையாவிகொடுத்திடுஞ்செங்குந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே

நிலைதந்தாருலகினுக்கு மியாவருக்கு மானமதை நிலைக்கத்தந்தார்,
கலைதந்தார்வணிகருக்குச்சீவனஞ்செய்திடவென்றே கைபிற்றந்தான்,
விலைதந்தார்தமிழினுக்குச் செங்குந்தரென்கவிக்கே விலையாகத்தான்,
தலைதந்தா ரெனக்குமொட்டக் கூத்தனெனப் பெயரினையுந்தான்தந்
தாரே. உ

பத்துக்கொண்டனதிக்கும் பதறிப்போயலையப்
பைம்பெற்றுரசைசிந்தப் பகிரண்டத்திடைநீள்
மத்துக்கொண்டுமதிக்குந் திரையாருநெடுமால்
வடிவாகிப்புவிகைக்கொண்டருண்மாறுபரணு
முத்துப்பந்தரினிற்குன் குருளைக்குஞ்சினவேள்
முருகற்கும்பெரிதியைகம்கா முனிவற்குஞ்சடிலக்

கொத்தர்க்கும்பதுமக் கொந்தயனுக்குமலதிக்
கூழைத்தண்டமிழைக்கேன் கொடியுங்காளமுமே. ௩

இன்றல்லோகம்ப னிறந்தநாளென்கவிதை
இன்றல்லோராசசபைக் கேற்குநாள்-இன்றல்லோ
பூமடந்தைவாழப் புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைநூல்வாங்கு நாள். ௪

இன்றல்லோகம்ப னெழுந்தநாளென்கவிதை
இன்றல்லோராசசபைக் கேறுநாள்-இன்றல்லோ
பூமடந்தைவாழப் புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைதூள் பூட்டுநாள். ௫

கட்டளைக்கலித்துறை.

மாங்குயிலாள்வில்லிதன்னம்பினுற்கம்பவாரிதியால்
ஓங்கியபூமெல்லணையொன்றினுலும்பர்மதியாற்
றீங்குறுமோநல்லெழில் குன்றுமோகொம்சீர்கெடுமே
காங்கெயனேசொல்லகளங்கனே கம்பைக்காவலனே. ௬

கரண்டகண்டத்தொனிக் கஞ்சியமான்கருங்கங்குலிலே
திரண்டவெள்ளத்திற்பிணமீதுசென்றனன்சேர்ந்ததனே
அரண்டவின்பங்கொடுமீளக்கராப்பற்றங்கொளுசால்
குரண்டகனத்திலுதைத்தனள்காணங்குலோத்துங்கனே. ௭

கோரத்துக்குக்கொப்போ கனவட்டமம்மானை
கூறுவதுங்காவிரிக்கு வைகையோவம்மானை
ஆருக்குவேம்புநிக ராகுமோவம்மானை
ஆதித்தனுக்குள்வீரனொரு மீனவனோவம்மானை
வீரர்க்குள்வீரனொரு மீனவனோவம்மானை
வெற்றிப்புலிக்கொடிச்சி மீன்கொடியோவம்மானை
ஊருக்குறைத்தநிகர் கொற்கையோவம்மானை
ஒக்குமோசோணாட்டுக்குப் பாண்டியநாடம்மானை. ௮

புகழேந்தி.

திருநெடுமாலவதாரஞ் சிறுபுலியோவம்மானை
சிவன்முடியிமேலுறுவதுஞ் செங்கதிரோவம்மானை
ஒருமுனிவநேரியிலோ வுரைதெளிந்ததம்மானை
ஒப்பரியதிருவிளையாட் டுறைந்தயிலோவம்மானை
கரையெதிரேபெரியது காவிரியோவம்மானை
கடிப்பகைக்குத்தாத்திய கண்ணியோவம்மானை

பாவைபடித்துஞ்சோழன் பதந்தனிலேவம்மானை
பாண்டியனார்பராக்கிரமம் பகரெளிதோவம்மானை ௯

ஒட்டக்கூத்தனும் சோழமகாராசனும் பாடியது.

ஆடுங்கடைமணி நாவசையாம லகிலமெங்கும்
நீடுங்குடையைத் தரித்தபிரானிந்த நீணிலத்தில்
பாடும்புலவர் புகழொட்டக்கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங்குலத்துங்க சோழனென்றேயெனைச் சொல்லுவரே. ௧௦

ஒட்டக்கூத்தன்.

இன்னங்கலிங்கத்தில் வேந்தருண்டென்றோ
தென்றமிழ்நாட்டைச் சீறியோ-சென்னி
அகளங்காவுன்ற வயிராவதத்தின்
நிகளங்கால்விட்டநினைவு. ௧௧

புகழேந்தி.

தென்னவன்றென்னர் பெருமான் றிறன்மதுரை
மன்னவன்கோக்களிற்றின் வல்லிக்கும்-பொன்னிநா
டாலிக்கும்வேந்த ரம்புயாகுலன்மகளிர்
தாலிக்குமொன்றே தளை ௧௨

புகழேந்தி.

சத்தம்பயிலும் புலவோர்கதலித் தண்டோட்டப்புகும்
பித்தனிவனென்பனெனைக்கண்டார் பெருத்துப்பணைத்துத்
தத்தம்பிற்கிடும்பார்வேந்தர் தங்கட்டகுபட
சத்தம்பசத்தங்காண் கங்குல்பானைச்சயத்துங்களே ௧௩

ஒட்டக்கூத்தன்

மானிற்குமோவிந்த வாளரிவேங்கைமுன்வயிற்றிற்செத்த
கானிற்குமோவிவ்வெரியுந் தணன்முன்கனைகடலின்
மீனிற்குமோவிந்த வெங்கண்சுறாமுனம்வீசுபனி
தானிற்குமோவிககதிரவன் றோற்றத்திற்றார்மன்னவனே. ௧௪

புகழேந்தி.

வானவனானந்த வாளரிவேங்கைமுன் வற்றிச்செத்த
கானவனவ்வெரியுந்தணன்முன் கனைகடலின்
மீனவனானந்த வெங்கண்சுறாமுனம் வீசுபனி
தானவனைக் கதிரவன்றோற்றத்திற் றார்மன்னனே. ௧௫

ஒட்டக்கூத்தன்.

நானேயினியுனை வேண்டுவதில்லை நளினமலர்த்
தேனேகபாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானேறனைய! விரவிகுலாதிபன் வாயில்வந்தாற்
றானேதிறக்குநின் கையிதழாகிய தாமரையே.

புகழேந்தி

இழையொன் றிறண்டுவகிர்செய்த நுண்ணிடையேந்துவள்ளைக்
குழையொன் றிரண்டு விழியணங்கேகொண்டகோபந்தணி
மழையொன் றிறண்டுகை மானாபரனின் வாயில்வந்தார்
பிழையொன் றிரண்டு பொறுப்பரோகுடியிற் பிறந்தவரே. கஎ

ஒட்டக்கூத்தன்.

வெள்ளத்தடங்காச்சினவாளை வேலிக்கமுகின்மீதேறித்
துள்ளிமுகிலைக்கிழித்துமழைத் துளியொடிறங்குஞ்சோணாடா
கள்ளக்குறும்பாகுலமறுத்த கண்டார்வண்டகோபாலா
பிள்ளைமதிகண்டப்பேதை பெரியமதியுமிழந்தாளே. கஅ

ஒளவையார்.

ஒட்டா வொருமதிகெட்டாய்

புகழேந்தி.

பங்கப்பழனத்துழுமுழவர் பலவின்கனியைப்பறித்தென்று
சங்கிட்டெறியக்குரங்கிளநீர் தனைக்கொண்டெறியுந் தமிழ்நாடா
கொங்கைச்சமராபதிபளித்த கோவேராஜகுலதிலகா
வெங்கட்பிறைக்குங் கரும்பிறைக்குமெலிந்தம்பிறைக்கும்விழிவேலே

ஒட்டக்கூத்தன்.

புள்ளிருக்குந்தார்மார்பன் பூம்புகார்வாழ்களியேம்
சுள்ளிருக்குங்கள்ளையுண்டுஞ் சோர்விலோஉள்ளபடி
சொல்லவாவாலி துரோபதையைமூக்கரிந்த
தல்லவாமாபாரதம்.வாலி-அரவக்கொடியுடைய துரியோதனன்.

என்றபெருவேன்யா னீசன்றிருமுடிமேல்
சென்றுவிளையாடுகின்ற தீபமே-என்றும்
செருப்புக்குத்தோல்வாங்குஞ் சென்னியாளங்கன்
பொருப்புக்குத்தோலாம் புயம். தே ல்-யானை. உக

வேளாளன்.

கோக்கண்டுமன்னா குறைகடற்புக்கிலர்கோகனகப்
பூக்கண்டுகொட்டியும் பூவாதொழிந்திலபூமுழுதுங்

காக்கின்றமன்னன்கவியொட்டக்கூத்தனின்கட்டுரையாம்
பாக்கொண்டொளிப்பார்களோதமிழ்பாண்டியபாவலரோ. உஉ

கருமான்.

செல்வன்புதல்வன்திருவேங்கடவன்செகத்குருவாங்
கொல்லன்கவியைக்குறைசொல்லுவோரைக்குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிபருந்தாட்டமாட்டிப்பகைவர்முன்னே
அல்லும்பகலுமடிப்பேன்கவியிருப்பாணிகொண்டே. உங

அம்பட்டன்.

விண்பட்டகொக்கென வெல்லும்வல்லூரின்விலவிலத்து
புண்பட்டநெஞ்சொடு மிங்குநின்றாய்பொட்டையாய்புகலாய்
கண்பொட்டையாயினுமம்பட்டனன்கவி வாணர்முன்னே
பண்பட்டசெந்தமிழ்நீயுந் திடுக்கிடப்பாடுவனே. உச

குயவன்.

மோனைமுத்தமிழ் மும்மதமும்பொழி
யானைமுன்வந் தெதிர்த்தவனாரடா
கூனையுங்குட முங்குண்டுசட்டியும்
பானையும்மவனையும்வனையச்செயு மங்குசப்பையயல்யான்.

தச்சன்.

சொன்னசந்தக்கவியாவருஞ்சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்னசந்தக்கவியேதென்றபோதி லெதிர்த்தவரை
வன்னசத்தங்கெடவாயைக்கிழித்திந்த வாச்சியனாற்
கன்னசந்தங்களினிக்கவியாப்பைக்கடாவுவனே. உசு

தட்டான்.

திகிரிவட்டக்குடைச்செங்கோல் பயன்செழுஞ்சிலம்பிற்
பகுதியொட்டகூத்த பண்டனை நாணப்பணைக்கவியுன்
மிகுதவொட்டத்தட்டிவிட்ட கைபோட்டி லுருக்கிக்குத்திப்
புகுதவொட்டத்தட்டிமேலறுகாவண்ணம் பொர்செய்வனே. உஎ

ஒட்டக்கூத்தனும்-புகழேந்தியும்.

வென்றிவளவின் விரல்வேந்தன்தம்பிரான்
என்றுமுதுகுக்கிட்டநன்கவசம்-துன்றும்
வெறியான் துடைக்கமழு மீனவர்கோன்கைவேல்
எறியான்புறங்கொடுக்கி நன்று. உஅ

பழியும்பகமு மெவர்க்கு முண்டாமிந்தப் பாரிலுனக்
கழியுஞ்சினையுங் கயறுமென்று-லகளங்கதுங்கா

பொழியும்பொழுதெங்கள் பெண்சக்ரவத்திமுகத்திரண்டு
விழியும்புருவமுமாகியந்தோவுனை வெல்கின்றதே. உகூ

திக்குளெட்டுக்கயந்துக்க முற்றுந்திடுக்கிட்டலற
மைக்கடற்குட்சரந்தைக்க விட்டோர்க்கிடமாமதுர
இக்குமுற்றிக்கணுசாற்றூர் விட்டுத்தெறிந்திட்டமுத்தைக்
கொக்குமொக்கிவிக்கிற்கக்குமச்சோலைக் குறுங்குடியே. ௩௰

ஆக-செய்யுள்-௩சரு.

கவிவீரராகவமுதலியார்.

தேன்பொழிந்தவாயான் றிருவேங்கடத்துடனே
ஏன்பிறந்தான்கண்ணுக் கினியானே-வான்சிறந்த
சீதேவியாருடனே செய்யதிருப்பாற்கடலில்
மூதேவியேன்பிறந்தாள்முன். க

இம்பர்வாமெழல்லை யிராமனையேபாடி
யேன்கொணர்ந்தாய்பாணநீ யென்றான் பரணி
வம்பர்தங்களப மென்றேபூசுமென்றாள்
மாதங்கமென்றேன்யாம் வாழ்ந்தேமென்றாள்
பம்புசீர்வேழமென்றேன் றின்னுமென்றாள்
பகடென்றேனுழுமென்றாள் பழனந்தன்னைக்
கம்பமாவென்றேனற் களியாமென்றாள்
கைமாவென்றேன்சும்மா கலங்கினளே. உ

இல்லெனுஞ்சொல்லறியாத சீமையில்வாழ்தன்னைப்போல்யாழ்ப்பாணன்யான்,பல்லைவிரித்திருந்தக்கால் வெண்சோறும் பழந்தூசுப்பயாமற், கொல்லநினைந்தேதனது நால்வாறைப்பறிசென்று கொடுத்தான்பார்க்குள், தொல்லையெனதொருவாய்க்கு நல்வாய்க்குமிரையெங்கேதுரப்புவேனே. ௩

முன்னாளிருவர்க்கும் யாக்கையொன்றாக முயங்கினமால்
பின்னாட்பிரியன்விரையையென்று யினம்பேசலுறும்
இந்நாட்கொழுநன் மனையென்றான்யின்னமுமோர்
சின்னாளிலெப்படியோ வையநீயின்றுசெப்புகமே. ச

வாழுமிலங்கைக்கோமானில்லைமானில்லை
ஏழுமராமரமோ வீங்கில்லை-ஆழி

அலையடைத்தசெங்கை யபிராமாவின்று
சிலையெடுத்தவாறெமக்குச் செப்பு. ௫

செஞ்சுடரின்மைந்தனையுந் தென்னிலங்கைவேந்தனையும்
பஞ்சவரிற்பார்த்தனையும் பாராதே-விஞ்சு
விரதமேபூண்டிந்த மேதினியையாண்ட
பரதனையும்ராமனையும் பார் ௬

வடவைக்கனலைப்பிழிந்துகொண்டு மற்றுமொருகால்வடித்தெடுத்து
வாடைத்துருத்திவைத்தூதி மருகாய்ச்சிகுழம்புசெய்து
புடவிக்காயவர்தமைப்பாடிப் பரிசுபெறுமற்றிரும்பிவரும்
புலவர்மனம்போர்நெருப்பைப் புழுகென்றிரைத்தாற்பொருப்பாதே
அடவிக்கதலிபசுங்குருத்தை நச்சுக்குறலென்றஞ்சியஞ்சி
அஞ்சொற்கிளிகள் பஞ்சாரம்விட்டகலாநிற்குமகளங்கா
திடமுக்கடவாரணமுகைத்த தேவேதேவசிங்கமே
திக்குவிசயஞ்செலுத்திவரு செங்கோனடாத்துமெங்கோனே. ௭

மாதரணிமென்முலைதோய் மாராசிதம்பரபூ
மாதரணிராசர்மகிழ் மாவனச-மாதர்
மறுகிடத்தேயம்பொன் மடவார்பழிக்கநெஞ்ச
மறுகிடத்தேங்குந்துரைபபெண் வா. ௮

சொல்லுமல்லும்பகலுஞ் சோறுகிடைகிடைக்கும்
கல்லுமுருகக் கனிந்தாற்றும்-புல்லியணை
விண்கலக்குங்கீர்த்தி வேள்சிதம்பரக்குமுனு
பெண்கலக்கங்கொண்டுநின்றன் பேர். ௯

வந்தனந்தமென்பூ மணந்தோய்ந்துபாயப்பரி
வந்தனம்விம்மிச்சோர்ந்தாள் வாகோடி-வந்தனங்கள்
அன்னமனங்கொள்ளாம லாள்சிதம்பரக்குமுனு
அன்னமனங்கொண்டுயவே யாங்கு. ௧௦

மாவாரிமுத்தவெண்பன் மாதுமலையத்தணிசேர்
மாவாரிமுத்தளித்தவை போகா-மாவுச்
சிதம்பரவையா நீதிக்குளுயர்பூமா
சிதம்பரவையாநீ திக்கு. ௧௧

பங்கஜமேவியசௌ பாக்கியசுபமானளித்த
அங்கஜவேவெங்கணையா லாவிசொந்த-எங்களிட
மாமரஞ்சிதம்பரவு மாதினையாள்கோடிநமஸ்
காரசிதம்பர யோகா. ௧௨

இன்னங்கலைமகள்மீதிற் புத்தகமேந்தியந்தப்
பொன்னம்பலந்தனிற் புக்கிருந்தாளென்புண்ணியமோ
கன்னல்களந்தைக்கவிவீரராகவன் கச்சியிலே
தன்னெஞ்சமேடெனக் கற்றானொருமுத்தமிழையுமே. ௧௩

முன்னாட்டுத்தவமுனியுஞ் சேடனும்வான்மீகனும்முன்னினல்லார்
தென்னாட்டுமலையிடத்து பாரிடத்துபுற்றிடத்துசென்றுசேர்ந்தார்
இந்நாட்டுப்புலவருனக் கெதிரில்லையேகவிவீரராகவநீ
பொன்னாட்டுப்புலவருடன் வாதுசெய்யப்போயினையோபுகலுவாயே.

கோளாவேந்துலகிலிந்தப் புதுமையுண்டோ வெனமொழிந்தகுமுனா
யாளரைவந்தமைத்தோய்ந்தகற்புடையபாஞ்சாலியணைந்தவீமன்(கே
வாளரிபோலருகிருக்க மலயவெற்பிலிருந்துவந்த மாமனாரைச்
சாளரவாசலைத்திறந்து வரவழைத்துமுலையாரத் தழுவினானே. ௧௫

பணியாரந்தோசை யிலக்கொங்கைதோய்ந்திடப் பார்ப்பர்பல்லி
பணியாரந்தோசை யிலாச்செந்துளாய்பிறப் பார்களென்னோ
பணியாரந்தோசைமுன்னோருக்கிட்டேத்திப் பழனிச்செவ்வேள்
பணியாரந்தோசை வாகாயன்னோர்க்கென்னபாவமிதே. ௧௬

வீரஞ்சொரிகின்ற பிள்ளாயுனக்குப்பெண் வேண்டுமென்றால்
ஆருங்கொடாருங்க ளப்பன்கபாலி யம்மான்றிருடன்
ஊருஞ்செங்காடு நின்றன்முகம்யானை யுனக்கிளையோன்
போருங்கடம்பனுன்றாய் நீலிநிற்கும்பெருவயிறே. ௧௭

கட்டுச்சோற்றைப் பறிகொடுத்தபோது பாடியது.

சீராடையற்றவைரவன்வாகனஞ் சேரவந்து
பாராருநான்முகன் வாகனந்தன்னைமுன்பற்றிக்கௌவி
நாராயணனுயர் வாகனமாயிற்று நம்மைமுகம்
பாரான்மைவாகனன் வந்தேவயிற்றினிற் பற்றினவே. ௧௮

மைவாகனன்-அக்கினிதேவன்.

பாண்டியன்மாலைகண்டாய் மகளேநினைப்பார்த்தவர்க்கு
வேண்டியவின்பமிகவருமோ வெண்ணெயேதிருடித்
தாண்டிக்குதித்தநற்கோதண்டராமன் றடவரைமேல்
ஆண்டியிருப்பிடந் தாதனிருப்பிடமானபின்னே. ௧௯

சோனையுங்காத்து நல்லானையுங்காத்துத் துரோபதைதன்
தானையுங்காத்தடைந் தானையுங்காத்துத்தடத்தகலி
மானையுங்காத்தனு மானையுங்காத்து மடுவில்விழும்
ஆனையுங்காத்தவனென்னைக்காப்ப தரிதல்லவே. ௨௰

பொய்யருக்குப்பொய்யுரைத்தால் வெற்றியாமவருக்குப் பொய்யாகாதா,மெய்யருக்குப்பொய்யுரைத்தாற்றேய்பிரைபோற்றவங்குறையுமிடியுண்டாகும், துய்யதாய்தந்தையர்க்குப்பொய்யுரைத்தால் வறுமைபிணிதொலையாதென்றும், உய்யவருடேசிகர்க்குப் பொய்யுரைத்தாரகமதுவுண்மைதானே. ௨௧

ஆக செய்யுள் ௩௱௬௬.

—(*)—

## படிக்காசுத்தம்பிரான்.

—(*)—

அடகெடுவாய்பலதொழிலு மிருக்கக்கல்வி
யதிகமென்றேகற்றுவிட்டோ மறிவில்லாமல்
திடமுளமோகனமாடக் கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத் தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசயராகப் பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத் தையலார்தம்
இடமிருந்துகுற்றேவல் செய்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகி லிரக்கின்றோமே. ௧

பெற்றுளொருபிள்ளையென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றுதுகஞ்சிகுடிக்கத்தரமல்ல பாலிரக்கச்
சிற்றூருமில்லையிவ்வெல்லாவருத்தமுந் தீரவொரு
கற்றுதரவல்லை யாவல்லைமாநகர் காளத்தியே. ௨

வழிமேல்விழிவைத்து வாடாமலென்னை யாருமற்றோர்
பழியாமற்பிள்ளையும் பாலென்றழாமற் பகீரெனுஞ்சொல்
மொழியாமலென்னை வரவிட்டபாவி முசித்துச்சதை
கழியாமலாவளித் தாய்மாநகர் காளத்தியே. ௩

சீதக்காதிபேரில்.

ஓர்தட்டிலேபொன்னு மோர்தட்டிலேநெல்லு மொக்கவிற்கும்
கார்தட்டியபஞ்சகாலத்திலே தங்கள்காரியப்போர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலே யன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால் சீதக்காதிவரோதயனே. ௪

நேசித்துவந்த கவிராசர்தங்கட்கு நித்தநித்தம்
பூசிக்குநின்கைப் பொருளொன்றுமேமற்றப் புல்லர்பொருள்
வேசிக்குஞ்சந்து நடப்பார்க்கும்வேசிலைக்கும் வேளைசெயுந்
தாசிக்குமாகுங்கண்டாய் சீதக்காதியாநிதியே. ௫

ஈயாதபுல்லரிருந்தென்ன போயென்னவெட்டிமரம்
காயாதிருந்தென்னகாய்த்துபலனென்ன கைபரப்பிப்
போயாசகமென்றுரைப்போர்க்குச் செம்பொன்பிடிபிடியாய்
ஓயாமலீபவன் சீதக்காதியொருவனுமே. ௬

காய்ந்துசிவந்தது சூரியகாந்தி கல்லினிலே
தோய்ந்துசிவந்துமின்னார்நெடுங்கண்க டொல்பலநூல்
ஆய்ந்துசிவந்தது பாவாணர்நெஞ்சமனுதினமும்
ஈந்துசிவந்ததுமால்சீதக்காதியிருகரமே. ௭

தேட்டாளன்காயன் றுறைசீதக்காதிசிறந்தவச்ர
நாட்டான்புகழ்க்கம்ப நாட்டைவைத்தான்றமிழ்நாவலரை
ஓட்டாண்டியாக்கி யவர்கடம்வாயில் ஒருபிடிமண்
போட்டானவனு மொளித்தான்சமாதிக் குழிபுகுந்தே. ௮

வேல்கொடுத்தாய்திருச் செந்தூர்க்கம்பியின்மீதுவைக்கக்
கால்கொடுத்தாய்நின் மணவாளனுக் கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய்மத வேளுக்குமூர் பயப்படச்செங்
கோல்கொடுத்தாயன்னையேயெனக் கேதுங்கொடுத்ததில்லையே.

பொல்லாதமூர்க்கருக் கெத்தனைதான்புத்தி போதிக்கினும்
நல்லார்க்குண்டான குணம்வருமோ நடுராத்திரியிற்
சல்லாப்புடவைகுளிர்தாங்குமோ நடுச்சந்தையினிற்
செல்லப்பணஞ்செல்லுமோ தில்லைவாழுஞ்சிதம்பரனே. ௧௦

மூவேந்தருமற்றுச் சங்கமும்போய்பதின் மூன்றொடிரு
கோவேந்தமற்றொருவேந்தன் குடையுமற்றுப்
பாவேந்தர்காற்றி லிலவம்பஞ்சாகப் பறக்கையிலே
தேவேந்திரதாருவொத்தாய் ரகுநாதசெய்துங்கனே. ௧௧

முன்னனின்னன்னை முலையூட்டிமையிட்டுமுக்குசிந்திக்
கன்னமுங்கிள்ளியநாளல்லவே யென்னைக்காப்பதற்கே
அன்னமுமஞ்சையும்போலிரு பெண்கொண்டவாஸ்பிள்ளைநீ
இன்னமுமஞ்சின்னவன்றனோ செந்தூரிலிருப்பவனே. ௧௨

முற்கரையப்பாரையேறவிட்டாட்டிக் கொண்டுமுதல்வருள்ளக்
கற்கரைக்குப்படிபோதித் திருங்கருணைக்கல்லைச்
சிற்பறைக்குட்டியை யெங்கெங்குதிக்குஞ்செங்கரும்பின்
சற்கரைக்கண்டேன் செந்தூரரெனுந்தானத்திலே. ௧௩

சின்னஞ்சிறுபிள்ளை செங்கோட்டுபிள்ளை சிவந்தபிள்ளை
பொன்னன்மணிப்பிள்ளை பூலோகமெங்கும்புகழும்பிள்ளை
சொன்னெஞ்சுழல்குன்றசூரனைவென்றசொக்கேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளை செந்திற்குறத்திக்குமாப்பிள்ளையே. ௧௪

நாட்டிற்சிறந்ததிருமாலையாதுங்கநாகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற் கலைத்தமிழ்தற்
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்றொரு பைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தா யிரைதாவென்றுகூப்பிடுதே ௧௫

விண்ணுக்குமண்ணுக்கும் போய்விளங்குதேவேந்திரனென்னுங்
கண்ணுக்கினியதுரை சீதக்காதிகமலநிகர்
தண்ணுக்கிசைந்தவதனசந்ரோதய சாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான் புலவோர்முகம்வாடியதே. ௧௬

மறந்தாகிலுமரைகாசுங்கொடாமட மாந்தர்மண்மேல்
இறந்தாவதென்னவிருந்தாவதென்னவிறந்துவிண்போய்ச்
சிறந்தநாளுங்காயற்றுறையை சீதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர்தமக்குப் பிழைப்பில்லையே

என்னனைக்கன்றுமுத்தனைக்குனிக்கு மிறையனையனைக்குமேயன்று
மன்னனைக்கொன்று பின்னனைக்குதவாவன்புளாய்வருந்திடுவேனே
முன்னனைக்கொன்றுவிசயனைப்புரந்த முதுபகையவன்பிதாவுரும்
கன்னனைக்கொன்றுவிசையனைப்புரந்தகவுத்துவாகாயலாதிபனே ௧௮

கல்லடிக்குமுளியிரண்டு காதடிக்குளப்பதெனக் கவிதைகெட்டு
பல்லடிக்கிடுகிடெனப் பறையடிக்குநெஞ்சர் தமைப்பாடுவனோ
வில்லடிக்கும்பிரம்படிக்குங்கல்லடிக்கும்விரும்பிநின்றமெய்யனீன்ற
செல்லடிக்குந்தடவரையிற் சேறடிக்கவலையடிக்குஞ் செந்திலானே.

குட்டுதற்கோபிள்ளை பாண்டியனிங்கில்லைக்
குறும்பியளவாக்காதைக் குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோ வில்லியில்லை
இரண்டொன்றாமுடிந்துதலை யிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக் கூத்தனில்லை
விளையாட்டாகக்கவிதைதனை விரைந்துபாடித்
தெட்டுதற்கோவறிவில்லாத் துரைகளுண்டு
தேசமெங்கும்புலவரெனத் திரியலாமே. ௨௰

சீதக்காதியின்பேரில் தாசிபாடியது.

தினங்கொடுக்குங் கொடியோனே
தென்காயற்பதியானே சீதக்காதி
இனங்கொடுத்த வுடமையல்ல
தாய்கொடுத்த வுடமையல்ல வெளியாளாசை
மனங்கொடுத்துமிதழ்கொடுத்து மபிமானந்
தனைகொடுத்து மருவிரண்டு
தனங்கோடுத்தவுடமையெல்லாங் கள்ளர்கையிற்
பறிகொடுத்து தவிக்கிறேனே. உ௧

ஆகசெய்யுள்-௩௮௭.

சவ்வாதுபுலவர்.

கிளையாளன்சேதுபதி ரகுநாயகன்கிஞ்சுகவாய்
இளையார்கல்வியிடத்துநம்மீச ரெடுத்துமென்றும்
வளையாதபொன்முடி சற்றேவளையுமகுடமன்னர்
தலையாடிகையிற் காளாஞ்சியேந்துஞ்சமயத்துமே. ௧

பானுகிரணம் பார்க்கும்பங்கேருகநிலவு
தானும்வரப்பார்க்குஞ் சகோரங்கள்-வானமரும்
மையைப்பார்க்கும்மயில்கண் மாவிசையானந்தரங்கன்
கையைப்பார்க்கும்புலவோர் கண் உ.

பாளையிலான்பின்னங்காற் பஞ்சுளியென்றேசுளிப்பான்
பாலையிலாள்பின்னென் படுவாளோ-சோலையிலே
ஆடுமயிற்பிரம்பூ ரானந்தரங்கதுரை
நாடுதனிலென்னிள மின்னாள். ௩.

பஞ்சு-உளியென்று கோபிப்பாள்.

அலையான்கவடுபடா னருடங்நாயான்
இலையென்பதோர்நாளுமில்லை-கலைநேர்ந்த
காலைமுகத்துக்கிருஷ்ணனருள் சற்குணசிந்தாமணியைச்
சோலையென்றுசொன்னவரார் சொல்
செல்லப்பன்கச்சியிமேல சேர்ந்ததற்பிணைமணிகள்
நல்லதருவேக நவநிதியஞ்-சொல்லவே

முட்டின்றியொன்றிரண்டு மூன்றுநான்கைந்தாறேழ்
எட்டொன்பான்பத்தானதே. ரு

கச்சிசெல்லப்பன் றேன்றினபின், அவனோடுசேர்ந்து ஆ-ஒன்று இரண்டாயின. மணிமூன்றுநான்காயின தருஐந்து ஆறாயின மேகம் ஏழு எட்டாயின நிதியம் ஒன்பது பத்தாயின.

ஆக-செய்யுள்-ருாசுஉ,

—*—

## காளிமுத்து.

நெல்லைச்சொன்னுபரணத்தைக் கைம்மாவைநிதநிதமும்
வெல்லச்சொன்னலவர்க்கியுங் குழந்தைவிசயநின்பாற்
சொல்லச்சொன்னளென்னையிப்போ தென்மையலைத்தீர்த்திடென்று
சொல்லச்சொன்னளந்தமின்னுள் பன்னுண்மலர்ச்சோலையிலே. க

பழுத்தான்மரத்திற்பறவையைப்போல் நற்காவலர்க்குக்
கொழுத்தான்வழங்குங்குழந்தை யென்கொங்கைக்கூறுகிறாள்
அழுத்தாதவேளையில் வெந்நீர்பன்னீர்மதியும்மழல்சேர்
கொழுத்தான்மதனுங் கொழுத்தான்பருவக்குறிப்பறிந்தே. உ

பொன்னூர்மருமத்தன் பூம்பாவைவேலப்பூபனருள்
மன்னுகுழந்தைக்குருநாத நீதவரோதயனே
பன்னுண்மலர்க்குழற் பின்னுளெந்நாளும்பரிந்தணைய
நன்னுளிந்நாள்வரச்சொன்னன் மின்னுண்மணநாளென்னவே. ௩

மாகமழைக்கரன்பூம் பாவைவேலப்பன்மைந்தன்பின்னூர்
மோகன்குழந்தைக்குருநாதன்வெற்பின் மோடிவைத்தும்
பாகமொழிக்குழன் மாதேவிரித்துப்படமெடுக்கும்
நாகமறைத்துக் குழனமக்கீத னலமல்லவே. ௪

போதத்தைமேவு மயிலைக்குழந்தைக்குப் போர்மதன்செய்
தேகத்தையுங்குயிலுதத்தையுந் தனக்கிண்ணத்தினு
மோகத்தையுந்துயி லாதத்தையும்மயன் முட்டுதென்றல்
வாதத்தையுந்தரியாகத்தையுஞ்சொல்லிவாதத்தையே. ரு

வண்டாங்கிசைபயின்மாலைவேலப்பன்மைந்தநிதி
கொண்டான்கிணையைதளர்த்தான் குழந்தைக்குவட்டின்மின்னே
பண்டாங்கிசையினண்மாலகொண்டு பான்பன்குளத்தினடுக்
கண்டாங்கியைக்கிழித் தாலென்னபாவந்தருதுவதே. சூ

பாம்பன்-அரவாபரணன்- குளத்தினடுக்கன் - நெற்றிக்கண்ணாகிய அக்கினி-தாங்கி-அவன்வாகனமாகிய-ஆடு.

வனக்கொந்தளவஞ்சி பூஞ்சோலைசூழவளருமிரு
தனக்குன்றுசெய்யுந்தொழில்சொல்லவோ தமியேனைக்கண்டாற்
கனக்கும்புளகிக்கும் பாரிக்கும்பூரிக்குங்கண்கறுக்குஞ்
சினக்குந்தனக்குமெனக்குமுண்டாக்குந்தினஞ்சண்டையே. எ

ஆகசெய்யுள்-௩௬௬.

---

## பலபட்டைச் சொக்கநாதப்புலவர்.

---

சுரராசஜம்பு வைரியென்மாது சரீரமெல்லாம்
பொரராசரத்துக் கிகல்பொருட்டேபகல்போற்கிரண
சுரராசதிவ்ய கிரீடகவிபாடத் துடித்தடிக்கைப்
பரராசராவண ராமாபராக்ரம பாண்டியனே. க

காளைமுகிற்குல மெல்லாம்விளங்கு கடிந்திட்டநீ
வேளையுமப்படிச் செய்திலையேவிளை நெல்வயலில்
வாளைகுதித்து வளர்பூங்கமுகின் மடலொடியப்
பாளைமுறிக்குந் துறைவாபராக்ரம பாண்டியனே. உ

ஆர்க்குங்குளிரு நிலவுயர்கோனின் னலங்கல்பெறு
வார்க்குங்குமமுலை யாட்கனலாகும் வடக்குந்தெற்கும்
மேற்குங்கிழக்கு மொருவெளுப்பாய்நின்று விண்ணையெட்டிப்
பார்க்கும்புகழுக் கிறைவாபராக்ரம பாண்டியனே. ௩

சுரம்பொறுத்த விழியாள்கதலிக் குறுத்திலிட்ட
ஈரம்பொறுக்க வருந்திலளேயிந்திர னிட்டசெம்பொன்
ஆரம்பொறுத்த புயமீதிலாயிர நாவுரக
பாரம்பொறுத்த புயலேபராக்ரம பாண்டியனே. ௪

வெறிக்குங்குமக்கொங்கை மீதேயிளம்பிறை வெள்ளிநிலா
எறிக்கும்பொழுது வந்தாயிலையே யிலங்காபுரியைக்
குறிக்கின்றராவணன் பொன்முடிபத்துங் குரங்கைவிட்டுப்
பறிக்கின்றசண்பக மாறாபராக்ரம பாண்டியனே. ௫

சுரும்பேய்க்கும்வாட்கண்ணி பங்காளர்கண்கொண்டு சுட்டுவிட
பெரும்பேய்க்குவேப்பிலைக்காப்புவாய்ப்புணர் சேர்பசுங்கோங்
கரும்பேய்க்குமென்முலையா ரமுதூட்டியடர்ந்துகொ
வரும்பேய்க்குவானுத வீங்குலசேகர மன்னவனே. ௬

பூணித்திறத்து புயல்வீரமாறன் புகல்கவிக்கு
நாணிப்புலவர் செல்லாதென்செய்வாரிந்த நானிலத்தில்
ஆணிக்கனக மணந்தரிற்பூமணம் யார்கொள்ளுவார்
மாணிக்கத்தித்திக்கி லென்னுருமற்ற மதுரங்களே. எ

எண்ணீர்மைநூலுக் ககத்தியனுமிவ னென்பதெல்லாம்
வெண்ணீர்மையன்றி விரகல்லவேயிவ் வியனுலகிற்
பண்ணீர்மைதோரும் பராக்ரமமாறன் பதங்கழுவுந்
தண்ணீர்குடித்தல்லவோ கும்பயோனிதமிழ்க்கற்றதே. அ

காம்புவனம்புக்க தோளாட்குநின்றன் கழுத்திலிட்ட
வேப்புதனக்கும் விதியில்லையோவெகுண்டாச்சியர்கள்
தாம்பினடிக்க வுறலோடுகெட்டத் தடைபட்டுச்சீப்
பாம்பினடிக்கின்ற மாலேபராக்ரம பாண்டியனே. கூ

கடந்தூங்குவேழப் பிடற்கேவரக்கண்டு கண்கண்முத்து
வடந்தூங்குவாடும் இளிக்கென்செய்வேன் பணிவாய்திறக்க
விடந்தூங்குபாம்பின் படத்தின்மிசைதிமி தித்தியென்ப
படந்தூங்கவாடும் புயலேபராக்ரம பாண்டியனே. ய

சடம்பழுக்குங்கிழட்டுக்குருசீர்தலை சாய்த்துநின்று
முடம்பழுக்குங்கைதை நற்றுறையிற்றெங்கு முப்புடைக்காய்
குடம்பழுக்குங்கொங்கை யாங்குலசேகரண் கூடலிலென்
உடம்பழுக்கும்சிறை யம்பழிகார ருணந்திலமே. கக

மற்றொப்பிலாக்கொடைச் சண்பகமாற வரோதயநின்
வெற்றிக்கிரண்டுண் டடங்காதகாரிய மேருகிரிச்
சுற்றிலுங்கீர்த்தி யடங்காதுநின்னுடைத் தோடழுவாக்
கற்றறைக்குழலிக்கு மாலடங்காதிது கைகண்டதே. கஉ

விருத்தம்.

ஒருதாணுதல்பண் டுளங்களிக்க வுயர்வான்மூகடு கிழித்தெறிந்து
மருவார்தருவின் மரங்கொணர்ந்த மதுவடிவே லதிவீரா
அரவார்வேம்பின் பசுங்கண்ணி யந்தியிறைவிக் கருளென்று
இரவாதிருக்கநீயளித்தற் கிரங்காதிருந்தா யிதுநாளே. கங.

இரட்டையர்.

தேங்குபுகழாங்கூர் சிவனேவல்லாளியப்பா
நாங்கள்புசித்திருக்கை ஞாயமோ-பேர்ங்காணும்

கூறுசங்குதோன்முரசு கொட்டோசையல்லாமல்
சோறுகண்டமூளியார் சொல். கச

மூடர்முன்னேபாடன் மொழிந்தாலறிவரோ
ஆடெடுத்ததென்புலியூ ரம்பலவா-ஆடகப்பொற்
செந்திருவைப்போலணங்கைச் சிங்காரித்தென்னபயன்
அந்தகனேநாயக னானல். கரு

வேயீன்றமுத்தர் தமை வெட்டினனேயிடையன்
தாயீன்றமேனி தயக்கவே-பேயாகேள்
எத்தனைநாளென்றே யிடறுவான்பாற்குடத்தை
அத்தனையும்வேண்டு மவர்க்கு. கசா

மாங்காட்டுவேளாளன் மகளைமருமகன்பாற்
போங்காட்டிலின்பம் புணர்ந்தானே-ஆங்காணும்
மக்கண்மெய்தீண்ட லுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ் செவிக்கு. கஎ

குன்றுங்குழியுங் குருவழிநடப்ப
தென்றுவிடியுமெமக் கென்கோவே-ஒன்றுங்
கொடாதானைக்கோவென்றுங் காவென்றுங்கூறில்
இடாதோநமக்கிவ் விடி. கஅ

நானென்றுநஞ்சிரு நற்சாபங்கற்சர்பம்
பாணந்தான்மண்டின்ற பாண்பே-தானுவே
சீரூர்மேவுஞ் சிவனேநீயெப்படியோ
நேரார்புரமெரித்த நேர். ககூ

காளமேகப்புலவரும்இரட்டையரும்

ஆசுகவியா லகிலமெங்கும்
வீசுபுகழ்க்காள மேகமே-பூசுரா
வெண்கொண்டசெந்தணலாய் வேகுதேயையையோ
மண்டின்றபாணமென்ற வாய். உ0

கட்டளைக்கலித்துறை.

புராதனமான தமிழ்ப்புலவீரிந்தப் புன்குரங்கு
மராமரம்விட்டிங்கு வந்ததென்னேவகை கேட்டிலையோ
தராதலம்வென்ற தமிழ்மாரனையுந் தன்தம்பியையும்
இராகவனென்று மிலக்குவனென்று மிருந்ததுவே.

ஆகசெய்யுள்-உ௰.

—(*)—

ஒப்பிலாமணிப்புலவர்பாடிய அகவல்.

ஆடரிபடர்ந்த கோடுயரடுப்பில்
ஆம்பிபூப்பத் தேம்பசியுழல
இல்லிதூர்ந்தன பொல்லாவருமுலை
சுவைதொறுஞ் சுவைதறும் பால்காணமற்
குழவிதாய்முகம்நோக்க
மனைவியென்முகநோக்க நாமும்
நின்முகநோக்கிவந்தனன் குமணா. க

குமணராசன்

அந்தநாள்வந்திலை யறுங்கவிப்புலவோய்
இந்தநாள்வந்துநீ நொந்தனையடைந்தாய்
தலைதனைக்கொடுபோய்த் தம்பிகைகொடுத்தென்
விலைதனை மீட்டுன் வெறுமைநோய்களையே. உ

மாங்கையிலேவாழ மகுடத்தியாகியுனக்
கேந்துதழும்போ விரண்டுளதோ-வேந்தர்
முடித்தழும்புன் காலிலே முத்தமிழோர்க்கீயும்
படித்தழும்புன்கையிலே பார். ௩

வெம்புங்காலை வெதும்பிவிழுஞ்சிரம்
செம்பொன்கோடி விலையெனச்-சிந்தித்தான்
உம்பர்நாடு முலகினுந்தேடினும்
எம்பிபோலெமக் கியாவருரியரே. ச

ஆறுபெருக்கற் றருந்தடர்தான்பட்டாலும்
ஊறலமையாதோ உலகாற்றத்-தேற
வரியையேயானலு மென்கவியைமாற்றச்
சிறியையோசீர்குமணா செப்பு. ரு

வில்லைவளையாதே மீசைமுறுக்கிச்சினத்து
முல்லமலரம்பையென்மேன் மோதாதே-நில்லடா
வந்தாரடாமுருகர் வந்துகடப்பந்தாரைத்
தந்தாரடாமன்ம தா. சு

செந்திற்குமாரன் றிருவழகைக்கண்டவுடன்
வந்திக்குமாரன் வதைக்கிறான்-அந்திக்கு

முன்னமேசென்றென்று மோகமெலாஞ்சொல்லிவந்தால்
அன்னமேகூப்பிடுவேன் யான். எ

தங்கடனமிருக்கத் தார்வேந்தரெல்லோரும்
எங்கடனத்துக்கே சிப்பார்-எங்கடனம்
கச்சிருக்கும்பாலிருக்குங் காம்பிணங்கள்பட்டு
பிச்சிருக்கும்வேண்டாம் பிள்ளாய். அ

இடுவோர்சிறிதிங் கிரப்போர்பெரிது
கெடுவாய்நமனே கெடுவாய்-படுபாவி
கூவத்துநாரணனைக் கொன்றுயேகற்பகப்பூங்
காவெட்டலாமோ கரிக்கு. கூ

மையூருங்கண்ணுர் மயங்கப்பொருகரும்பு
கையூருங்காமாவுன் கண்ணனை-செய்யூர
வளவனையினுனென்பிரிந்த வாறுனக்குச்சொன்ன
உளவனையினுவனன் றுரை. ௰

வளவன் நயினுன்.

ஆழிவாய்ச்சத்த மடங்காதோயான்வளர்த்த
கோழிவாய்மண்கூறு கொண்டதே-ஊழி
திரண்டதோகங்கு றிசைநாஞரத்தேரும்
உருண்டதோபாதாளத் துள். கக

அரவங்கரந்ததோ வச்சிமரமற்றுப்
புரவிக்கயறுவிழப்போச்சோ-இரவிதான்
செத்தானேவில்லையே தீவினையோபாங்கியெனக்
கெத்தால்விடியு மிரா. கஉ

மூலேயுங்குழலு முளேப்பதற்குமுன்னே
கலேயும்வலேயுங் கழன்றுள்-மலேயில்
சிராப்பளியானேரிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பழியுங்கொள்ளானிவள். கங

பாண்டியன்றுரானே பசலேமுலேப்பாலானேன்
ஆண்டிகையிலேந்தியதொன் றுனே-வேண்டியபோ
துள்ளங்கைத்தேனுனே னேர்மதலேபூத்தபின்
புள்ளங்கைதேனு னுனக்கு. கச

முட்டத்துபன்றி முளைறித்திருப்பதத்தைக்
கிடத்துப்பன்றிக் கிடந்தேனே-தொட்டு
மருங்கிலேசங்கொடுத்த மாலையெனக்கு
வருங்கிசங்கெடுக்கவா. ௧௫

மாதர்க்கிதங்கவி வாணர்க்குச்சாலவணக்கங்குரு
நாதர்க்குநீதியே சடாசாராண்பியைந்தவர்க்குக்
கோதற்றவாசகம்பொய்க்குப்பொய் கோளுக்குக்கோளறிவி
லாதார்க்கிரட்டிப் பறிவுடையோர்செய்யுமாண்மைகளே. ௧௬

குழற்காலரவிந்தங் கூம்பக்குமுதமுரையவிழ்ப்ப
நிழற்காண்மதியன்மன்றோ நின்றிருக்குலநீயவன்றன்
அழற்காலவிற்சடைமீதேழிருந்துமவ் வந்திவண்ணன்
கழற்கால்வணங்குதியோ வணங்காமுடிகேத்தவனே. ௧௭

பட்டானதைவண்டு பாடுங்குழற்சண்பகவல்லிதன்
றட்டாமரையைத்தொழுதேனினி யென்றலையில்விதி
தீட்டான்கருமுகில் போலேவருமந்தச் சேட்டருமை
மாட்டானினிவாமாட்டான் வந்தாலும்வணங்குவேனே. ௧௮

சீமானுநாமகள்கோமானுமேத்திற் றினம்பணிந்து
பூமாலைசாத்தியரசன்சபாபதி பொன்னடிக்கும்
பாமாலைசாத்திநின்றே னவனுண்மிகப்பாடுபட்ட
ஏமாவுன்றுலினியாமாவென்பாலினி யெய்துதற்கே. ௧௯

தடங்கொண்டகடல்வில்லின் மெல்லெனப்பூட்டிதமதுரத்தில்
வடங்கொண்டுசாத்தி விடங்கொண்டுபார்த்துமணிகிளரும்
படங்கொண்டபாம்பில் பழகியபின்மலைப்பாவைதன்னை
இடங்கொண்டவொற்றித் தியாகேசர்புற்றினிடங்கொண்டதே. ௨௦

விடங்காட்டிகண்டத்திற் றோலுரிகாட்டித்தன்மெய்யினைப்புற
றிடங்காட்டிவாளை யொருபுறங்காட்டி வண்டேறுமலர்த்
தடங்காட்டியபொழி லாரூர்த்தியாகா மதுபொற்றுட
படங்காட்டியாடிநின்றுருலகேழும் பனியென்னவே. ௨௧

புரந்தனைமாலைச் சதுரானனத்தனைப் போகியைமுப்
புரந்தனைசாதித் திமையாதநாட்டப் புலோமிசைவாழ்
புரந்தனைமானுந்திருவொற்றியூர்நின் பொன்மணிக்கோ
புரந்தனைக்கண்டனன் காணேனுநிக்குபுரந்தனையே. ௨௨

வெண்பா.

நல்லம்புலியணிந்தோ ளுளதனுக்காட்டாநாள்
வில்லம்புடன்கூடி விட்டாலும்-வல்லி

இடையாளேமுன்னுலக மேழளந்தோன்மைந்தன்
குடையானதன்றோ கொடிது. ௨௩

அம்புலியணிந்தோனுள் ஆதிரை எட்டாநாள்-அத்தம்-கைவில்-புருவம்-அம்பு-கண்.

வாழ்நிலைசேர்பொன்னுலகம் வண்களந்தைக்கோபுரத்தின்
ஏழ்நிலைமேலேறிடினு மேறலாம்-பாழ்மனமே
அன்புன்னைக்காட்ட வானறிவதேயருமை
தென்புன்னைக்காட்டனடி சேர். ௨௪

கஞ்சிகுடியாளே கம்பஞ்சோறுண்ணுளே
வெஞ்சினங்களென்றும் விரும்பாளே-நெஞ்சதனில்
அஞ்சுதலையாவருக் காருதலையாவாளே
கஞ்சமுகக்காமாட்சிகாண். ௨௫

சீதாறுவிந்தபுயன் தென்னவன்றன் றிண்சிலம்பிற்
போதாலுங்கண்ணாலும் போர்செய்வோர்க்-கோதும்
கொடியிடையாற்றம்மாற் குணமாமோவிந்தத்
துடையிடையார்கொண்ட துயர். ௨௬

போதாற்போர்செய்வான் மன்மதன்-கண்ணாற்போர்செய்வான் பரமசிவன்-இவர்கள்-கொடிமீனம்-இடபம் - இவற்றினிடையிலுள்ளதுமேஷம்-ஆடு.

அம்பிலேதோய்ந்திட் டடுத்தடுத்துநாமதனை
தப்பினம்மையது தப்பாதோ-யிப்புவியில்
இக்கலிங்கம்போனாலென் னேகலிங்கமாமதுரைச்
சொக்கலிங்கந்தானிருக்கச் சொல். ௨௭

ஆக-செய்யுள்-௪௪௬.



பட்டணத்துசுவாமிகள்.



நாப்பிளக்கப்பொய்யுரைத்து நவநிதியந்தேடி
நலமொன்றுமறியாத நாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவெழுகின்ற புற்றீசல்போலப்
பலபலெனக்கலகலெனப் புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர் கைவிடவுமாட்டீர்
கவட்டத்தொன்மறத்திடுக்கிற் கானுழைத்துக்கொண்டே
ஆப்பதனைப்பிடித்தசைத்த பேய்க்குரங்குபோல
அகப்பட்டீர்கிடந்துழல வகப்பட்டீரே.

## சிவப்பிரகாசசுவாமிகள்.

ஐயனின்சென்னிமிசை யுறைகின்ற மடமங்கை யாரென்னவுமை வினவவும், அன்னதொருமடமங்கை யன்புவெண்டிரைகொழித்தழ கொழுகுதண்புனலெனத், தாயவொளியானனங் கரியவிழிசா றவாய்க்கோயத்தி லுண்டோவெனச், சொல்லருங் கமலமலர் காவியலர் கொடிவள்ளை தூயசெங்குமுதமென்னப், பொய்யென நினைத்துநற் கொங்கையுங்கூந்தலும் புனலினிடையுண்டோவெனப், புற்பலஞ்சைவலமதெனவேமறுத்துப் புகன்றிடுதிகங்காயெனத், தையலவளேமென்ன நாணொடுவணங்கியென் றன்பிழை பொருத்தியென்றே, சங்கரனுரைத்திடத் திருவுளமகிழ்ந்தசிவ சங்கரியுமைகாக்கவே. உ

அரனவனிடத்திலே யைங்கரன்வந்துதா னையுவென் செவியை மிகவும், அறுமுகன்கிள்ளினு னென்றேசிணுங்கிடவு மத்தன்வேலவனை நோக்கி, விரைவுடன்வினவவே யண்ணவென் சென்னியில் விளங்குகண்ணெண்ணினனென், வெய்பிடும்பிள்ளையைப் பார்த்துநீயப்படி விகடமேன்செய்தாயென, மருவமென்கைந்நீள முழமளந்தானென்ன மயிலவனகத்துநிற்க, மலையாயனுதவுவரு முமையவளைநோக்கிநின் மைந்தரைப்பாராயெனக், கருதரியகடலாடை யுலகுபலவண்டங்கருப்பமாய்பெற்றகன்னி, கணபதியை யருகழைத் தகமகிழ்வுகொண்டனள் களிப்புடனுமைகாக்கவே. ங

அம்பிகையான்றன்னை நோக்கியுன்றுபரண மரவமென வுமையைநோக்கி, அரியரவசயனத்தை யவருவமானத்தையறியாச்சொல்சிறிதுமென்ன, நம்பிமனைதொறுமிரந் துணுமாண்டிநீயென்ன நான்றுகனரிவேனென, நவையுருபொய்புகன்றீரெனப்பாரத நடந்ததேகாரியமென, வெம்பியொருலன்பிரம் பாலடித்தேனென விளங்கிழையொருத்திதம்பால்,வீசினதுசொல்லென்னவெண்ணுயிரம்பெண்கண் மிகுகற்பைநீக்கினையெனப், பம்புகற்பினிலோ ரிரட்டிப்புநீக்கினது பதருமணிகேளெனப், பரமருடவனிவ்வாறு விளையாடுபச்சைப் பசுங்கொடியுமைகாக்கவே. ச

அச்சுதனளிப்பனில முமதுநேயன்வித்தை யருளுவன்பலபத்திரன், அளமுதவுவனசமன் பதமீயவனந்தமாகாலதோரெருதுமுண்டே, முச்சிரவயற்படை யினைகொழுவதாக்குவோ மொய்ப்புடனிழுத்திருக்க, முந்தியவடற்கயிற்றுடன்மற்றுநமதன்பர்முன்போயிரந்துகொள்வோம், இச்சையுடநமதிளையதளையனுர்சிக்கந்தனினிமையொடுமாடுமேய்ப்பனா, இனியுழுதுபயிரிடுதனன்றாநன்றிதைவிட்டிறநதுன்பதினமெனவே, கச்சுமுலைமாதுமையுரைத்திடும்புத்தியைக் கைக்கொண்டொழிதிநற், காரியமெனக்கருதி மெத்தக்களித்திடுங் கண்ணுதனுமைகாக்கவே. ரு

கவுரிகமலாயரனிரந்தசோரிதுவெனக் காளையொன்றேயரற்கே கனமாடுமேய்த்ததைக் கட்டிடையனுரோவெனச், சிவனொருவர்தூ தென்னவந்துதுசென்றகனதசெப்பிலொருபாரதமெனச்,சேரோடுதி ருடினுனரனெனக்கட்டுண்டசெய்திறுமறிவோமென, சபையினட்மா டினுனரனென்னமண் ணுண்டவாதனையறிதோவென, விவரமொடுமலை மகளுமலர்மகளுமிவ்வாறு விளையாடுமிவர்கடுணையா, மேவிவருபுத்திர மித்திரகளத்திரருடன் மேன்மேலுமிகவாழியே. சு

நிறையவுளதோவெளிதோகொளுவோம்
பிறையைமுடிக்கணிந்தபெம்மான்-உறையும்
திருக்காட்டுப்பள்ளிதிரிபாவாய்நீயிங்
கிருப்பாடடுப்பள்ளியுமக்கு. எ

அருத்துவருந்தொண்டனுக்காகவந்தகனைத்தாளால்
அடர்ந்ததுவுஞ்சத்தியமேயானல்-எடுத்தவொரு
மாங்கனிக்காவென்னைமடிபிடித்தமாபாவி
சாங்கனிக்காதித்தன்வரத்தான். அ

குடக்கோடுவானெயிறுகொண்டார்க்குக்கேழன்
முடக்கோடுமுன்னமணிவார்க்கு-வடக்கோடு
தேருடையான்றெவ்வுக்குத்தில்லைதோன்மேற்கொள்ளல்
ஊருடையானென்னுமுலகு. கூ

விருத்தம்.

சேய்கொண்டாருங்கமலச்செம்மனுடனேயரவப்
பால்கொண்டானும்பணியும்பட்டீச்சுரத்தானே
நோய்கண்டாலுங்கொளலாநூறுவயதாமளவும்
பேய்கொண்டாலுங்கொளலாம்பெண்கொள்ளலாகாதே ய

நிட்டையிலேயிருந்துமனத்துறவடைந்தபெரியோர்க ணிமலன் றனைக்,கிட்டையிலேதொடுத்துமுத்திபெறுமளவும்பெரியசுகங்கிடை க்குங்காமு, வெட்டையிலேமதிமயங்கிச் சிறுவருக்குமணம்பேசிவிரும் பித்தாவி, கட்டையிலேதொடுத்துநடுக் கட்டையிலேகிடத்துமட்டுங்க வலைதானே. யக

திருந்தமிழிலக்கணவைந்திணக்கோவைவிருத்தகிரிச்செல்வற்கோது ம், பெருந்தகைமையுடையநியாம் விடுமோலையெங்கனுர்ப் பிடாரிகா ண்க, இரும்பவியிலொருமுருங்கைக் கொம்பொடியாமற்காத்திங்கிரு க்குநீநம்,முருங்கைதனைவேரோடுங்களைந்தனையென்றாலுனக்குமுறை நன்றாமோ. யஉ

### இவர்பிதா.

கயல்வாய்த்தகண்ணியுலகின்றவல்லிபங்காவுனது
செயல்வாய்த்தவம்யர்க்குமல்லாதவர்க்குஞ்சிரிப்பல்லவோ
இயல்வாய்த்தவெந்தைக்குயான்வாய்த்ததுவுமிங்கென்றெனக்கு
வயல்வாய்த்ததுமனைவாய்த்ததுமைந்தர்கள்வாய்த்ததுவே ௰௩

முன்னமொருதமிழ்ப்புலவன் றனையுண்டுகண்டசுவை முதிர்ச்சியாலே, தன்னியனைமுழுதுமுரைத் தமையர்முன்னினைக்கவர்ந்து தடங்காளத்தி, மன்னனாண்டானெனது மாதவத்தின்வினைதீரமண்ணின் மீதே, என்னுடன்வந் தவதரித்த விளங்கருணைப்பிரகாச னென்னுங் கோவே. ௰௪.

நாணியன்பணைதநாண்பென்றுரைத்திடுநசையால்
வேணுவானதுவளைந்துபோய்புகுந்ததுவென்றூற்
காணலாவதோருருவமெந்நாரியைக்கண்டால்
பூணுவார்மயல்காளையரென்பதும்புதிதோ. ௰௫

அல்லிமலர்ப்பண்ணவனுமாராய்ந்தறிகவிதை
சொல்லியிருவருடைத்தோன்றியயான்-முல்லை
அரும்பிற்பொலியு மணிமுறுவனல்லாய்
கரும்பிற்கணுவிகர்த்தேன் காண். ௰௬

### வேலையசுவாமிகள்.

ஆண்டதனா லெனையொவ்வாய் வித்தையினிற்றமயனினு மதிக மென்றே,பூண்டவுலகதனிலுள்ளோர் புகல்வதுகேட்டிருந்துமென்ன புதுமைதானோ, காண்டகுகண்மணியேநல்விளங்கருணைப்பிரகாசக்கா ளாய்நீதான், மாண்டனையென்றறிந்திருந்து முயிர்தரித்தேன்யானுமி கு வன்னெஞ்சேனே. ௰௭

### சத்திமுத்தப்புலவர்.

நாராய்நாராய்செங்கானாராய்
பழம்படுபனையின்கிழங்குபிளந்தன்ன
பவளக்கூர்வாய்ச்செங்கானாராய்
நீயுநின்மனைவியுந்தென்றிசைக்குமரியாடி
வடதிசைக்கேகுவீராயின்
எம்மூர்ச்சத்திமுத்தவாவியுட்டங்கி
நனைசுவர்க்கூரைக்கனைகுரற்பல்லி -

பாடுபார்த்திருக்குமெம்மனைவியைக்கண்டு
எங்கோன்மாறன்வழுதிகூடலில்
ஆடையின்றிவாடையின்மெலிந்து
கையதுகொண்டுமெய்யதுபொத்திக்
காலதுகொண்டுமேலேதழீஇப்
பேழையுளிருக்கும்பாம்பெனவுயிர்க்கும்
ஏழையாளனைக்கண்டனமெனுமே. ௰அ

வெறும்புற்கையுமரிதாங்கிள்ளைசோருமென்வீட்டில்வரும்
எறும்புக்குமாற்பதமில்லைமன்னுளென்னிருங்கலியாம்
குறும்பைதவிர்த்த குடிதாங்கியைத்தென்றுகூறியபின்
தெறும்புற்கொள்யானை கவளங்கொள்ளாமற்றெவுட்டியதே, ௰௯

வரதுங்கபாண்டியன்.

அஞ்சமெலன்றகரதலமுங் கணபணமுங்கங்கணமு
மரைக்கிசைந்தபுலியுடையு மம்புலிச்செஞ்சடையுங்
கஞ்சமலர்ச்சேவடியுங் கனைகுழலுஞ்சிலம்புங்
கருணைபொழிதிருமுகமுங் கண்களொருமூன்று
நஞ்சையுண்டமணிமிடறு முந்நூறுமார்பு
நலந்திகழ்வெண்ணீற்றொளியு மறிமயனுமழுவும்
பஞ்சடிச்சிற்றிடையுமையா ளொப்பனைபாகமுமாய்ப்
பால்வண்ணனுளத்திருக்கப் பயமுண்டோவெமக்கே

அவர்மனைவி.

ஆக்கையெனும்புழுக்குரம்பை யணைந்தனையாப்பொருளை
யருளொளியைப்பராபரத்துக் கப்புறமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்கு மிடமறவெங்கெங்கு
நிறைந்துநின்றமழு முதலைநினைவினெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தந் தவக்குரைகண்முடிக்கும்
பழவடியார்தமக்குதவும் பசுந்துணர்கற்பகத்தை
வாக்குமனைவிகற்பத்தா லளவுபடாவொன்றை
மாசற்றவெறுவெளியை மனவெளியிலடைப்பாம்

ஆகசெய்யுள்-௩௬௭



பலபட்டைச் சொக்கநாதப்புலவர் பாடியது.

நின்றுபடியளக்கு நீலக்கொடிகளிரண்
டென்றுமுளவாங்குடந்தை யீச்சுரருக்-கொன்றுக்
குரைக்குமலரையீந்தா ரொன்றனுக்கென்று
வரைக்குமலரையீயா ரவர். ௧

எடுத்தசனனங்கடொறு மீன்றெடுத்த தாய்மார்
கொடுத்தமுலை பாலனைத்துங்கூட்டில்-அடுத்தமணிப்
பைந்தாமனை துயின்பால் பாலாழியுஞ்சிறிதா
மன்றுசிதம்பரதேவா. ௨

முக்கண்ணனென்றனை முன்னோர்மொழிந்திடுவார்
அக்கண்ணற்குள்ளதரைக்கண்ணே-மிக்க
உமையாள்கண்ணொன்றரைமற்றான்வேடங்கண்ணொன்
றமையுமிதனாலென்றறி. ௩

பாணியிலேபுள்ளிமான்பாதகத்தேபச்சைமான்
வேணிதனிலேயோர்வெள்ளைமான்-காணுமலர்ச்
செம்மானுலவுந்திருமறைக்காட்டீசரே
எம்மானுக்கெங்கேயிடம். ௪

கட்டளைக்கலித்துறை.

வான்பணிந்தாலவனென்பேயுரைக்குமலரிலயன்
தான்பணிந்தாலவன்றலையேசொல்லுந்தாரணியுன்
பான்பணிந்தாலவன்கண்ணேபரிந்துபரிந்துரைக்கும்
நான்பணிந்தாலெனக்கார்சொல்லுவார்சொக்கநாயகற்கே. ௫

மெய்க்கேயணியும்பணியேயென்பேமுடிமேற்கிடந்த
கொக்கேவெண்கூன்பிறையேயரைசேர்ந்தகொடும்புலியே
அக்கேயுமக்குக்கிடைத்தவுபாயங்களாலெமக்குஞ்
சொக்கேசர்பாதத்தைக்கிட்டுமுபாயத்தைச்சொல்லுங்களே. ௬

தாண்டித்திரியும்விடையேறியோடென்றுதாங்கிப்பிச்சை
வேண்டிக்கலியுககாலந்தள்ளாமல்விரும்பிச்சொக்கர்
ஆண்டித்தொழிலைவிட்டையோமதுரைக்கரசிருந்து
பாண்டித்துரைத்தனஞ்செய்தேபிரம்படிபட்டனரே. ௭

ஆகத்திலேயொருபாதியென் னம்மைக்களித்தவுடனே
பாகத்திலேயென் றுகொண்டாயவண்மற்றைப்பாதியுமுன்
றேகத்திற்பாதியுஞ்சேர்ந்தாலிருவருண்டேசிவனே
ஏமத்திராமலிருப்பாய்களந்தையுமென்னெஞ்சமே. அ

துணையானநாரிபுவியையெல்லாம்பெருந்தொல்லைவடிக்
கணையானதுபுவியெல்லாமெடுத்துண் ணுங்கைச்சிலைகள்
லணையாகநின் றுபுவியினைத்தாங்குமென்றாலினியான்
பணையார்களந்தைப்பதியார்செயலையென்பண் ணுவதே. கூ

முன்னுளைக்கூப்பிடவோடிவந்தானைமுளரிமலர்ப்
பொன்னுனையேறியிருப்பானைப்பூமியின்கைக்கரும்பைத்
தின்னுனையென் றுகல்லானைக்கிட்டானைத்திருமதுரை
மன்னுனைவீதியிலேறிவந்தானைவணங்குதுமே. ய

நமக்கின்றொருவரந்தாரீர்தரவேண்டுநலந்திகழ்க்குங்
குமக்கொங்கைபாகத்துக்கொச்சையள்ளீர்கொடுங்கோளரவிற்
கிமைக்கும்பிரையையளித்தாலதற்குமிரும்பசிபோ
முமக்குந்தலைச்சுமைபோமெங்கண்மானுமுயிர்பெறுமே. கக

ஆனையுரித்துமதடனைப்போர்த்திட்டடியும்பட்டு
மானமழிந்தங்கிரந்தமதுரைச்சொக்கர்
ஞானமிகப்பெற்றுவாழ்வதெல்லாஞ்சொக்கநாயகிபாள்
பானைபிடித்தமுகூர்த்தத்தினுல்வந்தபாக்கியமே. கஉ

ஆய்முத்துப்பந்தரின்மெல்லணைமீதுன்னருகிருந்து
நீமுத்தந்தாவென்றவாகொஞ்சும்வேளையினித்தநித்தம்
வேய்முத்தரோடெங்குறைகளெல்லாமெல்லமெல்லச்சொன்னுல்
வாய்முத்தஞ்சிந்திவிடுமேநெல்வேலிவடிவன்னையே. கங

குதியான்மனையுதைத்துள்ளங்காலினிற்கூனிமிர
மதியாகந்தேய்த்தவ்விலங்கேசன்மாமுடிபத்துநக
நுதியான்மிதித்துமுய்லகன்மேனிதுலங்கவின்னும்
பிதியாநின்றாலருளெங்கேசொக்கேசர்தம்மெல்லடிக்கே. கச

மண்ணென்றமண்டலமெல்லாம்புரக்கும்வழுகிசற்றுந்
தண்ணென்றநெஞ்சந்தரத்திலனேதனுவேடனெச்சில்
உண்ணென்றபோதுண்டவர்சொக்கர்பாதியுடலமம்மைப்
பெண்ணென்றறிந்துமடித்தானெவ்வாறுபிரம்புகொண்டே. கரு

இன்றொக்கவேண்டிவெவ்வாறொக்குமோவெழில்சேர்களந்தைக்
குன்றொக்குங்கோபுரமொக்குமொக்குமக்குன்றதுபோல்
அன்றொக்கவேண்டுமென்னல்வினைதீவினையாமிரண்டும்
என்றொக்குமோவினைத்தென்களக்காடனையான்பெறவே. கசு

மாதாம்படியுண்டுமெய்சிவந்தான்குழல்வைத்திசைத்துச்
சேதாம்பலத்தகனிவாய்சிவந்தான்செம்மலர்த்திருவின்
சூதாந்தனத்தைத்தாஞ்சிவந்தானைவர்தூதுசென்று
பாதாம்புயஞ்சிவந்தான்மல்லைநல்லப்பல்லவனே. கஎ

பாடுந்தமிழ்க்குச்சிவந்தெழுந்தான்மல்லைப்பல்லவகோன்
காடுஞ்செடியுந்திரியாதிரட்டைக்கடுக்கன்செல்லு
போடும்பொழுதென்னபூட்டகிமாவற்பப்புல்லரைக்கொண்
டாடும்பொழுதின்கன்னத்திலேநின்றடிக்கின்றதே. கஅ

நான்றெண்டனிட்டகனங்குழலாளையென்கண்மணியை
தேன்றொண்டைவாய்ச்சியைத்தென்கூடல்வாழ்சிறுபெண்பிள்ளையை
யான்றெண்டனிட்டபொழுதேயிம்மனெனக்குமடி
என்றெண்டனிட்டவிண்ணப்பமென்றோலையெழுதுவனே. ககூ

மற்றோரொருவரைக்கண்டதுண்டேசத்தியவாசகராய்
உற்றோர்கழஞ்சுவெண்ணெய்க்கீறன்தாய்க்கொருகோடிபொய்கள்
சொற்றோனுந்தழைமலர்சாட்சியென்றுசொன்னோனுமல்லால்.
கற்றோர்கள்வம்மின்கள்செம்பின்கள்பொம்மின்களந்தையிலே. உ0

அண்டத்தமரருமாயனும்வேதனுமந்தணரும்
பண்டெத்தனைதவஞ்செய்தனரோமணப்பந்தலிலே
துண்டப்பிறையணிசொக்கர்வைத்தகலிக்குநீதுணிந்து
கண்டத்தைநீட்டினையேகூடல்வாழுங்கயற்கண்ணியே. உக

அற்பீன்றதாயென்றுனைப்பணிந்தாலென்ன்வதியெல்லாம்
பொற்பீன்றபூஷணம்போற்குறித்தாய்புகழ்க்கூடலில்வாழ்
கற்பீன்றகட்டிக்கரும்பேயுனக்குக்கன்னெஞ்சதுதான்
வெற்பீன்றவாசனையோவுள்ளவாறுவிளம்பெனக்கே. உஉ

பேரல்லவோவொருவேளைவரந்தந்துபேசிடுங்கல்
லாயல்லவோநின்மனங்கெட்டியானதுமற்புதந்தான்
நீயல்லவோமதுரேசர்பங்குற்றவணீயெனக்குத்
தாயல்லவோபிள்ளைநானல்லவோசிவசாம்பவியே. உங

பண்டோதரியமறைபாடுங்கூடற்பசுங்கிளியைக்
கண்டோதினேனென்கவலையெல்லாமினிக்காலன்றிரண்டு
முண்டோதிவந்திடும்போதம்மைகோயின்முன்னேதிரியும்
குண்டோதரன்கண்டுகொண்டாற்றுடைதட்டிக்கொள்ளுவனே. ௨௪

செகத்தாயெனவந்தெள்ளமுதேதென்னகாலையெனு
நகத்தாற்பணியுங்கயற்கணம்மேநின்னயனத்தினால்
மிகத்தான்கருநிறங்கொண்டமையாவனும்விளங்குதிரு
முகத்தாமரைக்கொருவண்டானதுமுத்துமூக்குத்தியே. ௨௫

செகமதின்மிக்கமதுரையின்மாணிக்கஞ்செட்டியதாய்
முகமதிரத்தினம்விற்றசொக்கேசரைமேவியன்பாய்ச்
சுகமதிதந்தெனையாள்கயற்கண்ணிநின்சுந்தரமா
முகமதியின்றகதிர்மணியோமுத்துமூக்குத்தியே. ௨௬

பொன்னேமலையத்துவசனாகியபுயனீன்றெடுத்த
மின்னேயுனதுவதனத்தையேவெண்மதியெனத்
தன்னேயத்தாலொருதாரகையான்துதான்திரும்பி
நின்னேகிடந்தினம்பார்க்கின்றதோமுத்துமூக்குத்தியே. ௨௭

வடிகொண்டசெந்தமிழ்க்கூடலில்வாழ்சொர்க்கர்வந்திருக்கும்
பிடிகொண்டபிட்டுக்குமண்ணைசுமந்துபெருமகரங்
கொடிகொண்டவெற்றித்துரைப்பாண்டியன்கைக்கொடுபிரம்பால்
அடிகொண்டபோதிலடியாரவர்பொன்னடிகொண்டதே. ௨௮

அக்குவடம்புனையானந்தவெள்ளத்தையங்கயற்கண்
பக்கத்திருந்தபவளாசனத்தைப்பழம்பொருளை
முக்கட்கனியைக்கடம்பாடவிக்கண்முளைத்தெழுந்த
சொக்கைக்கண்டாலன்றித்தீராதுநெஞ்சிற்றுயரங்களே. ௨௯

பொன்போலுங்கூடற்பிராட்டியைச்சேவிக்கப்போம்பொழுதில்
என்பால்வரவுமெதிர்நின்றுபேசவுமென்றலைமேல்
தன்பாதஞ்சூட்டவுங்கேட்டதெல்லாந்தந்தருளவுமே
அன்பாகவந்திடுவாள்கலிகாலமென்றஞ்சுவனே. ௩௰

உரையேனுன்பேரையுணர்ந்தேனின்சீரையுனக்கருதிக்
கரையேனெவ்வாறுகடப்பேன்வினையைக்கடந்தகுண
வரையேயருட்பெருவாரிதியேமதுராபுரிக்குத்
துரையேயழகியசொக்கேசர்தமிழ்தந்தசுந்தரமே. ௩௧

முக்கட்பராபரை சொக்கப்பிரானெனுமுன்னவனே
டொக்கச்சிவந்தகயற்கண்ணிலங்கிதி யுற்றுமிகச்
செக்கச்சிவந்த பொற்றாமரைப்பாத தெரிசனைக்கே
பக்கத்தடுத்தவர் சொர்க்கத்தினையெட்டிப் பார்ப்பவரே. ௩௨

மட்டார்குழலங் கயற்கணம்மேயிம் மட்டென்றுதொகைக்
கெட்டாதன துயர்நின்பாற்சொல்லி யேசலிக்க
ஒட்டாரநீசெய்ய லாகாதுபாருன் னடிமைதன்னை
நட்டாற்றிற்கைவிட் டிடாதேபழிவெகு நாணிற்குமே. ௩௩

விரித்தான்சடையை மகாமேருவாக்கி வில்லைவிட்டுச்
சிரித்தான்புரத்தை யெரித்தான்பரகுரு தேசிகன்முன்
உரித்தான்கரியை யுடுத்தான்பகிரண்டத் துள்ளுலகும்
பரித்தான்மதுரை தரித்தான்சவுந்தர பாண்டியனே. ௩௪

மைக்காற்குழற்பெண் வடிவாளைத்தென்னவன் மாமகளை
அக்காளையோன்பங்கி லாத்தாளைமாறங்கை யானவளைத்
திக்கார்தொழுங்கயற் கண்ணாளையோர்தினஞ் சேவைசெய்தால்
எக்காலமுமவர் சொர்க்காதிபோகத் திருப்பவரே. ௩௫

வண்டிட்டகூந்தலும் வாரிட்டகொங்கை வரைகளுங்கற்
கண்டிட்டசொல்லுங் கயற்கண்ணிபாதமுங் கைதொழுதேன்
தண்டிட்டடிக்கு மறலிவந்தாற்றன்னை யிட்டுநகைத்
துண்டிட்டுவாசிறு பிள்ளாயென்றாருக் கனுப்புவனே. ௩௬

பொன்னேபொருந்தற் புதமேபொலிந்தமென் பூந்திருவே
தென்னேசிறந்தசெந் தேனேதிருந்தருட் சின்மயமே
அன்னேயமுதே யருளேயமரர்க் கரும்பொருளே
மின்னேவியன்கூட ரேமதுராபுரி மீனம்மையே. ௩௭

கேட்டதுமில்லை கொடுப்பாருமில்லை திரத்துழவில்
பூட்டேருமில்லை யிதெல்லாமெம்பாவிலை பூர்ணவரங்
கேட்டேனதற்குப்பிறிதில்லையேயினிக் கேட்கவுநான்
மாட்டேனுன்மேற்படி போட்டேன்மதுரை மனோன்மணியே. ௩௮

உள்ளக்கவலை யெலாம்விள்ளும்போது முனதுமனம்
எள்ளத்தனையிரங் காதிருந்தாயெளி யேனினிமேல்
தள்ளப்புறத்தினி லென்றாலும்போவது தானிலைப்பொன்
வள்ளத்தமுண்ணுங் கிள்ளாய்கடம்ப வனவல்லியே. ௩௯

எப்படியெப்படிச் சொன்னாலுநானிரங் கேனெனவே
அப்படியப்படி நீயிருக்கின்ற வதிசயத்தை

போரடக்கயம்பிடி யென்றான்மதனுமிப் பூவையுமா
தரடக்கமுஞ்சற் றடுந்திலனேமலர்த் தாள்வணங்கா
முரடக்கடவுடக் கெடிமன்னர்வெற்றி முடிபிடுங்குங்
கரடக்களிற்றண்ண லேவல்லைமாநகர் காளத்தியே. ருசு

கவியாகுமாதினைப் பெற்றேன்புலவன்கற் றேனனையாம்
செவியாரக்கேட்டங் குணர்வான்சகோதரன் செந்தமிழ்க்கு
தவியாவருமை யறியான்பதியவன் றனிலேயேல்
புவியாகுமண்ணுக்கு ளென்பலமாமந்தப் பூங்கொடிக்கே. ருள

சேராதவேடன் செருப்பாலடிக்கவுந் தீண்டவுந்தன்
னீர்வாயுமிழவு முச்சிடம்போடவு நீட்டசிலைத்
தாராரிடிக்கவுங் கண்ணீர்த்ததும்பவுந் தாய்தமர்கள்
ஆராகிலுமில்லையோ திருக்காளத்தியப்பனுக்கே. ருஅ

ஓட்டாகவொட்டியுங் காற்பொன்னின் மாப்பொன் னுபாயமதாய்த்
தெட்டாதிரான்பணி செய்யாதிரான்செம்பொன் மேருவினைக்
கட்டாகக்கட்டிக் கழ்களவாங்குமற காட்டவல்ல
தட்டானுக்கஞ்சியல்லோவணிந்தான்சிவன் சர்ப்பத்தையே. ருகூ

ஏராட்டும்பூந்தொங்கனமோகனக் ராற்கினியசுகம்
பாராட்டநானினி யாளல்லவேபசு மென்குழவி
தாராட்டவுஞ்சங்கிற் பால்விள்ளைக்கூட்டித் தடவிமஞ்சள்
நீராட்டமையிடப்போமோயெனக்குள்ள நேரமுமே சுய

விருத்தம்.

மட்டாருந்தென்களந்தைப் படிக்கரசனுரைத்ததமிழ் வரைந்த வேட்டைப், பட்டாலேசூழ்ந்தாலுமூவுலகும்பரிமளிக்கும் பரிந்தவேட்டைத், தொட்டாலுங்கைம்மணக்குஞ் சொன்னாலும்வாய்மணக்குந் துய்யசேற்றில், நட்டாலுந்தமிழ்ப்பயிராய்விளைந்திடுமேபாட்டினிடங்கனிநந்தானே. சுக

வெண்பா.

ஆலெங்கேயங்கே யருபறவையாற்றுயிலும்
மாகலங்கேயங்கே மலர்மடைந்தை-கோலஞ்சேர்
செங்கேதகைமணக்குஞ் செங்குன்றையூரனெங்கே
ஆங்கேயிரவலரெல் லாம். சுஉ

ஊரைச்சுடுமோ வுலகமதனைச்சுடுமோ
ஆரைச்சுடுமோ வறியேனே-நேரே

பொரும்புவட்டமான்முலைப் பூவையரேயிந்த
நெருப்புவட்டமான நிலா. ௯௩

நற்றோரணவீதி நண்ணும்வல்லைக்காளத்தி
கற்றோர்தமக்களிக்கும் கையேகை-மற்றோர்கை
வேங்கையழுகைவிழு கை. ௯௪

போசநீபோர்புயலாப் பூமுழுதும்பொன்மாரி
வீசுவாயங்கதிலோர் விந்தேனும்-பேசுமென்மேல்
பட்டதில்லையென்வறுமை பாரக்குடையாகி
முட்டக்கவித்திடுத லால். ௯௫

காலையரவிந்தங்கழுநீருடன்கலந்தால்
மாலையரவிந்த மயக்காமோ-பாலைப்
பழிக்கின்றமென்முலையீர் பாண்டியருரை
அழிக்கின்றதென்ன வது. ௯௬

பாண்டியனார்-கூடல்-அது-புணர்ச்சி.

ஆக-செய்யுள்-௫௩௩.

—[*]—

பொய்யாமொழிப்புலவர்.

---

வாய்த்தவயிரபுர மாகாளியம்மையே
ஆய்த்தமணலி லணிவரையிற்-காய்த்த
கதிரைமாளத்தின்னுங் காளிங்கனேறுங்
குதிரைமாளக்கொண்டு போ. ௧

இவருபாத்தியாயர்.

பொதியிலகத்தியனைப் பொய்யாமொழியாய்ச்
சிதைவில்புலவர் சிகாமணியாய்த்துதியேருஞ்
செங்காட்டங்கோட்டத் துரையூரெனுந்தலத்தில்
தங்காட்டங்கொண்டிருப்பாய்த் தான். ௨

அகவல்.

வாழுசோழவேன் வாய்மொழிகேண்மோ
ஊழிநிலவெறி மாளிகையின்வயிற்
கட்டிளங்கணவன் கவின்பெறுசேக்கை
என்றறிமணவி நெடிதுதுயில்கொளச்

செல்லக்கிடமி னெனக்கிடந்தருகெனச்
சொல்லியநண்பன் றனிச்செல்பவனோ
நானுமேகுவ னற்றுணையவர்க்கே. ௩

வெண்பா.

அன்றுநீசொல்லக் கிடவென்றயாயிழையோ
டின்றுநீவானுலக மேறினாய்-மன்றல்கமழ்
மானேக்கும்வேல்விழியார் மாரனேகண்டியீர்
சினக்காசெல்லக் கிட. ௪

பூவேந்தர்முன்போற் புரப்பாரிலையெனினும்
பாவேந்தருண்டென்னும் பான்மையாற்-கோவேந்தன்
மாறழுறிய மதுராபுரித்தமிழோர்
வீறணையேசற்றே மித. ௫

உங்களிலேயானொருவ னெவ்வுவனோவொவ்வேனோ
திங்கட்குலன றியச் செப்புங்கள்-சங்கத்தீர்
பாடுகின்றமுத்தமிழ்க்கென் பைந்தமிழுமொக்குமோ
ஏடெழுதாரேரெழுவீ ரின்று. ௬

பொன்போலுங்கள்ளிப் பொறிபறக்குங்கானலிலே
என்பேதைசொல்லற் கியந்தனளே-மின்போலும்
மானவேன்முட்டைக்கு மாறாயதெவ்வர்போங்
கானவேன்முட்டைக்குங் காடு. ௭

முருகக்கடவுள்.

விழுந்ததுளியதரத் தேவேமென் றம்வீழின்
எழுந்துசுடர்சுடுமென் றேங்கிச்-செழுங்கொண்டல்
பொய்யாதகானகத்திற் பெய்வளையுஞ்சென்றனளே
பொய்யாமொழிப்பகைஞர் போல். ௮

ஔவையார்.

ஐம்பொருளுநாற்பொருளு முப்பொருளும்பெய்தமைத்த
செம்பொருளையெம்மறைக்குஞ் சேட்பொருளைத்-தண்குருகூர்ச்
சேய்மொழியதென்பா சிலரியானிவ்வுலகில்
தாய்மொழியதென்பேன் றகைந்து. ௯

சேய்மொழியோ தாய்மொழியோ செப்பலிரண்டுமொன்றே
வாய்மொழியையாரு மறையென்பா-வாய்மொழிபோல்
ஆய்மொழிதன்சால வுளவெனினுமம்மொழியுஞ்
காய்மொழியவென்பேன் றகைந்து. ௰

மதுரைச் சொக்கநாதர்.

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇயநட்பின்
மயிலியற்
செறியெயிற்றரிவைகூந்தலின்
நறியவுமுளவோநீயறியும்பூவே. கக

அகவல்.

மதிமலிபுரிசைமாடக்கூடற்
பதிமிசைநிலவும்பாணிறவரிச்சிற
கன்னல்பயில்பொழிலாலவாயின்
மன்னியசிவன்யான்மொழிந்திடுமாற்றம்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
கொருமையினுரிமையிறதவியணிதிகழ்
குருமாமணிதிகழ்குலவியகுடைக்கீழ்ச்
செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பாலயாழ்பயில்பாணபத்திரன்
தன்போலெனபாலன்பன்றன்பால்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே. உ௦

அங்கம்வளர்க்கவரிவாளினெய்தடவிப்
பங்கப்படவிரண்டு சால்பரப்பிச்சங்கதனைக்
கீர்கீரெனவறுக்குங்கீரனோவென்கவியைப்
பாரிற்பழுதென் பவன். கங

நக்கீரர்.

சங்கறுப்பதெங்கள்குலஞ் சங்கரர்க்கங்கேதுகுலம்
பங்கமுறச்சொன்னார் பழுதாமோ-சங்கை
அரிந்துண்டுவாழ்வோ மரனுரைப்போல
இரந்துண்டுவாழ்வோ மினி. கச

திருஞான சம்பந்தமூர்த்தி.

கடியுண்டநெடுவாளைகராவிற்றப்பிக்
கயத்துக்குளடங்காமல்விசும்பிற்பாய
அடியுண்டவுயர்தெங்கின் பழத்தார்பூகம்
அலையுண்டுகுலைசிதறு மாலிநாடா

படியுண்டபெருமானைப்பரிந்துபாடிப்
பதம்பெற்றபெருமானேதமியேன்பெற்ற
கொடியொன்றுநின்பவனுக்கெதிரேசென்று
கும்பிட்டாளுயிரொன்றுங்கொடுவாளே. கரு

திருமங்கையாழ்வார்

வறுக்கைநறுங்கனிசிதறிச்செந்தேன்பொங்கி
மடுக்கரையிற்குளக்கரையின்மதிலிலோடப்
பெருக்கெடுத்துவண்டோலஞ்செய்யுங்காழிப்
பிள்ளையார்சம்மந்தப்பெருமாள்கேளீர்
அருட்குலவுமயிலைதனிலனலால்வெந்த
அங்கத்தைப்பூம்பாவையாக்கினேமென்
றிருக்குமதுதகவன்றுநிலவால்வெந்த
விவளையுமோர்பெண்ணாக்கலியல்புதானே. கசு

சேமங்குருகையோசெய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசனோநாரணனோ-தாமம்
துளவோவகுளமோ தோளிரண்டோநான்கோ
எளவோபெருமா னுனக்கு. கஎ

சங்கத்தார் அகவல்.

காலைஞாயிறுகடுங்கதிர்பரப்பி
வேலையுங்குளனும்வெடிபடச்சுவறித்
தந்தைதாய்மக்கண்முகம்பாராமல்
வெந்தசாதமும்வெவ்வேருந்திக்
குணமுடனுளுங்கொடுத்துறவாண்ட
கணவனைமகளிர்கண்பாராமல்
பழுத்தவுடலப்பசையறவற்றி
விழித்தறவிழியெலாம்வேற்றதுவிழியா. கஅ
அறவுகையன்றிமறவுகைபெருகி
உறவறமொழிந்தவூழிகாலத்தில்
தாயிலார்க்குத்தாயேயாகியும்
தந்தையிலார்க்குத்தந்தையேயாகியும்
இந்தமாநிலத்திடுக்கண்டீர்
வந்துதோன்றியமாநிதிக்கிழவன்
நீலஞ்சேரிநெடுமாறன்
ஆலஞ்செறியினாண்டசடையன்

பிறந்தும்பிறர்கேடுநினையான்
பிறர்பொருள்வவ்வான்
மறந்தும்போகான்வாய்மையுங்குன்றான்
இறந்துபோகாதெம்மையுங்காத்தான்
வருந்தல்வேண்டாம்வழுதி
இருந்தனமிருந்தனமிடர்கொடுத்தனனே. ௧௧

திருமழிசையார்.

கண்ணிகண்ணன்போவென்றான் காமருபூங்கச்சி
மணிவண்ணாநீயிங் கிராதேதுணிவுடனே
செந்நாப்புலவன்யான் சேவகன்றான்நீயுமுன்றன்
பைநாகப்பாய்சுருட்டிக் கொள். ௧௨

ஆகசெய்யுள் ௫௫௩.

—※—

சொக்கநாதப்புலவர்.

சீர்கறுத்தமுகிற்காத்தான் கஸ்தூரிபூபனருள் சேயாவென்று, மார்கருப்புமிலலாத தொண்டவளநாட்டிருக்கு முசித்தவளே, ஆர்கறுப்பனென்றுசொல்லியழைத்தாலுநாமுன்னையன்பினால், போகறுப்பனிறஞ்சிவப்பன் கீர்த்தியினால்வெளுப்பனெனப் பேசுவோமே. ௧

பிள்ளைவயதினிற்கல்விகற்றோம்பின்பு
பெரியநரவாகனமும்பெற்றோம்பூமி
உள்ளளவுங்கீர்த்திநிலைநிறுத்திக்கொண்டோம்
ஒருகுறையுமில்லையினியுரைப்பக்கேண்மோ
தெள்ளிலகுசிதம்பரத்தைத்தெரிசித்தோம்பின்
சேர்கருங்கட்டவளநகைத்தெய்வயானை
வள்ளிபுணர்சிறப்பணைந்துதித்தோமெங்கள்
மாவைவளர்கறுப்பவுன்னைவாழ்த்தினோமே. ௨

எல்லப்பனம்மைப்பன திருவேங்கடராமனெழிற்சீராளன், வல்லக்கொண்டவனுடனே மாதைவெங்கடேசனைப்போல் வரிசைதந்தா

ன், சொல்லத்தம்பியருடனேமாவையில்வாழ்கறுப்பண்ணன்றெருவீதிக்கே, பல்லக்குத்தான்சுமந்தானது நமக்கோராயிரம்பொன் பரிசுதாரேன். ௩

மெய்யிலேயொருபாதியுமைக்களித்தசெங்காட்டுவிமலனாரே,மையிலேதோய்ந்தவிழிச்சந்தனமான்றனைக்கறியை வளமாயாவி, நெய்யிலேதான்சமைத்துக்கொடுத்திருந்தும் படைத்திருந்து நீர்தானின்று, கையிலேமழுவெடுத்தாற் பொய்யாமோபிள்ளைகொன்றகளவுதானே.

துப்பறையுமரகதத்தின் கொழுநரையு மொன்றாகத் துலங்குமெய்யா, செப்பரியபுலியதனைத் தரிக்குமுத்தராபதியிற் சிவனேநீதான், அப்பரையும்விழுங்கியொரு பிள்ளையுந்தின்றார்மலையோவின்னுங், கப்பரையுங்கையுமாய்ப்புறப்பட்டாய்நல்லதிருக்காட்சிதானே. ரு

அடிபட்டீர்கல்லாலுமெறிபட்டீரத்தனைக்குமாளாய்வந்த, படிபட்டுபோகாமலுதைபட்டீரிப்படியும் படுவாருண்டோ, முடிபட்டசடையுடையீர் கழுக்குன்றீர் முதற்கோணல் முட்டக்கோண, லிடிபட்டு பொருத்திருந்தீர்சிவசிவாவுமைத்தெய்வமென்னலாமே. ௬

சொல்லரும்பொழில்புடைசூழ்புலியூரம்பலவாணதேவாவும்மை, கல்லாலும்வில்லாலுஞ்செருப்பாலும்பிரம்பாலும்கடிந்துசாடும்,எல்லாருநல்லவரென்றெண்ணியருளீந்ததென்னவிகழ்ச்சியொன்றுஞ், சொல்லாமன்மலரால்விட்டெறிந்தவனைக்காய்ந்ததென்ன சொல்லுவீரே.

நல்லாலையிடமருவுந்தியாகையாவுமதிடத்தினியாயங்காணும்,கல்லாலேயெறிந்தோர்க்குஞ் செருப்படியாலுதைத்தோர்க்குங் கடிந்துபோரில், வில்லாலேயடித்தார்க்குங் கொடுத்தீரேயல்லாமல் விழிநீர்சோர,எல்லாமுன்செயலென்றேயிருப்போருக்கியாதேனுமீகிலாரே.

பண்காணுந்தமிழ்ப்புலவீரினத்தோடேயினஞ்சேரும்பரிசேபோலத், தண்காவுமலர்த்தடஞ்சூழ் காவிரிநாட்டொருபுதுவைசாற்றக்கேளீர், கண்காணநரையான்மேல் வெண்காடைவீற்றிருக்கக்கண்டோமந்த,வெண்காடையிடப்புறத்தேபச்சையன்னங்கலந்திருக்கும்விதம்கண்டோமே. ௯

இந்திரன்கலையாயென்மருங்கிருந்தானக்கினியுதரம்விட்டகலான், ஜமனெனைக்கருதானரனெனக்கருதி நிருதிவந்தென்னையென்செய்தா

னந்தமாம்வருணனிருகண்விட்டகலா னகத்தினின்மக்களும்யானும்
அநிலமதாகுமமுதினைக்கொள்வோம் யாரெதிரெமக்குளாருலகிற்
சந்ததமிந்தவரிசையைப்பெற்றுத் தரித்திரராசனைவணங்கித்
தலைசெயுமெம்மைமிலைசெய்சற்கீர்த்தித் தாளுவகோப்பையனுதவும்
மந்தரபுயத்தான்றிப்பையருயன் மகிழ்வொடுவிலையிலாவன்னோன்
வாக்கினுற்குபேரனுக்கினனவனே மாசிலீசானபூபதியே ௰

வண்டுகிண்டியதொங்கலோதி குணக்கெழுந்திடுமெனிலமோ
வன்னுநூபுரமோபயோதர மூருவானவர்கணிகையோ
அண்டர்பூபதிவனிதையோமுக மமுதவாயிதழ்த்தும்பியோ
அரிகையாயுதமோபிறந்திட மன்னமென்னவுலாவுவீர்
கொண்டநண்புமுதாரமுந்தவ ருதகோகனகானவன்
குத்திபல்லவராயமேரு குணூளதிப்பையன்வரையின்மேல்
துண்டவெண்பிறைவேணிகச்சிலை நாணெனப்புகலாவிடின்
தூரமோவதிபாரமேவொரு சேரனுக்கொருதொங்கலே. ௧௧

குணக்கெழுந்திடு மனிலம்-கீழ்காற்று-கொண்டல்-மேகம்-ஓடிநூபுரம்-சிலம்பு-மலை-கொங்கை-வானவர்கணிகை-அரம்பை வாழைதொடை அண்டர்பூபதிவனிதை-சசி-சந்திரன்-முகம்-தும்பி- வண்டுதேன்-இகழ்அரிகையாயுதம்-ஆழி-திருப்பாற்கடல் துண்டவெண்பிறைசூடி-கைச்சிலை நாண்-ஆதிசேடன்-வாசுகி-வா - சுகி-என்று விடன்-சேரன் தொங்கல்பனை-மடலேறுவேனென்பது-கருத்து.

சந்திரனுக்குடலூனந்தனதனுக்கோர் கண்ணூனந்தருவிநீழல்
இந்திரற்கோபக்குறியாமியமனுக்கோ புழுக்காலாமிரவியின்ற
மைந்தனுக்கோகான்முடமாய் வனசனுக்கோர்தலைகுறையாய் வாழ்வா
பந்தமுளமானிடரை விதிவிடுமோவாலவாய்ப் பதியுளானே. (ராயின்

கட்டளைக்கலித்துறை.

அட்டாவதானமுந்தொல்காப்பியமு மகப்பொருளும்
கொட்டாதிதொட்டப்ரபந்தமெல்லாநம்மைச் சொல்லச்சொல்லி
ஒட்டாரங்கட்டிநம்பல்லக்குக்கொம்பை யொடித்தெறிந்த
தட்டாரப்பையலரிகரபுத்ரனைச் சண்ணினனே. ௧௩

பண்டனைப்பண்டனை யோதுபொம்மானைப் பனிவரைக்கோ
தண்டனைத்தண்டினைசெய்யுமுத்தண்டனைத் தண்டனைமு
தண்டனையண்டர்தொழுந்திருமார்பே றமர்ந்தமணி
தண்டனைக்கண்டனையாயினெஞ்சேமுத்தி கண்டனையே. ௧௪

துளைபடுமாமரமோரேழுமெய்தவன் றாதுகவி
உளைபடுவாரிதியொன்றேகடந்த தொளிர்தரள
வளைபடுவாவிமணவைமன் கூத்தன்வகுத்தகவி
தளைபடுகாலுடனேகடலேழையுந் தாண்டினதே கரு

தூங்காதராதலமெங்குமொருமிக்கத் துய்த்தநர
சிங்காதராதரந்தானறிந்தேனல்கச் சேலம்வந்த
கெங்காதராநின்புகழ்கேட்டசைப்பான் கிரீடமென்றே
வெங்காதராவுக்குச்செய்தானிலைமலர் வேதத்தனே, கசு

பரசைவடமலையப்பாவிருட்கயம் பூண்டுகொண்டு
முரசைவடமலையப்பாலுஞ்செல்ல முழக்கஞ்செய்தோய்
சிரசைவடமலையப்பாம்பின்வைத்துத் திருக்கண்வளர்
இரசைவடமலையப்பாவிப்பாருக்கோ ருத்திரனே. கஎ

சோதிச்சவரிவிழிக்கோபுறவில்லை தூயகுழல்
கோதிச்சவரிமுடிக்கரியாள்கொண்ட கோலமென்னே
நீதிச்சவரிப்பெருமாளென்றோ நினைந்துருகப்
போதிச்சவரிவட்காரோவரிகிலன் பூங்கொடியே. கஅ

சொல்லுக்கினியகழுக்குன்றரேயுமைச் சொல்லவென்றால்
அல்லற்பிழைப்புப்பிழைத்துவிட்டீர்முப் புராதியர்மேல்
வில்லைக்குனித்தெய்யமாட்டாதநீரந்த வேளைதனிற்
பல்லைத்திறந்துவிட்டீரிதுவோஉம் படைத்தொழிலே. ககூ

துயிலையிலேயிடர்துன்னையிலே தெவ்வர்குழையிலே
பயிலையிலேயிருட்பாதியிலேபசும் பாலனத்தை
அயிலையிலேவயதாகையிலே நமக்கார்துணைதான்
மயிலையிலேவளர்சிங்காரவேலர் மயிலையிலே. உ௦

போதாசிவகுருநாதாகலவை புழுகொடுசெவ்
வாதார்ந்தகொங்கைக்குறமாதுவள்ளிக்கு வாய்த்திடுமின்
பாதாருகர்செற்றவேல்விடுத்தாலென் பகையையறுக்
காதாமனமிரங்காதா சிவகிரிக் காங்கேயனே. உக

காப்பிள்ளைபிள்ளைக்கறிக்கிச்சைபட்டுவை யைக்கரைமேன்
மாப்பிட்டுவந்தமயிலேகனேமலை யானநின்னைக்
கூப்பிட்டுநின்றருளிந்தொருகோலக் கொம்பாற்றடவிப்
பூப்பட்டகண்ணிச்சயமாக்கினான்மைப் புயல்வண்ணனே, உஉ

உம்பரைவாழ்வித்ததஞ்சங்கண்டோமெண்புரமெரித்த
அப்பரையேற்றியசூலங்கண்டோமொருபொருளுங்குறைவில்லை
நம்பரைபாகமுங்கண்டோமவர்திரு நாமமுஞ்சொல்லா
வம்பரையுங்கண்ணிற்கண்டோம் வெண்காடனை வாழ்த்துங்களே. ௨௩

மாடேறுதாளுமதியேறு சொன்னியுமாமலரோன்
ஓடேறுகையுமுடையார்தமக்கிடமோங்கியநெற்
சூடேறுசங்குஞ்சொரிமுத்தைமுட்டை யென்றேகமலக்
காடேறுமன்னஞ்சிறகாலணைக்குங்கழுக்குன்றமே. ௨௪

நெருப்புக்கருக்கச்சிவப்புள்ளமேனியர் நீள்கனகப்
பொருப்புக்குனித்துப்புரமெறித்தார்க்கிடம் போற்களிற்றின்
மறுப்புக்கண்முத்தும் வளர்கழைமுத்தும்வளைக்கண்முத்தும்
கருப்புங்கண்முத்து மதிக்குலங்காட்டுங்கழுக்குன்றமே. ௨௫

ஆலங்கிடக்குமனத்தார்க் கொருநன்றியம்பிலிட்ட
கோலங்கிடக்குங்கிடக்குங்கண்டாய் குறையாதகுண
சீலங்கிடக்குமனத்தார்க்கொருநன்றி செய்யில்வெகு
காலங்கிடக்குங்கண்டாய்வணிகர் செந்தில்காத்தவனே. ௨௬

வெண்பா.

வேளுக்குவாம்பரியும் வில்லுக்குநீலமுஞ்சேல்
வாளொக்குங்கண்டம்வார் வாய்க்காடும்-நாளும்
மருத்தப்பனையே வளத்துவிட்டதாலே
மருந்தப்பனையேவணங்கு வார். ௨௭

சிந்தாமணிசங்கு தேனுமலர்த்தாமரைசீர்
ஐந்தருவுமின்னளவே யாயிருக்க-வந்தேதான்
கச்சவிடமேயண்ட கண்டாகடைதோறும்
பிச்சையிரந்துண்டதென்ன பேசு. ௨௮

அந்திக்கார்வந்துமய லாற்றுவாரன்னையிடு
வந்திக்கார்வந்து வழக்குரைப்பார்-நந்திக்கார்
கச்சிக்காளத்திககா காதலுரைப்பார்கனக்க
கச்சிக்காளத்திக்கார் காண். ௨௯

இருப்போமென்றாலு மிராதுளமானேயிக்
கருப்போமென்றாலுங் கசக்கும்-விருப்பாரும்
காசண்முகனைக் கடல்புடைசூழ்கோவளம்வாழ்
மாசண்முகனை மறந்து. ௩௰

பாரவிளநீர்சுமக்கப் பண்டேபோருதவிடை
ஆரவடஞ்சுமக்க வாற்றுமேநேர
புடைகனைத்தகொங்கையின்மேற் பூங்களபஞ்சாத்தி
இடைக்கனத்தம்வைத்தவரா ரின்று. ௩௧

வெங்காயஞ்சுக்கானல் வெந்தயத்தாலாவதென்ன
இங்கார்சுமந்திருப்பா ரிச்சரக்கை-மங்காத
சீரகத்தைத்தந்தீரேற் றேடேன்பெருங்காயம்
ஏரகத்துச்செட்டியாரே. ௩௨

கன்னெஞ்சுகல்லாகு மென்றெறிந்தக்கல்லுமையாள்
பொன்னஞ்சரணம் பெறுமென்றே-முன்னாள்
இடத்தாளேயம்மியின்மே லேற்றுக்களக்காடா
இடத்தாளேயஞ்சாதே யின்று. ௩௩

முன்னேயிரண்டுமுலை முற்றியபினுலுமுலை
எங்நேரவென்மதலைக் கெட்டுமுலையெந்நாளும்
பைந்நாகஞ்சூழ்மதுரைப் பாணுநின்பாகனுக்கிங்
கென்னகமென்ன மினி. ௩௪

நங்கையொருத்தியையு நாமிவர்மூவரையும்
பொங்குமமளிபொருக்குமே-சங்கம்
குழையவரால்பாயுங் குருநாடர்கோவே
பழையவராலென்னபயன். ௩௫

நங்கைபயண நமக்கென்றுரைத்தளவில்
அங்கம்பசலைநிற மானதே-செங்கை
வளைநெகிழப்பூதி மறுத்தேனென்றேத
உளநெகிழப்பாதி யுடைந்து. ௩௬

உன்னுயிறுமென்னுயிரு மொன்றென்பதின்றறிந்தேன்
மன்னுபுகழ்மச்சத்தார் மன்னவா-உன்னுடைய
பொன்னகத்தொங்கையர்தம் போகநகச்சின்னங்கள்
டென்னகத்தேயெரிகையால். ௩௭

ஒருவர்க்கிடமா யுகந்திருந்தபாயல்
ஒருவர்க்கிடமாய் தென்ன-மருவலரைக்
கன்னாட்டவின்னாட்டுங் கண்டன்கரிகாலன்
தன்னாட்டில்புதுமை தான். ௩௮

அம்பலவாணனொருகா லாடினாலாகாதோ
உம்பரெலாங்கண்டதெனக் கொப்பாமோ-சம்புவே
வெற்றிப்பதஞ்சலிக்கும் வெம்புலிக்குந்தித்தியென
ஒற்றிப்பதஞ்செலிக்கு மூர். ௫௯

மாதாவுடல்சலித்தாள் வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்து விட்டானே-நாதா
இருப்பையிலேவாழ்சிவனே யின்னமோரன்னை
கருப்பையிலேவாராமற் கார். ௬௰

இந்தவிடைநிற்பதரி தென்னுணையும்மானை
சந்தேகமாகச் சமைத்தானே-அந்தவயன்
பாரதிராமன்வரையிற் பைங்கொடியீர்கொங்கையிள
நீரதிராகன்னடமின்னீர். ௬௧

காளத்திகண்டத்தே காளத்திநெற்றியிலே
காளத்தியுன்றன் கரத்திலே-காளத்தீ
அங்கமெங்கும்வெவ்வழலை யாற்றினன்ஞானப்பூங்
கங்கையென்னும் பெண்ணொருத்திகண்டு. ௬௨

மேவினுடனே விடியும்விடியாது
கோவைமணிமார்பன் கூடாநாள்-தேவர்
திரண்டாதரிக்கின்ற தென்னரங்கமாலே
இரண்டாலும்பொல்லா திரா. ௬௩

ஆக செய்யுள்-௬௩.

---

## அம்மானை.

---

சித்தம்பூர்வாழுஞ் சிவனளித்தபிள்ளையார்
மெத்தப்பெருவயிறு வீங்கினர்காணம்மானை
மெத்தப்பெருவயிறு வீங்கினரேயாமாயின்
இத்தரையின்மீதவருக் கேச்சலவோவம்மானை
இரவுபகல்குண்டுணிக்கிங் கேச்சுண்டோவம்மானை. ௧

விருப்பாரும்பூஞ்சோலை மேவுதிருவரங்கர்
திருப்பாற்கடலுடைய செல்வர்காணம்மானை
திருப்பாற்கடலுடைய செல்வரேயாமாயின்

இரப்பார்க்குப்பெண்கொடுத்த தென்னமதியம்மானை
என்றல்லோமண் ணுண்டிருந்தனர்காணம்மானை. உ

ஆதாரமாகுடந்தை யாதிடும்பேச்சுரனூர்
கோதாடுமன்மதனைக் கொன்றெரித்தாரம்மானை
கோதாடுமன்மதனைக் கொன்றெரித்தாராமாயின்
மாதாபிதாக்கள்பழி வாங்காரோவம்மானை
வாங்குதற்குமுன்வாயின் மண்விழுந்ததம்மானை ௩

தொல்லுலகிலெல்லோருஞ் சொன்மாங்கனியொன்று
நல்லதொருகாஞ்சி நகரிலுண்டோவம்மானை
நல்லதொருகாஞ்சி நகரிலுண்டோயாமாயின்
எல்லோர்க்குத்தானே யினிக்குமோவம்மானை
இனித்திருக்குமொருவேளை யெரித்திருக்குமம்மானை. ச

மட்டுவார்கூந்தலு மையாண்மனமகிழக்
கட்டுமாவென்றுளது கச்சியிலேயம்மானை
கட்டுமாவொன்றுளது கச்சியிலேயாமாயின்
இட்டமாநற்கனிகா யில்லையேவம்மானை
இல்லாமற்கல்லா லெறிவாரோவம்மானை. ரு

கல்லாலின்கீழிருக்குங் காளத்திநாதருக்குப்
பொல்லாச்சிலந்தி புகுந்ததுகாணம்மானை
பொல்லாச்சிலந்தி புகுந்ததுவேயாமாயின்
வல்லானொருபணிக்கன் வாரானோவம்மானை
வந்தல்லோபண்டு வடுபட்டதம்மானை. சு

ஆரத்தடல்வயல் சூழாமாதைவாழழகர்
தாரொத்தமேனி தழலொத்ததம்மானை
தாரொத்தமேனி தழலொத்ததாமாயின்
ஈரக்கங்காநதியா னிருப்பதேனம்மானை
ஈரம்பெருநெருப்புக் கில்லையேயம்மானை. எ

மாசிலாத்தென்விரிஞ்சை மார்க்கசகாயலிங்கர்
வேசியர்பாற்றூதுசொல்லி மீண்டனர்காணம்மானை
வேசியர்பாற்றூதுசொல்லி மீண்டனரேயர்மாயின்
வீசமுனைவெட்கமவர்க் கில்லையோயம்மானை
இல்லாமற்றலையிறக்க மேன்வந்ததம்மானை. அ

வற்றாதவையையிலும் வாள்விஜையன்றன்கையிலும்
பற்றாலவண்ணலடி பட்டனர்காணம்மானை
பற்றாரில்லாதசிறு பிள்ளையோவம்மானை
பெற்றாரில்லாதசிறு பிள்ளையோவம்மானை
பிள்ளையுடைய பித்தனர்காணம்மானை. ௯

பூங்காவனம்சூழும் புள்ளிருக்கும்வெளூரன்
பாங்கானதென்மதுரைப் பாணன்காணம்மானை
பாங்கானதென்மதுரைப் பாணனேயாமாயின்
தாங்காதிழையெடுத்துத் தைப்பனோவம்மானை
தையலுக்குநல்ல சமர்த்தன்காணம்மானை. ௰

இப்பூமிதன்னி லியல்பாந்திருத்தணியில்
முப்பூவிளையு முருகருக்கேயம்மானை
முப்பூவிளையு முருகருக்கேயாமாயின்
அப்பவருக்கங்கே யரிதல்லோவம்மானை
அவர்க்குமுகமாறானா லப்பரிதோவம்மானை. ௧௧

மாந்தரொடுவிண்ணோர் வணங்குதணிகாசலத்தான்
போந்துதலையோட்டிலிரப் போன்மகன்காணம்மானை
போந்துதலையோட்டிலிரப் போன்மகனேயாமாயின்
காந்திவிடுமாடகப்பொற் காசரிதோவம்மானை
கல்லாறவெற்படைந்தாற் காசரிதோவம்மானை. ௧௨

பாலாறுசேரும் பரமர்திருவிற்கோலா
நாலாறுசேரி நடுப்புகுந்தாரம்மானை
நாலாறுசேரி நடுப்புகுந்தாராமாயின்
தோலாமைபோடெலும்பு தொட்டதுண்டோவம்மானை
தொட்டனரென்றேமறையோர்தொட்டிலர்காணம்மானை. ௧௩

கோணாமலையுடைய கோதையிடப்பாகனார்
சேணாளர்போற்றுதிரு வம்பலர்காணம்மானை
சேணாடர்போற்றுதிரு வம்பலரேயாமாயின்
ஏனாதிமால்பிரமர்க் கெட்டாரோவம்மானை. ௧௪

கண்டொருபெண்சாதியுடன் கைக்கொண்டாராமாயின்
எண்டவிடமெல்லாமே லூரரிதோவம்மானை
ஊருமென்றேயுண்ணு முலையாளுளம்மானை. கரு

தேவாதிதேவன் திருவல்லிக்கேணியண்ணல்
ஓவாப்பெருஞ்செல்வ முற்றவன்காணம்மானை
ஓவாப்பெருஞ்செல்வ முற்றவனேயாமாயின்
பூவாளுமாவலிபாற் போவதேனம்மானை
போனகதைகேட்கிறது பூதானமம்மானை. கசு

வில்வந்திருச்சடில மேவுமயிலேச்சுரனுர்
செல்வந்தழைந்துநின்ற செல்வர்காணம்மானை
இல்லங்கடோறு பிரப்பதேனம்மானை
இறந்தார்விதிதலைவந் தேறலாமம்மானை. கஎ

தீமைக்கடல்விடத்தைத் தேர்ந்தவிரிஞ்சேசுரனுர்
வாமத்தொருமயிலை வைத்தவர்காணம்மானை
வாமத்தொருமயிலை வைத்தனரேயாமாயின்
ஏமமுடிமேலாவ தேறுமோவம்மானை
ஏறுதோவன்புற் றிருந்தக்காலம்மானை. கஅ

இருவருக்குங்காண்பரிய வீசர்மதுரேசர்
விருதுகட்டியங்கம்வெட்டி வென்றனர்காணம்மானை
விருதுகட்டியங்கம்வெட்டி வென்றனரேயாமாயின்
அருமையிடம்பிருகூறுவதேனம்மானை
ஆனாலுங்காயமில்லை யையரிவர்க்கம்மானை. கசு

அடர்ந்துவாழுங்குடந்தை யாராவமுதர்
மடந்தைபாகர்க்கேரு மாடுகாணம்மானை
மடந்தைபாகர்க்கேரு மாடுதானுமாயின்
கடந்தபாதம்மிரண்டும் காணுரோவம்மானை
கண்ணிரண்டும்பூவானுற் காண்பாரோவம்மானை. உ0

கொண்டறிகற்சோலைவளர் கும்பபுரிவாழரனுர்
பெண்டுகளைச்சுமந்த பித்தர்காணம்மானை
பெண்டுகளைச்சுமந்த பித்தரேயாமாயுன்
கண்டவிடந்தங்குங் கருத்தரேவம்மானை
கண்டவிடந்தங்குங் கருத்தர்தாமம்மானை. உக

தெண்டிரைசூழ் தில்லைச் சிவகாமிதாயார்க்குக்
கண்டமெல்லாஞானக் கரும்பதுகாணம்மானை
கண்டமெல்லாஞானக் கரும்பதுவேயாமாயின்
கண்டர்பிராஞலைதனி லாடாரோவம்மானை
ஆடிப்புலியூரமர்ந்தனன்காணம்மானை. ௨௨

விருத்தசடைத்தில்லைநகர் மேவுஞ்சிதம்பரற்கு
வருத்தமிகுமொருகால் வாதமல்லோவம்மானை
வருத்தமிகுமொருகால் வாதமேயாமாயின்
பெருத்தகடனஞ்சாற் பிழையாரோவம்மானை
பிழைத்தல்லோநடமாடிப் பேரூரனம்மானை. ௨௩

விரிந்தபுகழ்குள்ளிருக்கும் வேளூர்வயித்தியனார்
பரிந்துவினைதீர்க்கவல்ல பண்டிதாகாணம்மானை
பரிந்துவினைதீர்க்கவல்ல பண்டிதரேயாமாயின்
மருந்துவிலைக்கூலி வாங்காரோவம்மானை
வாயிலேமண்போட்டு வாங்குவர்தானம்மானை. ௨௪

பாட்டுவரிச்சுரும்பர் பாடுஞ்சிதம்பரனார்
மாட்டிடையன்றேடமன்றி லாடெடுத்தாரம்மானை
மாட்டிடையன்றேடமன்றி லாடெடுத்தாராமாயின்
ஆட்டுக்காரன்னை யறிந்ததோவம்மானை
அறிந்தான்காண்காற்புலியு மறைப்பாம்புமம்மானை. ௨௫

இன்னதிதுவென் றிறைவன்றிறகதனைச்
சொன்னமறையுந்துணிந்தறியாதம்மானை
சொன்னமறையுந் துணிந்தறியாதாமாயின்
கன்னிவனத்திடையே காணலாமம்மானை
கண்டார்பிறிதென்றுங் காணார்காணம்மானை. ௨௬

மாலரியாக்கள்ளனவன் வந்துமன்றுள்ளேபுகுந்து
கோலமுடனெடுத்துக் குன்றேளித்தாரம்மானை
கோலமுடனெடுத்துக் குன்றேளித்தாராமாயின்
காலுதலைதோலெலும்பு கண்டதுண்டோவம்மானை
கண்டல்லோவிருகழுகு காத்திருப்பாரம்மானை. ௨௭

கற்றைச்சடைமுடியார் கச்சியேகம்பருக்கு
நெற்றிக்கண்ணொன்று நெருப்பதுகாணம்மானை
நெற்றிக்கண்ணொன்று நெருப்பதுவேயாமாயின்

பற்றிச்சடையிற் படராதோவம்மானை
படறுமென்றேகங்கை பதிவிருந்தாளம்மானை. ௨௮

செம்பொன்மலைவெள்ளிமலை சேரவிரண்டிருக்கக்
கம்பாவிரும்புவதும் கஞ்சிக்காணம்மானை
கம்பாவிரும்புவதும் கஞ்சியேயாமாயின்
அம்புவியெல்லாமயக்க மன்னமெங்கேயம்மானை
அனந்ததிருகம்பை யாற்றிலுள்ளதம்மானை. ௨௯

ஈசன்பசுவாகி யேமனொருகன்றாகி
வீசுபுகழாரூரின் வீதிவந்தாரம்மானை
வீசுபுகழாரூரின் வீதிவந்தாராமாயின்
காசளவுபாலும் கறவாதோவம்மானை
கன்றையுதைகாலி கறக் நமோவம்மானை. ௩௰

ஒற்றியூர்த்தியாக ரொருபெண்பாற்சுந்தரரை
உற்றுநீசத்தியம்பண் ணென்றெளித்தாரம்மானை
உற்றுநீசத்தியம்பண் ணென்றெளித்தாராமாயின்
முற்றமுண்டோவன்பர்மேற் கோபமோவம்மானை
கோபமேமகிழ்வாய்க் கொண்டிருந்தாரம்மானை. ௩௧

அக்கரவம்பூண்டிருந்த வங்கையற்கண்ணம்மைபங்கர்
கைக்கொண்டுசெத்தகன்றைக் காவிவந்தாரம்மானை
கைக்கொண்டுசெத்தகன்றைக் காவிவந்தாராமாயின்
சொக்கர்மதுரைக்குந் தோட்டியோவம்மானை
தோட்டியென்றேகாமனையுஞ் சுட்டெரித்தாரம்மானை. ௩௨

ஆரவயல்சூழ்வருணை யண்ணமலைநாதர்
பேருலகில்வண்ணாரப் பெண்கொண்டாரம்மானை
பேருலகில்வண்ணாரப் பெண்கொண்டாராமாயின்
சாரும்புடவையெல்லாந் தப்பினரேவம்மானை
தப்பினார்தாருவனத் தார்புடவையம்மானை. ௩௩

திருப்பாதிருப்புலியூர்ச் செல்வர்சிவக்கொழுந்தார்
கருப்பஞ்சிலையானைக் காய்ந்தனர்க்காணம்மானை
கருப்பாஞ்சிலயானைக் காய்ந்தனரேயாமாயின்
ஒருத்திக்கிருவ ருடன்கலப்பேனம்மானை
கலவாரோகன்னிமனங் காவல்கொண்டாலம்மானை. ௩௪

மன்றுபடிவெங்கண்மா மாகிலாமணியார்
நன்றானமுல்லைக்கு நாயகர்காணம்மானை
நன்றானமுல்லைக்கு நாயகரேயாமாயின்
குன்றுமற்பெண்ணெங்கே கொண்டனர்காணம்மானை
கொண்டபெண்ணேநல்ல கொடையிடைச்சியம்மானை. ௩௫

சுந்தரஞ்சேர்தென்குடந்தை சோமநாதப்பெருமான்
கந்தரிடமாமிதனைக் கைப்பிடித்தாரம்மானை
கந்தரிடமாமிதனைக் கைப்பிடித்தராமாயின்
இந்தவுலகுதனுக் கேற்குமோவம்மானை
ஏற்குமென்றேகையின்மழு வேந்தினர்காணம்மானை. ௩௬

அட்டதிக்கெண்கன்னிவனத் தாரப்பரைக்கடலில்
இட்டகற்றுணோடுகரை யேரவிட்டாரம்மானை
இட்டகற்றுணோடுகரை யேரவிட்டாராமாயின்
விட்டகற்றாணீரின் மிதக்குமோவம்மானை
மிதவாதோமுன்வளைந்து வில்லானாலம்மானை. ௩௭

தந்தைபிடித்தரியத் தாயானவள்சமைக்க
வெந்தவிடைக்குயந்து மீண்டதுகாணம்மானை
வெந்தைவிடைக்குவந்து மீண்டதுவேயாமாயின்
மைந்தனுருப்பு மணந்ததோவம்மானை
மாதையரன்வல்லபத்தால் மணந்ததுகாணம்மானை. ௩௮

காணென்றனஞ்சிருக்கு கற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்ற பாணங்காணம்மானை.
பாணந்தான்மண்டின்ற பாணமேயாமாயின்
சேணார்புரமெரித்த சேவகமேதம்மானை
சேவகத்தைச்சொல்லச் சிரிப்பல்லோவம்மானை. ௩௯

பொன்றிரளுஞ்சித்திரஞ்சூழ் பூம்பகலூர்தன்னில்வளர்
தந்திமுகன்பெறுவயிரன் சப்பாணியம்மானை
தந்திறிகன்பெறுவயிரன் சப்பாணியாமாயின்
இந்தவயிற்றுக் கிரையெங்கேவம்மானை
என்றல்லோவீச னிரைக்கலுற்றானம்மானை. ௪௰

தெள்ளுபுகழ்படைத்த திருமுட்டத்தெம்பெருமாள்
உள்ளகிலமெல்லா முழுதுண்டாரம்மானை

உள்ளநிலமெல்லா முழுதுண்டாராமாயின்
கள்ளனிவனென்றுசொல்லிக் கட்டுவனேனம்மானைக்
கட்டாரோபோரிற் கதிர்மரைத்தாலம்மானை. சக

அடுத்ததிருக்காவிரிசூ மணியரங்கரெப்போதும்
எடுத்ததிருக்கோயிலைவிட் டெழுந்திராரம்மானை
எடுத்ததிருக்கோயிலைவிட் டெழுந்திராராமாயின்
படுக்கையிலேவிடந்தீண்டிப் பட்டனரோவம்மானை
பட்டனரென்றல்லோ பருந்தெடுத்ததம்மானை. சஉ

மட்டுற்றசோலை மதுராபுரிச்சொக்கர்
பிட்டுக்குமண்சுமந்த பித்தர்காணம்மானை
பிட்டுக்குமண்சுமந்த பித்தரேயாமாயின்
ஒட்டத்தொழிலவருக் குள்ளதோவம்மானை
உள்ளன்பிலாதவருக் கொட்டார்காணம்மானை. சந

நீண்மதிசூழாயவளர் நீலகண்டேசுரனார்
சேணுயர்ந்தகீர்த்தித் தியாகர்காணம்மானை
சேணுயர்ந்தகீர்த்தித் தியாகரேயாமாயின்
காணக்கொடைக்கொடிதான் கட்டினரோவம்மானை
கையாற்சொன்னகொடியைக் கட்டினர்காணம்மானை. சச

அம்புலியூறென்னு மணிகொள்சிதம்பர
வெம்புலியொன்றெந்நாளு மேவுங்காணம்மானை
வெம்புலியென்றெந்நாளு மேவுமேயாமாயின்
அம்பலத்தைதான்விட் டகலாதோவம்மானை
ஆட்டைவிட்டுவேங்கை யகலுமோவம்மானை. சரு

புட்படியுநாரணம்போற் பூவைவேங்கடாசலவேள்
மட்படியில்வாழும் வைத்தியன்காணம்மானை
மட்படியில்வாழும் வைத்தியனேயாமாயின்
கட்படுநோய்தீரக் காண்பானோவம்மானை
காண்பானிவனுங் கடைமருந்தாலம்மானை. சசு

செல்லார்வலஞ்சுழியிற் செங்கழுநீர்ப்பிள்ளையார்
ஏல்லார்க்குநல்லவரா மீவரேயாமாயின்
எல்லார்க்குநல்லவரா மீவரேயாமாயின்
தொல்லுலகிலுள்ளோர் துதியாரோவம்மானை
துதிக்கையவர்தமக்குச் சொந்தமன்றோவம்மானை

தெங்குபுகழ்தென் மயிலைச் சிங்காரவேன்முருகர்
வேங்கைவனத்திலன்று வேட்டைவந்தாரம்மானை
வேங்கைவனத்திலன்று வேட்டைவந்தாராமாயின்
பாங்காகவேமுயன்மான் பற்றினரோவம்மானை
பற்றினரோமான்கற்றைப் பாரறிவரம்மானை. சஅ

வடவாறுசூழவரும் வாழ்மயிலின்வாகனனார்
விடமானெனும்புகொண்ட வேடன்மகனம்மானை
வுடமானெனும்புகொண்ட வேடன்மகனுமாயின்
அடைவானவள்ளி யறியாளோவம்மானை
அம்மான்மகளறிந்தா லச்சமுண்டோவம்மானை. சகூ

திருச்சிராப்பள்ளியான் செட்டிமகட்காவேடம்
தரிச்சுமருத்துவஞ்செய் தாயானாராமாயின்
தரிச்சுமருத்துவஞ்செய் தாயானாராமாயின்
மருத்தெண்ணியர்சிக்கின் மணமிலையேயம்மானை
மட்டுவார்குழலிருந்தான் மணமரிதோவம்மானை. ருய

நாடுந்திருச்சம்பு நாதர்க்கிருப்பிடத்தில்
ஓடுஞ்சலம்பெருகி யூற்றெடுத்ததம்மானை
ஓடுஞ்சலம்பெருகி யூற்றெடுத்ததாமாயின்
நாடுமொருசிலந்தி நண்ணினதோவம்மானை
நவைதீரொருசிலந்தி நண்ணினதுண்டம்மானை. ருக

வண்ணரியகாஞ்சியில்வா மேகாம்பரநாதர்
அண்ணறிருமேனியெங்கு மாகாசமம்மானை
அண்ணறிருமேனியெங்கு மாகாசமாமாயின்
வண்ணமுலைமார்பின் வடுப்படுமோவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்கு வடுவரிதோவம்மானை. ருஉ

பூங்கொன்றைநாதன் புகழ்ச்சியேகம்பன்
சேங்கண்ணின்மீதேறுஞ் செல்வன்காணம்மானை
சேங்கண்ணின்மீதேறுஞ் செல்வனேயாமாயின்
மாங்கண்ணின்கீழிருக்க வந்ததேனம்மாயின்
வந்தல்லோவிவ்வாறு எடுப்பட்டதம்மானை. ருங

கேற்றான்மடையடைக்குஞ் சேவகனார்கூடலிலே
வேற்றாளாய்மண்சுமக்க வேண்டினர்காணம்மானை
வேற்றாளாய்மண்சும்க்க வேண்டினரேயாமாயின்

மாற்றானடித்த வடுவிலையோவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்கு வடுவரிதோவம்மானை. ௫௪

எட்டுதிக்குள்ளோரு மீரைஞ்சுமெங்கள்சொக்கலிங்கம்
கிட்டுகின்றவேகசந்த கிராகியேயம்மானை
கிட்டுகின்றவேகசந்த கிராகியேயாமாயின்
கொட்டிமகவான்பலகாற் குழறுவதேனம்மானை
குழறுஞ்சொற்குக் கோளிழைத்தாலம்மானை. ௫௫

பதமலரார்ச்சகடுதைத்த பாரவடமலையார்
அதிகுலத்துநிலமகண்மே லாசைகொண்டாரம்மானை
அதிகுலத்துநிலமகண்மே லாசைகொண்டாராமாயின்
விதிமுகத்துமலர்மானை விட்டனரோவம்மானை
விடுவரோமேலானான் மேதினிக்குள்ளம்மானை. ௫௬

மனஞ்சலியாமற்றினமு மாறாமற்றண்டலையார்
தினங்கீரைமாவடுவுந் தின்றுவந்தாரம்மானை
தினங்கீரைமாவடுவுந் தின்றுவந்தாராமாயின்
கனங்கொண்டுமெய்யினல் காணாதோவம்மானை
கண்டதுகாணெற்றியிலே கண்ணெறிச்சலம்மானை. ௫௭

தண்டாமரைத்தடஞ்சூழ் தண்டலையாரெப்பொழுதும்
உண்டாரிளங்கீரை மாவடுவுமம்மானை
உண்டாரிளங்கீரை மாவடுவுமாமாயின்
பண்டோதான்றின்று பழக்கமுண்டோவம்மானை
பழக்கமில்லைதாயானார் பழக்கிவைத்தாரம்மானை. ௫௮

பொன்னேறுமார்பர் புகழ்சேர்திருவரங்கா
எந்நேரமும்பாம்பி லேகிடப்பாரம்மானை
எந்நேரமும்பாம்பி லேகிடப்பாராமாயின்
என்னேதலைக்குவிட மேறாதோவம்மானை
ஏறுமோசொக்கருட னேறினாலம்மானை. ௫௯

எந்தவுலகும்பரவு மெங்கள்சொக்கலிங்கேசர்
சந்ததமும்மொன்றிற் றானடிப்பாரம்மானை
சந்ததமும்மொன்றிற் றானடிப்பாராமாயின்
அந்தவெள்ளிமன்றதனி லாடினதேனம்மானை
ஆடினார்காண்மற் றதிகமென்றேயம்மானை. ௬0

நேயமிகுமாயவளர் நீலகண்டேச்சுரனார்
ஆயுமவர்க்கெல்லா மருண்மேகமம்மானே
ஆயுமவர்க்கெல்லா மருண்மேகமாமாயின்
காயமுழுதுங் கருக்காதோவம்மானை
கண்டமட்டுந்தான்கறுப்பு காட்டினதோவம்மானை. ௬௧

மத்திமதிசூடி மயிருவிருபாட்சிலிங்கர்
சுத்தவடிவெல்லாஞ் சுடர்வடிவேயம்மானை
சுத்தவடிவெல்லாஞ் சுடர்வடிவேயாமாயின்
மத்திமத்திற்றிங்கள் மயங்குவோமம்மானே
வயங்குமிருகண்ணைப் மருவத்தாலம்மானை. ௬௨

காரமருங்கண்டர் கயிலாயநாயகனார்
பாரறியக்கையிற் பணம்படைத்தாரம்மானை
பாரறியக்கையிற் பணம்படைத்தாராமாயின்
ஊர்தோறும்பிச்சைக் குழல்வதேனம்மானை
உழலாரோபங்காளிக் கொப்பித்தாலம்மானை. ௬௩

பையரவஞ்சூடுதிருப் பட்டீச்சுரனாதர்
கையலாங்கங்கை தனைத்தரித்தாரம்மானே
கையலாங்கங்கை தனைத்தரித்தாராமாயின்
மெய்யிற்குளிர்வாத மேவாதோவம்மானே
மேவுமோவன்னிகையில்வீற்றிருந்தாலம்மானே. ௬௪

ஆனபணந்தாளழகிற்கயன்வகுத்த
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததுகாணம்மானே
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததேயாமாயின்
ஏனதனின்வட்டப்பாதிருக்கின்றதம்மானே
இடைகுறைந்தால்வட்டப்பாடில்லையோவம்மானே. ௬௫

பேரானபோரூரிற்பிள்ளையார்வேம்படியில்
சீராகவாழுஞ்சிவன்மைந்தனம்மானே
சீராகவாழுஞ்சிவன்மைந்தனாமாயின்
கூராககொம்பொடிந்தகுற்றமேனம்மானே
ஒடிந்தல்லோபாரதமுமுண்டாச்சுதம்மானே. ௬௬

அண்டர்புகழ்போரூரினுறுதத்தன்முன்னோன்
பெண்டுகொள்ளயாட்டாபிரமங்காணம்மானே

பெண்டுகொள்ளமாட்டாப்பிரமமேயாமாயின்
கண்டவரெல்லாங்குட்டக்கணக்குண்டோவம்மானை
குட்டுவார்தங்கள்குறைதீரவம்மானை ௬௭

பொல்லாதபாவமெல்லாம்போக்குதிருப்போரூரில்
வல்லானிடத்திலுண்டோர்வாழானையாமாயின்
வல்லனிடத்திலுண்டேவாழானையாமாயின்
நல்லாள்குறத்திநடுங்காளோவம்மானை
நடுங்காமற்றுனிருவர்நடுவிருந்தாரம்மானை. ௬௮

மண்டலமெல்லாம்புகழுமாபோரூர்வேலவனார்
பெண்டிரண்டுகொண்டபெருமான்காணம்மானை
பெண்டிரண்டுகொண்டபெருமானேயாமாயின்
சண்டையிடாரோவவர்சதாகாலமம்மானை
இட்டல்லோபோரூரென்றேற்பட்டதம்மானை ௬௯

பேசுபுகழ்போரூர்பேதைக்குறச்சிறுபெண்
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தாரம்மானை
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தாராமாயின்
ஆசையாய்பெற்றதவளோமானமம்மானை
அம்மான்மகளென்றேயறிந்துகொண்டாரம்மானை ௭௦

வீசுபுகழ்போரூரில்வேலவர்முன்செய்தமணம்
காசுபணநேராகக்கலியாணமம்மானை
காசுபணநேராகக்கலியாணமாமாயின்
பேசரியவிந்திரனேன்பெண்கொடுத்தானம்மானை
கொடுத்தானேசூரன்குடிகெடுக்கவம்மானை ௭௧

நாடிவந்தபேர்க்கெல்லாநலங்கொடுக்கும்போரூரர்
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாரம்மானை
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாராமாயின்
ஆடினவரின்னமும்வந்தாடாரோவம்மானை
ஆடுவார்பாடவறியார்காணம்மானை. ௭௨

புள்ளிமயிலேறுந்துரைவேலன்போரூரில்
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாரம்மானை
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாராமாயின்
கொள்ளுங்குலங்கலங்கக்கூடுமோவம்மானை
கூடினதுந்தேடினதுங்கோடியுண்டோவம்மானை ௭௩

நம்பர்திருநாகைநாதலிங்கநாயனார்
அம்பொன்மலைவீடாவமர்ந்தனர்காணம்மானை
அம்பொன்மலைவீடாவமர்ந்தனரேயாமாயின்
அம்பலத்தினின்றுகூத்தாடுவதேனம்மானை
ஆடையணிபணிக்காவாடினர்காணம்மானை. எ௪

கற்றுணர்ந்தார்போற்றுங்கழுக்குன்றத்தீச்சுரனார்
உற்றமனைக்காலாலுதைத்தனர்காணம்மானை
உற்றமனைக்காலாலுதைத்தனரேயாமாயின்
பற்றியதோர்க்கால்வலியும்பட்டதோவம்மானை
பாடுமுயலகன்வலியும்பட்டதுகாணம்மானை. எ௫

அப்பார்வயல்சூழணிவிரிஞ்சைவாழரனார்
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாரம்மானை
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாராமாயின்
தப்பாதெவர்க்குஞ்சகாயரோவம்மானை
சதாகாலமார்க்கசகாயர்காணம்மானை. எ௬

நாடுதிருக்கோவநல்லூர்நாதர்தினமுமறைக்
காடுதனிற்றிரியுங்கள்ளர்காணம்மானை
காடுதனிற்றிரியுங்கள்ளரேயாமாயின்
மாடெடுக்கவாடெடுக்கமாட்டுவரோவம்மானை
மாட்டாரோவம்புலியைவைத்திருந்தாரம்மானை. எஎ

சங்கரனாராபத்சகாயனார்சந்ததமும்
மங்கையுடன்கோவனல்லூர் மகிழ்ந்திருந்தாரம்மானை
மங்கையுடன்கோவனல்லூர் மகிழ்ந்திருந்தாராமாயின்
கங்கைநீர்சென்னியின்மேற் கட்டுவதேனம்மானை
கட்டியல்லோவவர்தேகங்காய்ந்ததுகாணம்மானை. எஅ

மன்னரையம்பட்டைவாழ்சந்திரசேகரனார்
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாரம்மானை
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாராமாயின்
இன்னும்விவாகமவர்க்கேனில்லையம்மானை
இருப்பிடமில்லார்க்குப்பெண்ணெவர்கொடுப்பாரம்மானை. எகூ

அத்தர்நடுவாயிலருணசலேச்சுரனார்
சுத்தமிகும்பெண்கொண்டசுந்தரன்காணம்மானை

சுத்தமிகும்பெண்கொண்ட சுந்தரனேயாமாயின்
எய்த்துடம்புயாதியாயிளைத்ததென்னவம்மானை
இசையின்னங்காணுதிளைத்ததுகாணம்மானை. ௮௦

வீறனகோடைநகர் வேங்கியப்பர்க்கெப்பொழுது
நீராடுஞ்செஞ்சடைமே னீரேற்றமம்மானை
நீராடுஞ்செஞ்சடைமேனீரேற்றமாமாயின்
கூறுதுமேனிகுளிராதோவம்மானை
கோடைக்குமுன்னே குளிருமோவம்மானை. ௮௧

ஆரூரில்வாழ்கின்றவா திவிடங்கப்பெருமான்
பேராரும்வாதப்பிணிக்காளனம்மானை
பேராரும்வாதப்பிணிக்காளனுமாயின்
பிரர்காணிஆகுமருந் தருந்தினரோவம்மானை
அறுத்திற்பிணியறுமோவாழிநஞ்சாமம்மானை. ௮௨

வெள்ளெருக்கம்பூச்சூடும் வேதபுரிநாதர்
வள்ளலமரர்க்கெல்லாம்வாத்திகாணம்மானை
வள்ளலமரர்க்கெல்லாம் வாத்தியேயாமாயின்
பிள்ளைகையிலுபதேசம் பெற்றதென்னவம்மானை
பெற்றாலும்பின்னுற் பிழைபொருத்தாரம்மானை. ௮௩

காலனையுங்காமனையுங்காட்டுசிறுத்தொண்டனிட
பாலனையுங்கொன்றபழிக்காரனம்மானை
பாலனையுங்கொன்றபழிக்காரராமாயின்
சாலவுயர்ந்தோர்முடியைச் சாய்க்காரோவம்மானை
சாய்த்தவரெல்லாம்பெரியசைவர்காணம்மானை. ௮௪

நத்துலவுதென்மயிலைநாதர்திருவாலீசர்
சித்தசனையுற்றெரித்தசேவர்காணம்மானை
சித்தசனையுற்றெரித்தசேவகரேயாமாயின்
அத்தலைதீக்கொண்டதெவராற்றினர்காணம்மானை
ஆறுதலையுள்ளார்க்கரிதலவோவம்மானை. ௮௫

மன்னுவெள்ளியம்பலமுமாகாறுபொன்னம்பலமும்
என்னுடையவீசற்கிவையிரண்டுண்டம்மானை
என்னுடையவீசற்கிவையிரண்டுண்டாமாயின்
இன்னுமிருப்பம்பலமொன்றில்லையோவம்மானை
இருமம்பலமடியாநிதயங்காணம்மானை. ௮௬

காஞ்சிபுரம்-வித்வான்
கச்சபாலஐயரவர்கள்பாடிய
கட்டளைக்கலிப்பா.

கந்தித்தாளையுடுத்த தணிகங்கிணங்கான்ற நித்திலக்கச்சிட்டுக் கைகளாக, பந்தித்தாளை மருட்டு முலைச்சியைப்பூரைராயாவுன்றன்பா தத்திலேவந்து, வந்தித்தாளையினிக்கைவிடாமலே மஞ்சமீதிலிருத்தி மகிழ்ச்சியாய்ச், சந்தித்தாளையமேனிவஞ்சித்திரசக்ரமேவும்விநாயகர் தூயனே.

விருத்தம்.

திருக்கோலம்பாரதத்தை மருவவாழ்த்துங்காணுச் சிவனுக்கேற்பப், பெருக்கோலம்பாரதத்தையகற்பென்மானே மதவேள்பிறங்கத்தூண்டும், மருக்கோலம் பாரதத்தை மருவுமுணவையுமாற்றமருவியுன்னைத், தெருக்கோலம்பாரதத்தைப் பொருவவைத்தான்விநாயகனுஞ்சீர்மையோனே. ௮௮

அஞ்சனத்தையணிவிழிமான் மயிலைவிநாயகதுரைமேலாசையாலே, கஞ்சனத்தையும்விடுத்தாணுன்சமைத்துத்தருமினியநலத்ததீம்பால், மிஞ்சனத்தையும்வெறுத்தா ளவன்குவளைத்தாரினையேவேண்டுகின்றாள், கஞ்சனத்தையலையிவவா றலையவமைத்தானெவில்யாங்கருதலென்னே. ௮௯

எத்தவளைக் காக்கவெனுங் கண்மயிலைவிநாயகவே ளினிதியெல்லாம், பூத்தவளைக்காத்தவளைப் பொடித்தவளைப்பணிந்தவளைப்போற்றுமன்பன், நீத்தவளைச்செவிமடவார்பலகோடிசிலகோடிநேர்ந்தமாதர்கோத்தவளைக்கரமடவாளிதுதெரியாதாசைகொண்டகொள்கையீதே.
தித்தித்திக்கத்திரிபுகவிளைபுலவோருளங்களிக்கத்தியாகமெங்குஞ்
சத்திக்கத்திரிதலிலாதளிக்கும்விநாயகமுகிலேதகைசேர்காது
குத்திக்கத்திரிபாகல்செவிபுனையாக்குழன்முடியாக்கோதையின்பஞ்
சித்திக்கத்திரிதலினுற்பயனிலைசற்றேமனந்தாள்சீர்மையோனே. ௯௧

ஆக-செய்யுள்-௯௮௱.

நமச்சிவாயப்புலவர்பாடிய
விருத்தம்.

அவிசெட்டிவாங்குசுரர்க்கிறைநிகராய்வவமருவுமமரரென்றே, தவிசெட்டிமரம்போலவாளாந்திருப்போர்தமைப்பாடேந்தனிநற்கீசன்

கவிசெட்டி திருவடியைபுகழ்வணிகனிசையுடனற்கவிஞர்தஞ்சைச்செவிசெட்டியாலடைந்தானமதுகுறைவிட்டோடுஞ்சேர்கண்மானே.

பாங்குயர்பளிங்குமேடை கொல்லுலையாமாகுதந்துருத்தியாநீடும்,பகர்நிலாக்கற்றைதடியரமுடுகும்பாரிருட்குழாங்குடைகரியா,ஓங்கியசெங்கருள்ளிடுங்கனலாவாயர்பெருப்பணிகொடும்புதையம்உருவினிஎன்னுங்கொல்லனென்பொன்னை யுருக்குமாறென்கொலோவுரையாய்த், தூங்கியவிழியுந்தாம்புடைக்கயிறுந் தூம்பூறுசாம்பியற்குழலும், தாங்கியகையுமெய்யாய்நின்றுதண்ணளிபெய்யுமாமுகிலே, தாண்டவராயபாண்டவர்தூதர் தாழ்வில்சீர்க்கோவலாதிபனே. உ

மெய்யாரப்புவிகாணப்பொதுவிலாட்டை
மிகவெடுத்தீருமையாளுக்கொருபங்கீந்தீர்
பையாரப்பணமெடுத்தீரையாநீர்தாம
பாரறியகக்கத்தைமாலுக்கீந்தீர்
செய்யாரத்தடம்புடைசூழ்கருவைவாழுந்
திருக்காளவீச்சுரரேதேவரீர்தாங்
கையாரமழுவெடுத்துக்காட்டினாலும்
களவும்மைக்கண்டேநான் காண்பிப்பேனே. ௩

மான்பிடித்தீர்முயன்மிதித்தீ ரெவருங்காண
மன்றுதனிலாடெடுத்தீர்மகத்துவந்த
ஊன்பெருத்தயானையைக்கொன் றுரித்தீரப்பால்
உரப்பானதலைக்குறிக்கு முவந்தீரையா
மீன்பொதிந்தவிழிமடவாட் கொருபங்கீந்தீர்
மேலானவேடனெச்சின்மிகவேகொண்டீர்
கான்பொதிந்தகாளத்திநாதாவும்மைக்
கழுக்கள்வந்துசுற்றுவதுங்காணத்தானே. ௪

பருப்பதங்களொவ்வொருதூண்பரவுச்கல்வளையாதபாரமேரு, கரிப்படங்காப்போதிகைநீசெய்தபணிவிடையையென்ன சொல்வேனையா, தருப்பொலியுங்கரமுதலத்திருளப்பசாமிநின்றுய் பாலுன்னைக்கருப்பணிமுன்றிருப்பணிக்கென் றருப்பணினன் மருப்பொலியுங்கமலத்தேனே. ரு

சேதுபதிகாத்தமுத்துராமலிங்கதுரைராச்சியங்கமந்திரி
மாதுபதிமுத்திருளப்பன்கொடியவரிவேங்கைவளராதிக்கங்
கோதுறுபாமரங்காடுகெருணீகர்மும்மதக்கோல்யானுமற்றோர்
மாதுபெரும்புலிக்காடுகல்விமான்களுந்திரிந்தால்மோகந்தானே. ௬

கட்டளைக்கலித்துறை.

காலத்தவரும்புகழ்குடந்காபுரிநாதனெங்கோன்
[illegible]ப்புயல்வண்ணன்கண்மலர்ச்சாத்தக்[illegible]ருத்திலுன்னி
பா[illegible]தவன்மடியானென்றியார்க்குந்தெரியவிட்ட
சூலக்குறியல்லவோநாமம்யாதெனச்சொல்லியதே. ௭

எந்தநிசாசரனுமென்றுசந்திரனுக்கும்வெஞ்சனிக்கும்
பெந்தவனுமென்றுபானுவும்வந்தணிப்பச்செம்பொன்
வந்தருள்செல்வக்கழுகாசலமதுநண்புவைத்துச்
செந்தந்தான்மதியாதவரென்னத்திரிந்தனரே. ௮

பொருகோட்டுவாரிநிலத்திற்குணங்கெட்டபூரியரைத்
திருகோட்டுக்கொப்பென்றுரைத்தென்பயன்வருந்தண்டமிழீர்
திருகோட்டுத்திங்கண்முடிக்கூத்தாதில்லைவனத்தில்வளர்
ஒருகோட்டுகற்பகமெல்லாந்தருந்தன்னையுற்றவர்க்கே. ௯

வெறிவிலக்கல்

தண்டுறைசோலைமலைப்பரிகாரிவந்தாலிவளுக்
கண்டுபடாதவிக்காமச்சுகம்விடுமாதலினால்
பண்டுபழகினர்போலந்தவேளையிற்பாயசத்தைக்
கொண்டுவந்தீரிதிற்றோடம்பிறந்திடுங்கோதையரே. ௰

படைத்தாமவேற்கண்ணிகண்ணீர்ப்பரவரகப்பாவைபொங்கி
உடைத்தாலடைத்தற்குபாயமுண்டோநறையூற்றிதமிழ்த்
தொடைத்தார்மௌலியாற்சும்மாடுகட்டிச்சுமந்துசுமந்
தடைத்தாலடைபடச்சொக்கேசயிதுவையையாறல்லவே. ௧௧

ஏழேழுசங்கத்துடனிருந்தாளென்றியம்புகின்றீர்
பாழேழ்மையுற்றிடுமானிடரேசொக்கர்பண்பறியீர்
ஆழேழுலகத்துக்கப்பாலிருந்தவடிகளும்பா
வாழேழுலகத்துக்கப்பாலிருந்தமணிமுடியே. ௧௨

காமொன்றுங்கைத்தலத்தண்ணல்சென்றாரன்கனிந்துநம்மை
மாடென்றழைத்திட்டமோதிரமேவண்மையானதமிழ்ப்

ரூசிமேலேதவஞ்செய்கின்றதொக்குமென்னுஞ், சிறுரோமரேகையாள் வந்தாள் பராக்கென்று சேவித்துநிற்கிருள்பார், திகள்வடுகநாததுரை மெச்சும்ப்ரதானி சிவசுப்பிரமண்ணியராசனே.

## நையாண்டிப்புலவர்.

### விருத்தம்.

விற்கம்பத்தடியாலுமடியுண்டான்விண்ணவரைவேலைகொள்ளும்
நாற்கம்பத்தடியாலுந்தூக்கவசையாளூருர்நாதன்கோயில்
பொற்கம்பத்தடியினின்றுவன்மீகத்தானையுன்னிப்போற்றினோர்க்கு
சொர்க்கம்பத்தடியப்பான்மோட்சம்பதத்தடியாகத்தோற்றுந்தானே

### கட்டளைக்கலித்துறை.

செங்கைவரிச்சிலைதங்கமதைச்சம்புத்தீவுதன்னில்
எங்குவைத்தாலும்பள்ளிகொண்டான்றமிழ்க்கிவனென்றே
திங்களிரவிதினஞ்சுற்றிக்காக்கத்திரைசுருட்டுங்
கங்கைக்குமுத்தரித்தேயொளித்தானுமைகாதலனே. ௩

மேலாடையின்றிச்சமைபுகுந்தாலிந்தமேதினியோர்
நூலாயிரம்படித்தாலுமெண்ணு நுவல்பாற்கடலோ
மாலானவாணிபொன்குடைகண்டுமகளைத்தந்தே
ஆலாலமீந்ததுதோலாடைசுற்றுமரன்றனக்கே ௪

வள்ளிகொண்டான்மயிலேறிக்கொண்டான்மதிபோலுமலை
வெள்ளிகொண்டான்யிடையேறிக்கொண்டான்விண்ணவர்க்கமுதம்
துள்ளிகொண்டான்புள்ளிமேறிக்கொண்டான்சுபசோபனஞ்சேர்
பள்ளிகொண்டான்புகழேறிக்கொண்டானென்றுபார்க்கவென்றே. ௫

### எல்லீசு.

செந்தமிழ்ச்செல்வனுமோராயிரந்தலைச்சேடனும்யாழ்
சுந்தரத்தோடிசைவல்லோனும்யாவரும்தோத்திரஞ்செய்
கந்தனைச்சொல்லுங்கவிராமச்சந்த்ரனைக்கண்டுவெட்கி
யந்தரவெற்பிழிபாதாளந்தேடியடங்கினரே. ௬

## இராமச்சந்திரகவிராயர்.

வணக்கம்வருஞ்சிலநேரம்குமரகண்ட
வல்லிப்புவருஞ்சிலநேரம்வல்லியச்செப்யக்

கணக்கவருஞ்சிலநேரம்வேட்டைநாய்போற்
கடிக்கவருஞ்சிலநேரங்கயவர்க்கெல்லாம்
இணக்கம்வரும்படித்தமிழைப்பாடிப்பாடி
எத்தனைநாடிரிந்துதிரிந்துழல்வேனையா
குணக்கடலேயருட்கடலேயசுரரான
குரைகடலைவென்றபரங்குன்றுளானே. ௭

மாசற்றிடுதிருமேனியின்மருவுற்றதுபோல
மாரப்பயல்கணைதைத்திடவந்தெய்த்தனனையோ
காசத்தனையுண்ணாதுதுட்டத்தனையளவாய்
கையத்தனையானால்மகன்மெய்யெத்தனைநோமோ
வாசற்படிகடவாதவன்மனமெப்படியானாள்
மதனன்சிலுதறியாதவன்மயலெப்படியானாள்
ஆசைப்படுவாரோருபுருடரின்மேன்மடவார்கள்
அருணாசலராயர்தமிழறியும்பெருமானே. ௮

புல்லுக்கட்டும்விறகுஞ் சுமந்தபேர்பூர்வகாலத்தும்புண்யவயத்தினால், நெல்லுக்கட்டும்பணக்கட்டுங்கண்டபின் நீலக்கல்லிற்கடுக்கனும் போடுவார், சொல்லுக்கட்டும்புலவரைகண்டக் கரற்றாறிப்பாய்ந்துகதவையடைத்தெதிர், மல்லுக்கட்டும்மடையரைப்பாடவோமலையச்சாரலில்வாழ்பெரியம்மையே. ௯

வெண்ணெய்க்கட்டியுஞ்சீனியுமூட்டலாம்
விக்கிக்கொள்வதற்கென்செய்யலாமொரு
பெண்ணைக்கட்டிக்கொடுத்திடலாம்பிள்ளை
பெருவதற்குமுடன்படுவார்களோ
பண்ணைக்கட்டியமென்மொழியாளுந்தம்
படுக்கைவீட்டில்வந்தாளேயவனைக்
கண்ணைக்கட்டியணையாமலேன்விட்டீர்
கழனிசூழும்பழனியில்வேலரே. ௧௦

ஏதிலேவறியவர்க்குமினிபகளிப்புலவருக்குமிரங்கியந்தப்
போதிலேதனங்கொடுக்குந்தஞ்சைநகர்க்குருவப்பபூபனெற்குக்
கோதிலேகிடந்துழலும்பலரிடத்திற்சென்றுதமிழ்கூறுவண்ணங்
காதிலேயொட்டிட்டுத்தாடையின்மோதக்கடுக்கன்றானிட்டானே. ()

வம்பிறைக்குங்கடம்பிறைக்கும் பெரும்பிறைக்கு நிகராகவளர்ந்தவொற்றைக் கொம்பினிழக்குந் தாதையராங்கடனைக் காரோணர் கொன்றையல்கார், அம்பிறைக்கும்விழிப்பாவை யாயர்குழல்கொல்ல

ஹலையனலிற்காய்ந்த, செம்பிறைக்கும்வெண்பிறைக்குங் கரும்பிறைக்குமொருத்தனித்தென்செய்வானே. கஉ

மூங்கிலிமேலயொளித்திருந்தான்முக்கண்காமி
முதியகடற்போய்படுத்தான்முகுந்தசாமி
தாங்கமலப்பொகுட்டுறைத்தான்றலைநாற்சாமி
தடவரையிலுழன்றுனின்றுறகப்பன்சாமி
வாங்கியுண்ணவழிக்காத்தான்வயிற்றுச்சாமி
வாணருக்கிங்குதவுவரார்மற்றோர்சாமி
ஓங்கியசீர்மயிலையில்பொன்னப்பசாமி
உதவியவேங்கடசாமியுசிதவேளே. கஙு

வஞ்சகத்திலொன்றுனைத் துதிக்கைமிகத்திரண்டானை வணங்காருள்ளே, அஞ்சரணமுன்றுனைமறைபொழிநால்வாயானையத்தனுகித். துஞ்சவுணர்க்கஞ்சானை சென்னியணியாறுனைத்துகளெழானைச், செஞ்சொன்மரைக்கெட்டானைப் பரங்கிரிவாழ்கற்பகத்தைச் சிந்தைசெய்வாம். கச

மூன்றுவெண்பா.

சலமேதேசங்கத்தாபூணாரந்தாமே
கலைதாநற்புங்கவன் மால்காணுப்-புலவுடைய
கங்காரசோணுசலாமதியக்கோடீர
சங்கராசோணுசலா. கரு

கிரிலங்குமாடகூடவீதிவீறுதில்லையான்
திருவிருக்குமார்பனெங்கடிருமலைக்குமுன்புபோய்
நீரிருந்துமாலைகேளுமவன்மறுத்துரைக்கிலென் (ள்
னெஞ்சுசொல்லும்வார்த்தையாக நீங்கள்சொல்லும்வண்டுகா
வாரியொன்றுமாயிரண்டுமாலைமூன்றுநாலுவேத
மதியமைந்துகங்குலாறுமாரனேழுவாடைஎட்
டாரமொன்பதன்றில்பத்தடங்கலும்மொருக்குமால்
அத்தனைக்கெலாமிலக்கெனுவியொன்றுகாணுமே. கசு

ஓரானைவனத்தேதிருவெண்ணுவனிழற்கீழ்
உறையும்பெருமான்வீதியுலாவும்பவனித்தே
நேராக்கிடப்பேனவள் பறிபோனதுகேட்பேன்
நில்லென்றுதடுத்தால்வகைசொல்லென்றுமறிப்பேன்
பேரானையைவிட்டான் மூலையீரானையைவிடுவேன்
பொழியம்புதொடுத்தாலிருவிழியம்புதொடுப்பேன்

தோராவழக்கிட்டால்வகைவாராவழக்கிடுவேன்
தொல்லைக்கணைகொண்டேவகைவெல்லப்பெருவேனே

அடல்கொண்டெழுசூலப்படையாரூர்பெருமானார்
ஐயம்புரென்றேயமறகவாசலில்வந்தார்
கடுக்கும்பசென்றேறயமறகவாசலில்வந்தார்
கைவந்தனமென்றாரிதுகைவந்தனமென்றேன்
மடவன்னமதென்றாரிதுவல்லோதனமென்றேன்
கொடுவந்தனமென்றாரிதுவல்லோதனமென்றேன்
கொடுவந்தனமென்றாரிதுகொடுவந்தனமென்றேன்
கொள்ளாபலிசொல்லாரவர்கோட்பாடறியேனே க௮

வீமனுக்குமைந்தனார் வேதனுக்குமைந்தனாரீசனுக்கும், காமனுக்குமைந்தனார்வீமன்தம்பிகந்தனுக்குமாமனார்காமன்றானே,மாமனுக்குமூன்றமையன்றந்தைகாலன்வையகத்திலிம்முறைமைவயங்கலாலே,ராமனுக்குச்சிதைதங்கையாகவேண்டும் ராவணனுக்குத்தகப்பன் ராமன்றானே. க௯

வீமன்-கருடனுக்கு இறைவனாகிய-திருமால்) (வே-மூங்கைல்கிந்தன்சிவன்) காமன்-கற்பகத்துக்கரசனாகியஇந்திரன்) மாமன்குதிரைக்கிறையவனாகிய நகுலன்தமயன்தருமன் தந்தைஇயமன்) (இராமன் இரவுக்கரசனாகியசந்திரன் இராவணன் இருள்நிறமுடையமன்மதன்.

வெண்பிள்ளைப்பிறைநோக்குங்கரும்பிள்ளைக்குறிபார்க்கும்வேதவென்னும், மண்பிள்ளைதிரந்தாற்றுங் கிளிப்பிள்ளை மொழிபயிற்றுமடவார்க்கெல்லாம், எண்பிள்ளையெனக்கவளோ வொருபிள்ளையெளியேன்மெத்த, பெண்பிள்ளைபடுந்துயரம் பெரியபிள்ளைக் காரெடுத்துப்பேசுவாரே. உ௰

விறகுதறிக்கக்கறிநறுக்கவெண்சோற்றுப்புக்கடகுவைக்கப்
பிறகுபிளவுகிடத்ததென்றாலாறுகப்பிளந்துகொள்ளப்
பறகுபறகென்றேசொறியப்பதமாயிருந்தபாகதுவெட்டி
இறகுமுளைத்துப்போவதுண்டோவெடுத்திராயிற்கொடுப்பீரே. உக

கட்டளைக்கலித்துறை.

இரவலனையுனக்கில்லாத் தென்னவியமென்ன
பரவுணவேதுசுவையற்ற தென்சொற்பான்மையென்ன
தரவுரைசெய்திடவென்றானதற்கொன்றுஞ்சாற்றிலன்யான்
வரதிருவேங்கடநாதா வென்றென்பொன்வழங்கினேனே. உஉ

இல்லதென்ன திரு இதயமென்னவேம் உணவேதுகடன்சுயற்ற தென்ன நாசொற்பானமையென்னதா இருதிற்போந்தபொருள் திரு வேங்கடநாதாவென்பராம்.

விருத்தம்.

கல்லாதவொருவனைநான்கற்றாயென்றேன்
காடெறியுமவனைநாடாளவாவென்றேன்
பொல்லாதவொருவனைநானல்லாயென்றேன்
போர்முகத்தையறியானைப்புலியேயென்றேன்
மல்லாரும்புயமென்றேன்சூம்பற்றோளை
வழங்காதகையனைநான்வள்ளலென்றேன்
இல்லாதுசொன்னேனுக்கில்லையென்றான்
யானுமென்றன் குற்றத்தாலேகின்றேனே. உங

ஆவீனமழைபொழியவில்லம்வீழ
அகத்தடியாண்மெய்நோவவடிமைசாவ
மாவீரம்போகுதென்றுவிதைகொண்டோட
வழியிலேகடன்காரர்மறித்துக்கொள்ளச்
சாவோலைகொண்டொருவனெதிரேசெல்லத்
தள்ளவொண்ணாவிருந்துவரசர்ப்பந்தீண்டக்
கோவேந்தருழுதுண்டகடமைகேட்க
குருக்களோதட்சணைகள்கொடுவென்றாரே. உச

கல்லைத்தான்மண்ணைத்தான்காய்ச்சித்தான் குடிக்கத்தான்கற்பித்தானா, இல்லைத்தான்சொல்லித்தானெனக்குத்தான்கொடுத்துத்தான்ரட்சித்தானா, அல்லைத்தான்சொல்லித்தானுரைத்தானோவத்தானையோவெங்கும், பல்லைத்தான்றிறக்கத்தான்பதுமத்தான் புவியுற்றான்பண்ணினானே. உரு

வஞ்சகர்படைத்தலைந்த காலிற்புண்ணும்
வாசறொறுமுட்டுண்டதலையிற்புண்ணுஞ்
செஞ்சொல்லைநினைந்துருகுநெஞ்சிற்புண்ணுந்
தீருமென்றேசங்கரன்பாற்சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்லபிரம்படியின்புண்ணும்வேட்டன்
கொடுங்காலாலுதைத்தபுண்ணுங்கோபமாகப்
பஞ்சவரிலொருவன் வில்லாலடித்தபுண்ணும்
பாரென்றேகாட்டிநின்றான்பரமன்றானே. உசா

களிக்கேன்முள்வேலிகழுதைக்கேன்கடிவாளக்கறிப்பில்லாத, உள்ளிக்கேன்பரிமளங்களிலர்நிலத்துக்கேன்விதைகளொடித்துப்போடும்,கள்ளிக்கேன்கோடாலி தடப்பத்திற்கேன்சும்மாபோகும், மள்ளிக்கேணதிவீர மழவரங்கபூபனெனும் பட்டந்தாயே. உஎ

கயக்காவிநாறுங்குழம்பிற்பிரசண்டா
காரார்கொடைசெங்கையாரோதன்மைந்தா
இயக்காகனமார்பிற்செழும்புனணேயந்தார்
இப்போதுநீநல்கிலென்பேதைமார்பில்
சயக்காமவேளம்புதையாதுமுத்துத்
தாமஞ்சுடர்சந்தணம்பூசினுலும்
செயக்காதுவேரோசெவிக்கும்பொருக்கும்
நீயென்னமீளாதுதிங்கட்கொழுந்தே. உஅ

சொன்னமன்னமாடைதந்தான்வீதியில்வெற்றிலேமடித்துச்சுருளுந்தந்தான், கன்னவின்மோதிரந்தந்தான்சரப்பணிதந்தானிரட்டைக்கடுக்கன்றந்தான், செந்நெல்விளையூர்ந்தான்பேர்தந்தான் மல்லேயில்வாழ்சிவந்தானுங்கட், கென்னதந்தானென்றவர்கட் கெத்தணேயும்வரந்தந்தானியம்பத்தானே.

நடுவெழுத்தலங்காரம்.

அத்திரமவேலாலேயமிராசியென்றிற்
சமைந்தபெயர்மூன்றினிடைக்கரத்தால்
மெத்தநகிற்றுணே வந்தடைந்தேனிந்து
விதனமகற்றிடுமற்றையெழுத்தோராறில்
பத்துடையானேத்தடிந்துபெண்ணுச்செய்து
பரிவினுகர்வோனிருந்தாள்பணிந்துபோற்றும்
சித்தசனேதெளியசிங்கன்றவத்திற்றோன்றுஞ்
சீதாராமப்ரபலதியாகவானே.

அத்திரம்-பக-வேலாலயம்-கடல்-இராசி கண்ணி இவற்றினடுவெழுத்துக்கடன் மற்றையவெழுத்து-பழி-கல்கனி-பழியால் இராவணணேக்கொன்றுகல்லேப்பெண்ணுகச்செய்து சவரியின் கனியைத்தின்றவன் திருமால்.

கல்லாலயமாந்தேவழிமாங்கழுதைகசடர்பொதிசுமக்குங்
கடாவோவுழுதுபயிரிடற்காங்கட்டம்பன்னறக்கிரையாகும்

புல்வேறீசர்வாகனமாம்பொதியுஞ்சுமக்கும்பிணமெனிலோ
பூசிமுடித்துமறையோர்க்குப்பொருளீயீந்துபுகழெய்தும்
மல்லாகுட்டிச்சுவரெனிலோமாடுமுறைஞ்சுமறைவாகும்
மதியாத்துடைப்பந்தானெனிலோமாடகூடந்தனைவிளக்கும்
அல்லதுஅத்தன்தனக்கிணையாரையுரைப்பேன்புவிமீதில்
அவனைக்குடித்துக்கூறுமிடத்தவனுக்கவனேசரிதானே. ௬0

வீரவெண்டையப்ரதாபர்தியாகராசர்கமலைசூழ்
வீதிகண்டுபவனிகண்டுவிந்தைகண்டுபந்தியாய்த்
தூரநின்றபூவைகாளடுத்துநின்றகிள்ளைகாள்
துன்பமேயலாதுபாவிசுகமறிந்ததில்லையால்
மாரனம்புபட்டகாயமாறுதில்லையிரவெல்லாம்
மங்கைமார்தொடுத்தசண்டைமாறுதில்லையென்செய்வேன்
ஆரிருந்துமுதவியில்லையென்றனுசையொழியுமோ
அதுவுமலைவிதியைநொந்துமாவதில்லைகாணுமே. ௬௧

சத்தபங்கி.

திமிரமருதபுலாதிகளேதருதேடரியதாய்மாறுஞ்
சேனன்மகாமால்வசமேலதமுஞ்சிறுனமயின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவேகூறுங்
குருபரகோலாகலனேவிதியொடுகுறுகியேமிடிதீராய்
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமேதேருந்
நவிமகள்சேர்வேடுவனேபுதுமணநறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புண்டராடவனேமீறும்
மரகரவேலாயுதனேமுதுமறையறுமுகமுருகோனே.
திமிரம்மருதபுலாதிகளேதரு தேடரிதாய்
மாறுஞ்சொன்னமகாமரம்வசமேமகமுறுசிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள் கூடெனவே
கூறுங்குருபரகோலாகலனே விதியொடுறுகியமிடிதீராய்.
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமே
தேறுநவிமகள்சேர்வேடுவனே புதுமணநறுமதாபுனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புனர் ஆடவனே
மீறும்மரகரவேலாயுதனே முதுமறைஅறுமுகமுருகோனே.

நவபங்கி

அரிமருகாகருணாலயனேதிடவாரணனேபோதன்
வரியுமையோர்சூழ்ப்புனிதர்புலவடரயிலமார்பொற்தானே.

கரிமுகனேயசகோதரனேபடிகாரணனேநல்கு
கதியறவேலவனேநலமிகுகயிலையினற்குருவே
குரவலர்நீபமணிபுயனேவடிகூறமுதேயாதுங்
குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனேகொடியவாரணனேகோதன்
மதியகமேவாழ்குமராகுலவியமயிலைமலைக்குகனே. ௯௯

அரிமருகாகருணாலயனே திட ஆரணனே
போதனனரியிமையோர்சூழ்புனிதாபுலவடர் அயிலாபொற்கரனே
கரிமுகனேயசகோதரனே மிகு காரணனே
நாதங்கதியுறவேலானவனேமிகு கயிலையனற்குருவே
குரவலர்நீபமணிபுயனே வடி கூறமுதே
ஓதுங்குருமணிசேர்மார்பினனேஉலகருள் குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனே கொடி வாரணனே
கோதின்மதியகமேவாழ்குமராகுலவிய மயிலைமலைக்குகனே

சத்தபங்கியின் பிரிவு.

கட்டளைக்கலித்துறை.

திமிரமருதபுலாதிகளேதருதேடரிதாய்
குமரசிகாமணியேகனிவாயருள்கூடிடவே
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமே
அமரர்பிரானருள்சஞ்சரிதோள்புணராடவனே. ௧

கொச்சகம்.

தேடரியதாய்மாருஞ்சொன்னமாகாமல்வசமே
கூடனவேகூறுங்குருபரகோலாகலனே
காடொறுமேதேறும்கவிமகள்சேர்வேடுவனே
ஆடவனேமீறுமரகரவேலாயுதனே. ௨

கலிவிருத்தம்.

மாறுஞ்சென்னமகாமால்வசமே, கூறுங்குருபரகோலாகலனே
தேறுங்கவிமகள்சேர்வேடுவனே, மீறுமரகரவேலாயுதனே. ௩

சிந்தடிவஞ்சிவிருத்தம்.

மதமுறுசிறுமையின்மதியாலே, விதியொடுகுறுகியமிடிதீராய்
புதுமணநறுமலர்புனைமார்பா, முதுமுறையறுமுகமுருகோனே. ௪

குறளடிவஞ்சிவிருத்தம்.

சிறுமையின்மையின்மதியாலே குறுகியமிடிதீராய்
நறுமலர்புனைமார்பா, அறுமுகமுருகோனே.

வெண்பா.

தேடரியதாய்மாருஞ்செனனமகாமால்வசமே
நாடொறுமேதேறு நலிமகள்சேர்-வேடுவனே
ஆடவனேமீறு மரகரவேலாயுதனே
கூடனவேகூறுங் குரு. க

நளபங்கியின்பிரிவு.

அரிமருகாகருணாலயனே, கரிமுகனேயசகோதரனே
குரவலர்நீபமணிபுயனே, மரகதமாமயில்வாகனனே
புலவரயிலமர்பொற்பரனே, நலமிகுகயிலைமலைக்குருவே
உலகருள்குயிலுதவுத்தமனே, குலவியமயிலைமலைக்குகனே உ

கட்டளைக்கலித்துறை.

அரிமருகாகருணாலயனே திகழாரணனே
கரிமுகனேயசகோதரனே படிகாரணனே
குரவலர்நீபமணிபுயனே வடிகூறமுதே
மரகதமாமயில்வாகனனே கொடிவாரணனே. ௩

கொச்சகம்.

ஆரணனேபோதனரியிமையோர்சூழ்புனிதா
காரணனேநாதங்கதியுறவேவானவனே
கூறமுதேயோதுங்குருமணிசேர்மார்பினனே
வாரணனேகோதின்மதியகமேவாழ்குமரா ௪

சந்தவிருத்தம்.

போதனனரியிமையோர்சூழ்புனிதா புலவாவிமலாபொற்கரனே
நாதங்கதியுறவேவானவனே நலமிகுகயிலையனற்குருவே
ஓதுங்குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
கோதின்மதியகமேவாழ்குமரா குலவியமயிலைமலைக்குகனே. ரு

கலிவிருத்தம்.

போதனரியிமையோர்சூழ்புனிதா
நாதங்கதியரவேரானவனே
ஓதுங்குருமணிசேர்மார்பினனே
கோதின்மதியகமேவாழ்குமரா. சா

குறளடி வஞ்சிவிருத்தம்.

அயிலாபொற்கரனேகையிலையனற்குருவே
குயிலுதவுத்தமனேமயிலைமலைக்குகனே

திடவாரணனே படுவாரணனே
வடிகூரமுதே கொடிவாரணனே. ௭

வெண்பா.

ஆரணனேபோத னரியிமையோர்சூழ்புனிதா
கூரமுதேயோதுங் குருமணிசேர்-மார்பினனே
வாரணனேகோதின் மதியகமேவாழ்குமரா
காரணனேநாதங் கதி. ௮

ஆகசெய்யுள்-௭௭உ.

---

## மதுரகவிராயர்.

வெண்பா.

துங்கவரைமார்பா துரைரங்கபூபதியே
இங்கோர்புதுமை யியம்பக்கேள்-பங்கையக்கை
ஆயிழைக்குநான்குநத லேந்துகுழையாறுமுலை
மாயாவிழியேழா மதி. க

அந்திவெடிமுல்லை யரும்பெடுத்துநான்வந்தேன்
விந்தையதாநாயகற்கு மெல்லியனே-சுந்தரஞ்சேர்
செண்டுகட்டவேண்டுந் திருவிளக்கிலேதிரியைக்
கொண்டுவந்துபோட்டுக் கொளுத்து. உ

சித்திரமாமண்டபங்க டென்றல்வருசாளரங்கள்
பத்தியுலாவும் பளிங்கறைகள்-இத்தனைவிட்
டிக்குச்சிலேயானிருப்பிடமென்றார்சொன்னா
ரிக்குச்சிலையானுக் கின்று. ௩

நீளத்திருந்துழன்றாய் நீங்காநிழல்போல
நாளைக்கிருப்பாயோ நல்குரவே-காளத்தி
நின்றைக்கேசென்றக்கா னீயெங்கேநானெங்கே
இன்றைக்கேசற்றே யிரு. ௪

விருத்தம்.

உளங்கொண்டமணிப்புயனே பிரம்பூரானந்தரங்கா வுன்பாற்செல்ல, வலங்கொண்டகருணையாமிடங்கொண்டாமெழினரையான் வலத்தேகண்டோம், பொலங்கொண்டமணிமாடமீமிசையிற்புயறவழும் ,

துவையென்னுங், தலங்கொண்டோமினதுநகைமுகங்கண்டோமினிவே
ண்டுந்தனங்கண்டோமே.

## இ ரா ம க வி ரா ய ர்.

சார்வடைத்தகாதலைத்தான் றுரைதிருவேங்கடமளித்தகன்றுவெங்கு
யேர்படைத்தவானந்தரங்கமகிபாலாநின்பிறம்பூர்நாட்டி (ம்
னேரிழைக்குவிழியேமுழுமலையாறுகாதைந்துநெற்றினன்கு
பாரிடத்திலிப்புதுமைகண்டுகந்தேனிதன்பலனைப்பகர்ந்திடாயே. சு

கொக்குப்புறுபறக்குங்குருவிபறக்குங்குயில்பறக்கும்
நக்குப்பொருக்கிகளும்பறப்பாநானேன்பரப்பேனராதிபனே
திக்குவிசயஞ்செலுத்தியுயர்செங்கோனடாத்தும்பாங்காநின்
பக்கமிருக்கவொருநாளும்பறவேன்பறவேன்பறவேனே.

மூவொன்பதென்பதிலோர்நாளில்லைமொய்வனத்திற்
றுவுந்தனிமிருகந்தானில்லை-நேரே
வளையாதநடையில்லைவாருறுங்கவிம்மும்
முலையாளையான்முயங்குதற்கு. அ

சென்னபுரிவந்துசிவனுயினேனல்ல
அன்னமதுகாணுதவனுகி மன்னுசிரங்
கைக்கொண்டரைச்சோமன்கட்டிச்சடைமுறுக்கு
மெய்க்கொண்ட நீரணிந்துமே. சு

தளம்பொன்பணம்படைத்தசம்பாரியாய்ப்பின்னோர்
முளம்பிச்சைகள்ளனிவ மூட்டைகனம்பெற்ற
மீதுலத்தும்போற்றுகின்றவேதாசலாநினைப்போல்
ஈமலத்துமார்கிலரேயென். க0

சேரநாளெல்லாலவெண்டிங்களனமேசேர்ந்தால்
ஆராவமுதாமென் னுச்சரியம்-ஓராமல்
நானிலவாசையன்றந்தருளும்
சீனிவாசையன்மணஞ் செய்து. கக

அஞ்சம்பினுலெய்து மன்னநடைக்கன்னிகையை
அஞ்சம்பினுலெய்து மப்பாவி-நெஞ்சமுறும்
காவிக்கணந்தார் கலசைவேதாசலனே
காவிக்கணந்தார் கடந்து. கஉ

விருத்தம்.

மதுமேவுகுவளையணிபுயனென்றேனே
மருவளஞ்சூழ்கலசைநகர்மன்னென்றேனே
முதுநீதிதெய்வசிகாமணிமாதுக்கு
முத்தவொருமகனெனநான்மொழிந்திட்டேனே
பதுமாசனத்திமகனென்போர்சண்டை
பண்ணுகின்றானவனாற்படுந்துன்பத்தால்
இதுவேதாசலாமென்றேனிதற்கென்னன்னை
ஏதேதோவைத்துபழியிடுகின்றாளே. கக

பூங்கமலன் கலசைவேதாசலன்போ லுருவமைக்கும்பொற்பிலா லென்,றுங்கமலர்சொல்லக்கேட்டுவாணியரிபாலுரைக்கவடைந்தாளன்னேன்,தாங்குவனம்போயிருந்தானரனிடத்திற்சொலப்புதிதாய்க்கழலலுற்றான், எங்கியந்தத்திறங்கற்பாணிவனுவில் வீற்றிருந்தாளெழிற்கண்மானே.

ஆகசெய்யுள்-எஅ௬.

---

பொது.

## பலவித்துவான்கள்பாடல்.

கட்டளைக்கலித்துறை.

மாப்பிட்டெனுஞ்சிறுதூப்பிட்டுக்காகமண்ணைச்சுமந்தே
ஆப்பிட்டுக்கொண்டடிபட்டசொக்கேசருக்காசைப்பட்டுச்
சேப்பிட்டுமையிட்டுப்பூமாலைதந்தாதிமிர்ந்துமஞ்சட்
காப்பிட்டுவாழ்க்கைப்பட்டாள்கூடல்வாழுங்கயற்கண்மணியே. க

காமாகயக்கண்ணிசோபம்பொறுளென்றன்கண்பனிநீர்
சீமான்கரத்திற்றுடைக்கரிதோசெகமேழுமெச்சும்
கோமான்கரத்திற்குனிசிலைராயன்குகன்சிலம்பில்
மாமாகாலல்லவேமன்னவாவுன்மலர்க்கரமே. உ

கைத்தலந்தன்னிற்பசும்பொன்வளையல்கலகலெனச்
சத்தமொலித்திடநூபுரம்பாதச்சதங்கைகொஞ்சத்
தத்திமியென்றுநடனஞ்செய்தம்பிசர்தஞ்சநதிப்பெண்
செத்தக்குரங்கைத்தலைமேற்சுமந்துதிரிந்தனளே. ௩

பரிக்கொம்புபோலப்பகர்வான்சரிதைபகர்ந்திடினும்
உரிக்கயராயினுமீயார்கடனுடனேடிச்சென்று
கரிக்கொம்புபோனமுலைமின்னருக்கிவர்கன்னியர்கை
நரிக்கொம்புதானுமுண்டோவெங்கடாசலநாயகனே. ச

கேளந்தநாளையின்மைந்தாநின்னையரைக்கிட்டிமத
கேள்வந்துபூசலிடமதிகாயவெருண்டெனது
தாள்வந்துபற்றிமுன்வாய்புதைத்தேனின்றுதாழ்மைசொன்ன
நாளந்தநாளல்லவேயிந்தநாயகற்கே. ரு

சுற்றனவெக்கொம்புயத்தின்கேட்பனகண்டவன்ஞள்
உற்றனவொக்குமொருபகற்காண்பனவொன்னலரைச்
செற்றனவொக்குஞ்சிறுநகைசெய்வன்தீயர்செய்யப்
பெற்றனபெற்றியெண்ணுன்மறப்பானெம்பெருங்குன்றமே. சு

பக்குவமாகக்கவிநூறுசெய்துபரிசுபெற
முக்கரணம்மெதிர்பல்காலும்போட்டுமுயன்றிடினும்
அக்கடபோவெனும்லோபரைப்பாடியலுத்துவந்த
குக்கனையாண்டருள்வில்வவனத்துக்குயிலம்மையே. எ

பொல்லாமதப்பயலெங்நேரமுஞ்செய்யும்போருமெனைக்
கொல்லாமற்கொல்லுமதியுங்கடலுங்குயிலுமிவை
எல்லாநெநாலைந்தெதன்றெண்ணினன்பாவியிப்போதுன்மனம்
கல்லாயிருக்குமென்றெவ்வளவேனுமுன்கண்டிலனே. அ

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியிற்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிதமாம்
மாலையுபாதிதுயில்காமமிவைமாற்றிவிட்டே
ஆலமுகந்தருளம்பலவாவென்னையாண்டருளே. கூ

நாலடிவள்ளுவராமேயிப்பாலைகடந்தபெருங்
காலடிமேலடிமாருடியேகாட்டிரவிற்பட்டும்.
பாலடிசில்வெண்ணெயுண்டோனரங்கன்டணிவரையில்
வேலடிமுள்ளுக்குபாயமிட்டேனம்விழைவுநன்றே. ய

புலியைக்கொடுத்துப்பசுவாங்கியோர்ப்புலிப்பூங்குழலாள்
புலியைப்பசுதின்னவிட்டுப்புலியைத்திணுதகற்றிப்
புலியையரைத்துப்பலகாரஞ்செய்துபொருந்துமுகப்
புலியைக்களிப்புடன்சாறுவைத்தாடன்புருடனுக்கே. கக

(புலி-வேங்கை-பொன்) புலி-மயிர்சாந்து) (புலி-புல்) புலி வரிநெல்) (முகப்புலி-முகத்தாமரை) சாறுதிருவிழா)

வேளாமழகன்றுரைசிதக்காதியென்வீட்டிலொரு
நாளாகிலும்வரக்காண்கிலனேயெய்தநாளுமவன்
தோளாலணையுஞ்சுகவாசுபத்தைத்துணிக்கவொரு
மாளப்பிறந்தனையேமைந்தனேயென்னவாயுனக்கே. ௧௨

நடந்தாளொருகன்னிமகாராசகேசரிநாட்டிற்கொங்கைக்
குடந்தானசையவெயிலாயதுகொண்டுகொற்றவருந்
தொடர்ந்தார்சந்யாசிகள்யோகம்விட்டார்சுத்தசைவரெல்லாம்
மடந்தானடைத்துச்சிவபூசையங்கட்டிவைத்தனரே. ௧௩

காலாகலைதெரியேகம்பவாணர்நன்னாட்டில்வளர்
சேலாகக்கண்கள்படைத்தபெண்ணேநின்றிகழும்வயி
றாலாகவுமல்குற்பாதமதாகவவ்வணையின்மிசை
மாலாகயான்பள்ளிகொள்ளவந்தேனுந்தன்மாளிகைக்கே. ௧௪

அரவிந்தகண்பன்சுதன்றம்பிமைத்துனனண்ணன்கையில்
வரமுந்தியாயுதம்பூண்டவன்காணுமற்றங்கவனே
பரமன்றிகிரியையேந்தியமைந்தன்பகைவன்வெற்பை
உரமென்றெடுத்தவன்மாற்றான்றன்சேவகனெண்டோடியே. ௧௫

சங்கரன்றேவிதமயன்மனைவிதனக்குமுன்னாம்
மங்கையரேறியவாகனங்காணுமற்றெங்கவளோ
கொங்கைகளிரைந்துடையவாளாயிக்குவலயத்தில்
எங்குந்திரியும்வயிரவரூர்தியென்றேநினையே. ௧௬

மாத்தானைப்பித்தனைமாலேறுவானைமதகரித்தோல்
போர்த்தோனைவேதப்பொடிபூசுவாசனையிப்பூதலத்தேன்
ஆத்தாளுடனெதிர்த்தம்பலத்தேயென்றுமாடிநிற்குங்
கூத்தாடிப்பயலுக்கோமகளேமயல்கொண்டனையே. ௧௭

கானவர்தான்றினைசெய்தனரோகண்டல்லவோ
கேனமர்வண்டினங்காள்கிள்ளைகாள்செழுங்காளையிட்டுப்
போனவன்றானல்லவோநெடுங்கானிப்புனமல்லவோ
நானன்றானல்லவோசொல்லவேண்டுநடுக்கண்டதே. ௧௮

தாராயனெங்கடிருநின்றைச்சேடன்கயிலத்தின்பால்
நீராமுகிற்குழற்பெண்மேதையைவிட்டுநீபிரிந்தால்

சீராமனில்லையமுதில்லைபஞ்சணைச்செல்வனில்லை
காராபொழில்வளர்காழிப்பிரானில்லைகாப்பவற்கே. க௯

அம்பளவெவ்வளவவ்வளவேவிழியார்ந்தகொவ்வைச்
செம்பளமெவ்வளவவ்வளவேயிதழ்சீர்கொள்வஞ்சிக்
கொம்பளவெவ்வளவேயிடைகூறெனுமிச்
சம்பளவெவ்வளவேதனந்தையனுக்கே உ0

நச்சணிகண்டக்கராரூர்த்தியாகர்நளினவெற்பில்
வச்சணியும்முலைமாதேயிதுவென்னகாரணமோ
அச்சுதனுமற்கிரண்டாமெழுத்திலரையெழுத்தில்
வச்சிரபாணிமனையாள் கைவந்துவாய்த்ததுவே. உக

அச்சுதன்-அரி இரண்டாமெழுத்துரி அதில் அரையெழுத்து பாதிரி வஜ்ஜிரபாணி மனைவி சசி-சந்திரன் (பகை-பாம்பு.)

போமோபொழுதுவருமேமதியம்புரண்டெனங்கம்
வேமேமதன்கரந்தைக்குமேவைத்தபுண்வழியிற்
பூமேவுதென்றல்மிகுமேயென்பெண்புத்திபோய்விடுமே
கோமேதகப்புயலேமழவாபள்ளிகொண்டவனே. உஉ

பாலினுமின்சொற்குயிலினுமென்மொழிப்பாவைநல்லண்
மேலினுங்காமன்கரைந்துக்குமேடைவேங்கடம்விட்
டாலினும்வேலைநடுவினும்பாம்பினுமாத்துரத்துந்
தோலினுங்கண்வளர்வாய்மழவாபள்ளிகொண்டவனே. உங

செய்யினுநல்லவரீனம்பொருர்மயிர்வீழ்தொடக்கஞ்
செய்யினுமானக்கவரியுயர்சிற்றினத்தாயவர்
வையினும்வாழ்வர்தகரைக்காதும்வயிருமொக்கக்
கொய்யினும்பின்செலுமேமழவாபள்ளிக்காண்டவனே. உச

மாலாக்கியென்னைப்பெருவயதாக்கியென்மார்பின்முலை
பாலாக்கியங்கம்பசுகரம்பாக்கிப்பாவையரை
மேலாக்கிச்சுக்குவிளக்கெண்ணெயாக்கியென்மேனியெங்கும்
தோலாக்கவோமகனேபிள்ளையாய்வந்துதோன்றினையே. உரு

சதுராயிருந்ததாதியாமிவன்மதனசற்பனைசெய்
யெதிராளியாயைங்கணைதூவவாறத்திருந்துகனல்
மதிவாரிவீசுவினைவமறந்துமதிமயங்கிப்
பதினாயிரங்கொட்டைப்பாக்காயிருந்தனள்பைங்கொடியே. உசு

பதினாயிரங்கொட்டைப்பாக்கு அம்மணம்.

அன்பட்டதிக்கெங்கும்போற்றுந்தென்கோட்டுக்கதிபதியாய்
பொன்பட்டஞ்சூடும்ரகுநாதபூபாலிப்பூதலத்தே
நின்பட்டமேபட்டநீயேதுரைமற்றிந்நிலத்தோர்
தன்பட்டமென்பட்டந்தோலாவடிபடுந்தப்பட்டமே. ௨௭

சோமன்புதல்வன்செழுங்குன்றைவேலவன்செழுங்கிரியில்
காமன்பகைவன்கரிமுந்துமாகினங்கைவலவா
பூமன்கணையுப்தியுமிவ்வாடையும்பூசலிட
மாமன்றமையன்றகப்பனென்றேவஞ்சிவாடுவளே. ௨௮

(சோமன்-இடபவாகனன்) காமன்-கரிஇந்திரனூர்தியாகியமேகம்.
மாமன்-நகுலன்-அவன்-தமையன்-தருமன்.

சூலேறிச்சங்கமடைவார்குடையுந்துறக்கொதுங்கி
வேலேறுங்கண்ணிபர்கைக்குடநீர்புக்குமீண்டுமுழுச்
சாவேறிமத்தந்தணையீனுந்தன்வயலூரனன்பால்
மாவேறுமான்பரிமாவேழினுணடிமாமயிலே. ௨௯

பாட்டுக்குபாத்திரநல்லோரைப்பாடிப்பதம்பெறலாம்
மோட்டுக்குலாமரைப்பாடிலென்னுமுழைத்துண்டமுண்டோ
வீட்டுக்குச்சோற்றுக்குண்டோவெள்ளைவாய்க்கொருவெற்றிலையோ
ஏட்டுக்குச்சேதங்கண்டாய்வெள்ளைநாவிலிருப்பவனே. ௩௰

கெலிக்குஞ்சிங்கத்துக்கும்யானைக்கும்வெற்றிகெருடனுக்கும்
வலிக்குறுசிங்கியாவுக்கும் நண்டுக்கும்வன்கவிக்கும்
புலிக்குஞ்செம்மானுக்குஞானிக்குமூடர்க்கும்பூனைக்குவீட்
டெலிக்குஞ்சங்காத்தமுண்டோவெள்ளைநாவிலிருப்பவனே. ௩௧

கலங்காதவீரியரானாலும்போகின்றகாலய்வந்தால்
நலங்காமலேவெல்லமாட்டுவரோவிந்தநானிலத்தில்
சலங்கானுங்கோட்டைமதிலேழ்மலைபத்துத்தானிருந்தும்
இலங்காபுரிநிற்கின்றதோவெள்ளைநாவிலிருப்பவனே. ௩௨

எரிக்குமதிச்சடையண்ணாமலையரெழிறகிரியில்
பரிக்கின்றபூவைமதிக்கப்பொருளந்தபாதத்தினால்
பொறிக்கண்பிசாசுகணெக்களைத்தூவிப்பொரிபொரித்துக்
கொரிக்கின்றகாலையிலெப்படிபோயினள்கோமளமே. ௩௩

திரைகடலோடித்திரவியந்தேடென்றுசெப்புமௌவை
உரைபழுதன்றெனச்சேர்ந்தாள்கழுகுன்றத்தோமடமான்
அரைபனிநீர்சந்தனங்கொண்டுபொங்கியாற்றியபின்
இரைகடல்போய்வரவெத்தனைநாளென்றெழுந்தனளே. ௩௪

மேகம்பிறைசிலைவேல்குமிழ்வள்ளைவெண்முத்தந்தொண்டை
பூகம்பசுங்கணைதேனுமிழ்காந்தள்பொற்பாலிலைநூல்
நாகங்கதலியலவன்வரானன்னவினமுண்டு
மாகம்பொழிற்றிருதில்லையிலேயொருவல்லியிலே. ௩௫

இலந்தத்தையேநல்லமுதத்தையேசித்தென்கரத்தில்
வளர்ந்தத்தையாதுமுணர்ந்தில்லையேமயிலாடுமனந்
தளர்ந்தத்தையேயென்றிருவரங்கேசர்க்குசாற்றச்சொன்னால்
அளர்ந்தத்தையேயளர்ந்தாய்பின்னையாதுமளந்திலையே. ௩௬

ஆயத்துறையிற்பிறந்துவந்தந்தணர்பால்குடித்து
மாயக்கண்வேசையிடத்தேவளர்வண்ணுமொருநாள்
ஏயப்புலவரிடத்தெட்டுநாள்செட்டியேயென்றுபின்
போயக்கசாலைபுகுந்தவள்காணந்தப்பொய்மகனே. ௩௭

பூச்சிலைகன்னற்கைச்சேஷாசலேந்திரபொருப்பிடத்தே
காச்சியபாலைகுடிபோவென்றனந்தக்காரிகையும்
பேச்சிலெத்துக்கள்ளிபின்கைராமர்க்குமுன்சொன்னதாய்
வாய்ச்சுதென்றேநடந்தாள்பாளையாவனந்தனிலே. ௩௮

தோப்பிடுவாரில்லைதென்கல்வராமற்கருங்குயில்வாய்க்
காப்படுவாரில்லைகாமன்வராமற்கருங்குயில்வாய்க்
காப்பிடுவாரில்லைதென்னரங்கேசர்க்கபயமென்று
கூப்பிடுவாரில்லையேவண்டுநாளென்குறைசொல்லியே. ௩௯

அணியாகடுக்கைநறுந்தும்பைகங்கையறுகுடனே
பணியார்சடாடவிக்கச்சாலைநாதர்பணிவரையில்
தணியாதமாமதப்பேய்பிடித்தாடுமித்தையலுக்கு
மணியாட்டினால்விடுமோசொல்லுவீரிந்தமாநிலத்தே. ௪0

பாதாதிகேசமுதலாயிவளைப்படைத்தமலர்
வேதாமருங்குல்வெளிவைப்பேனோவிரிபூதலத்துள்
ஆதாரமின்றியிரண்டிரநீரந்தரநிற்குமே
ஏதாகிலுஞ்சற்றங்கில்லாதிராதிசையேந்திழைக்கே. ௪௧

குணமிருந்தாலுங்குலமிருந்தாலுங்கொழுந்தமிழின்
மணமிருந்தாலுமதியிருந்தாலும்வழுத்திடுவங்
கணமிருந்தாலுமோர்காகம்பெறுதுசிங்காரவரைப்
பணமிருந்தாலவர்க்கெல்லாருமஞ்சலிபண்ணுவரே. ௪௨

உரகத்திலேகிடப்பான்சக்கரபாணியுயர்ந்தகும்ப
ரகத்திலேகிடப்பான் குறுமாமுனிகன்னியர்கள்,
விரகத்திலேகிடப்பான்காமராஜன்மிகுந்தவெழு
நரகத்திலேகிடப்பான் கொழுமூர்முத்துநாகப்பனே. ௪௩

சேய்க்கரியுண்டசிவன்மேலன்பற்றவன்சீசீயவன்
வாய்க்கரியாதவிடக்காணதுமில்லைமலர்க்கரியுங்
காய்க்கரியென்பதும்வேண்டான்கய்யாரங்கனக்கவிட்ட
நாய்க்கரியும்புசிப்பான்கொழுமூர்முத்துநாகப்பனே. ௪௪

தருநிகரானகரன்செல்வநாளுந்தழைக்கும்புல்லூர்ப்
பெருவயனாடுதனிலென்னைப்போலார்பிடாரன்வந்தே
ஒருகுடங்கொண்டொருபாம்பாட்டினனிவ்வுலகினுள்ளே
இருகுடங்கொண்டரைப்பாடுவதென்னவேந்திழையே. ௪௫

தேனாட்டுமுல்லைத்தொடைரகுநாதன்செழித்தபுகழ்
பூநாட்டுமன்னர்தொழாமலிராமர்மணிப்பூணணிந்த
வானாட்டரம்பையர்மண்ணாட்டரசர்மணத்தினுக்குக்
கானாட்டுவரின்னைநாட்டுமதேவிணைக்கண்டுகொண்டே. ௪௬

ஞாயிறுபோர்விழத்திங்கள்வந்தெய்திடநன்னியசெவ்
வாயனல்தூவப்புதனம்புபாயநல்வியாழம்வர
மேயிருவெள்ளிக்கலைசோரநானுன்னைமேவுதற்குத்
தாய்சனியாகினளேரகுநாததளசிங்கமே. ௪௭

ஆடியநாகஞ்சரோருகம்பானுநல்லம்புலியும்
சூடியநாதர்நயனமுமாலம்புஞ்சொற்பனுவல்
பாடியபாலனுமாய்வந்தால்வெண்பணிலவயல்
கோடியகோன்சிவந்தான்றிருமார்பிற்குளிதொக்கலே. ௪௮

சிவந்தான்மாலை-மதனையும்-சடலையும்-அடங்கி இவனைப்பிழைப் பித்தமையான் பரமசிவன்கண்ணையும்திருமாலம்பையும்சம்பந்தசுவா மிகளையும் ஒத்தது.

முருகார்முளரியுமுள்ளியுமுண்டகமூரியரம்
பொரிகாரிரும்புங்கனகமும்பொன்போரித்தாரகையும்
குருகாருங்கொண்டையுமீனனல்போலன்குரிசிலுக்கு
வருகாதவேதந்தமங்கையுநானுமடைந்தையரே. ௪௯

நரைகோட்டிளங்கன்றுநனவனநாடேநயந்தளிப்பன்
விரைபுட்டிதார்ப்புயன்வெற்பீழமன்னன்றேவிரும்பிக்

கரையோட்டமீதின்மரக்கலம்போட்டுன்னைக்காணவந்தால்
திரைபோட்டுநீயிருந்தாய்சிங்கபூபசிரோன்மணியே. ருய

வண்டோவிருநுதல்வான்பிறையோகுணமான்குளம்போ
கெண்டேமுலைநித்திலமோநமையிடசேர்துடிகற்
கண்டோமொழிகுறல்காரோமுகங்கமலம்பவளத்
துண்டோயிதழ்கன்னித்தண்டோதுடையிந்தத்தோகையற்கே. ருக

வண்டுமதுவுண்டிசைபாடுஞ்செந்திலின்மாரன்வரக்
கண்டுமிருந்தும்வடிவேலிரண்டுங்கருப்புவில்லும்
குண்டுமருந்தும்பொற்றேருந்தராமற்குறைந்ததால்
தண்டுகொண்டெப்படிவென்றிடலாமடிதார்குழலே. ருஉ

ஆலங்குடியர்சங்கஞ்செரியத்தரஞ்சக்கரப்பொன்
மேலம்பரத்தினர்நாகமெடுத்தவர்மேவிடையார்
சூலக்கண்மெய்யினர்பார்பதிகோன்மதிதோய்கவிஞர்
பாலனைக்கோர்படைக்கூர்மைக்கண்ணுமிந்தபைந்தொடிக்கே. ருங

ஆமாவிகழ்ந்திடலாமாவினிக்கென்பன்றிவினை
போமோவுனைவிட்டுப்போமாமவனக்கிந்தப்புன்மை
யாமாபராமுகமாயாபுயத்தினணிக்கடம்பந்
தாமாகுதனெனுநாமாவயிரசண்முகனே ருச

ஆக-செய்யுள்-அசரு.

---

வெண்பா.

சென்னிமலைவேலவர்க்குச்சேர்ந்தகொம்பிரண்டுகண்டு
கன்னிகுறவள்ளிக்குக் காலில்லைமுன்னமே
ஆட்டுக்குக்கொம்பில்லையானைக்குக்காலில்லை
பாட்டுக்குளாராய்ந்து பார். க

தார்க்கொன்றைதாவென்றேன்றுவேழிலொன்றென்றான்
ஊர்க்கஞ்சிநான்மூன்றி லொன்றென்றேன்-ஆர்க்கும்
பொதுவென்றான்பூவென்றான் போயினான்றோழி
இதுவோவணம்மீச னியல்பு. உ

பறவைநாய்நாகம் பகைவிலங்குபுக்கம்
செறியுமிருணாரஞ்சிதேடன்-குரகிழவன்
என்றுரைத்தவிரைந்து மேர்தண்டத்திற்பண்பாய்
ஒன்றுமெனவுரைப்பா ரால். ங

பரியூர்வார்பாலருந்தல் பண்பாடமூடர்க்குக்
கரியூர்வார்பெண்ணின்பங் காணல்-விரியும்

சிவிகையூர்வார்க்குமைத்த வின்பஞ்சேர்செல்வர்
பசிவியவுண்டல்பயன்.

தக்கசகுனஞ்சபதஞ் சாமுத்திரியஞ்சொன்
மிக்கவசரீரிகளு வென்றைந்து-இக்கவியில்
கூடினுங்கூடிவருங் கூடாதொழிந்தொருகால்
வீடினும்வீடி விடும்.

நக்கனார்சோணகிரி நாதனார்வேள்வியிலே
தக்கனாரைத்தகர்த் தக்கனார்-பொக்கைவாய்
ஆத்தினார்சூரியனை யம்புலியைத்தேய்த்தரியைத்
தாக்கினாரோடோடத் தான். சு

ஓடினானென்ப துணர்ந்துமுனக்குச்சரியா
நாடினார்க்கென்ன நரகமோ-நீடியே
ஆலவிடந்தோன்றியபோ தம்பலவாணனெடிய
மாலவிடஞ்சரியாதே. எ

அசனமிளைப்பகற்று தன்னையேநம்பால்
வசனமிதுதவறு வாய்மை-இசைநாகைச்
சின்னப்பால்வெண்மதியஞ் சேரிமையத்தேபிறந்து
அன்னப்பாலிங்குவந்தாலாம். (அன்னப்பால்-பரமசிவன்) அ

தலையிலிறந்துண்பான் றன்னுடலிற்பாதி
மலையின்மடமகளுக் கீவான்-உலையில்
இருப்புவனமேனியனே யென்றுலேவரவோம்
திருப்புவனத்தீசா திறம். கூ

ஆச்சரியந்தென்னமர மத்தனையுங்குத்துமுலை
காய்ச்சிருக்குந்தென்குடந்தை காவலர்-மாச்சான்
வரக்குப்பையாநீ மருவாநாளெல்லாம்
சரக்குப்பையாமே தனம். ய

கல்லுமுருத்தாது காலின்முட்டையாது
எல்லைமார்த்தண்டன்சூ டேறுது-தொல்லைமரு
மாலையிருளில் வழிநடக்கக்கூசாது
காலிற்செருப்பிருந்தக்கால். கக

தந்தைபோய்த்தாய்போய்த் தமர்போயென்சுற்றமும்போய்
வெந்தைபுரியாகி விட்டேனே-முந்தவே
ஆழாழிநஞ்சுண்ட வாபத்சகாயனென்னும்
பாழாவான்கண்ணேறு பட்டு. கஉ

கைக்குடமுங்கொண்டு கனக்கும்பக்குடமும்
முக்குடமுங்கொண்டான் முறியாதோ-மைக்குழலீர்
வேய்க்காற்றினால்விளங்கும் வீரநந்திமாநகரில்
ஈக்காற்றுக்காற்றா விடை. ௧௩

வையம்புகழு மயிராயிரமெடுத்துக்
கையிலொருமாமலரைக் காணாமல்-வையகத்தில்
செங்கண்மாலீசன் றிருவடிக்கெண்ணாயிரமாத்
தங்கண்மலர்சாற்றினான் றான். ௧௪

பாம்புசேர்தோளிணையாள் பாலையத்துமாமாரி
சாம்பசிவன்றன்னடியைச் சாராரை-வேம்பின்
இலையையுடுத்தியவ ரீனமானம்போக்கித்
தலையில்விளக்கேற்றிவைப்பா டான். ௧௫

அட்டமியிலோதினா லாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னான்கு தீதாகும்கொட்டவுலா
வித்தைக்குநாசமாம் வெய்யபிரதமையில்
பித்தரும்பேசார் பிழை. ௧௬

ஆயிரம்பாக்கன்னமுலை யென்னநடைக்கன்னிப்பதி
னாயிரம்பாக்காணாநின் னாசையினால்-நீயிரங்கி
வந்தாளவேண்டு மலைப்பழனிமேவலவனே
சந்தாளவேறில்லை தான். ௧௭

(ஆயிரப்பாக்கு கவசம்) (பதினாயிரம்பாக்கு அம்மணம்.)

பிறப்பித்தோன்வித்தைதனைப் பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசஞ்செய்தோன்-அரப்பெயரி
பஞ்சத்திலன்னம் பகர்ந்தோன்பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பிதாக்களென்றெண். ௧௮

கானக்கடன்றில்லைக் கார்வண்ணன்றானுமால்
நானக்குழன்மடவீர் நானுமால்-ஆனக்கால்
தன்கையிற்சங்காழி தாமிருக்கப்பேசுவதேன்
என்கையிற்சங்காழி யின்று. ௧௯

கட்டியடிப்போர்க்குங் கண்மீதிலேற்றுவர்க்கும்
எட்டியடிப்போர்க்கும் மீவரே-திட்டமுடன்
பாடுவோர்க்கீயாரே பல்லுதிரத்தாடையினிற்
பாடுவோர்க்கீவார் பொருள். ௨௰

செய்யாள்கணவா சேகராஜசேகரா
ஐயாவடகங்கைக் கரியாதய்யா

குடஞ்சுட்டுப்பின்போனகோபாலாழ்த்து
வடஞ்சுட்டுக்கண்டுயிலாண்மான். ௨௧

உன்றன்மகளை யொறுப்பதற்குக்காரணமேன்
என்றன்மகனியம்புகேள்-குன்றாச்
சிராப்பளியனேறிவருஞ்சேவின்மணியோசை
கிராப்பளியுங்கொள்ளா னிவன். ௨௨

நீருருஞ்செஞ்சடைமேனியுரும்பாம்பணிந்து
நீநெரிலேவந்தனீதியோ-னேரே
படரவஞ்சாடப்பலியிடெனவந்தால்
இடவரஞ்சாளோயிவள். ௨௩

வாலைப்பொருந்துதலால் வல்லரவம்பற்றுதலால்
மாலையடுத்தநெறிவாணுறலால்-சோலைதிகழ்
உம்பர்பூசித்தருளுமொற்றியூரன்வரையில்
அம்புலியினன்கருடனும். ௨௪

அம்மையிலேயேறியடியேனிடர்தீர
இம்மையிலேவந்தென்னையீடேற்றி-மும்மையிலே
எந்தப்பாவஞ்செய்தேனந்தப்பாவந்தீரக்
கந்தப்பாவந்திப்போகா. ௨௫

எழுதரிதுமுன்னமெழுகியபின்னத்தைப்
பழுதறவாசிப்பரிதுபண்பா-முழுதுமதைக்
கற்பரிதுகற்பயனைக்காண்பரிதுகண்டக்கால்
நிற்பரிதுதானங்கிலை. ௨௬

ஏரேறுநீரேறுமெண்ணிலுயிர்க்குயிராம்
பாரேறுங்காலாற்படியளக்கும்-வீறேறும்
அன்னங்காணீசனரியயனுந்தாமன்று
துன்னுபுகழ்மாரியப்பாசொல். ௨௭

கோடுதிக்குங்கும்பமுலைக்கோதையரைக்கூடவென்றால்
மாடுதின்னியென்னைமறந்தானே-ஈடுதின்னி
தன்பொழுதுபோச்சுதே தன்னந்தனித்திருந்த
என்பொழுதும்போச்சுதேயென். ௨௮

மாடுதின்னி- வைக்கோலாற்செய்தமருள்.

நெஞ்சடைந்தவேட்கையெல்லாநீங்கியிருவிழியும்
பஞ்சடைந்துள்ளாவிட்டுமுன்னே-செஞ்சடையில்

வெள்ளாமேருவெங்நாளும்வேள்விப்புகையாரு
நள்ளாறுவென்னுனவில். ௨௯

மூவாகவிமுன்சோழனேந்தூறு
நாவலர்மணிக்காதல்நாலேந்தெட்டோவறுசிர்
நூதனசிவாலயங்கணூற்கற்றுங்கூட
ஓதவருமாயிரத்தெட்டோர். ௩௰

நாலெழுத்துப்பூநடுவேநரம்பிருக்கும்
காலுந்தலையுங்கடைச்சாதி-மேலாக
ஒட்டிமுதலெழுத்துமோதுமூன்றும்மெழுத்தும்
விட்டால்பரமனுக்குவீடு. (புகையிலே-புலே-கைலே) ௩௧

முளிதட்டுமுட்டுக்குமுன்னீரளக்கும்
கனியுதிர்க்குங்கவ்வுநாய்காக்கும்- தனிவழிக்குப்
பத்திரமதாக்கும்பயந்தீர்க்கும்பாம்படிக்கும்
கைத்தலத்திற்றண்டிருந்தக்கால். ௩௨

பகலோன்றெறுங்கிரணம்பாய்பறவையெச்சம்
மிகமேலுறுதகற்றும்விண்ணின்-முகிலதனுல்
பெய்யுமழைத்தடுக்கும்பேரழகுமாமொருவர்
கையிற்குடையிருந்தக்கால். ௩௩

வந்தவனேக்கையாதுவாய்முத்தந்தருள்வாய்
தொந்தவளேக்கையாதுவற்கையா-சந்துவளே
கோடையிடத்தானேகுயிலோசைக்கஞ்சியுளத்
தாரையிடத்தானேயறிந்து ௩௪

அறிந்துதவிப்பாரை யருள்கோசைபரன்மேல்
செறிந்துதவிப்பாரைத்திருத்தும்- திறந்தழைந்த
வைகுந்தனூர்வாய்மடமனமேகொவ்வைநிகர்
வைகுந்தனூர்வாய்மடுத்து. ௩௫

மதக்குஞ்சரமழைக்கும் வான்கோசைமாலே
வடிக்குஞ்சரமழைக்குமேலாய்-முடிக்கும்
அங்கதனேயுஞ்சங்கமடுத்தேனேயாள்வாய்
அநங்கனேயுஞ்சங்கமலர். ௩௬

அலரோதிமத்தானறைகோசைமாலே
அலரோதிமத்தாலடிக்கும்-அலரோதி.

நந்தனகத்தாளுறவே நண்ணிநின்றாயானடைந்தேன்
உந்தனகத்தாளுறவே யோர்ந்து. ௩௭

ஓர்ந்தண்டரையாளு முத்தமநற்கோசையனே
ஈண்டந்தண்டரையாளு மிந்திரையும்-யோர்ந்திலகு
தூயத்திருக்கருப்பா தோற்றியடியேனுடைய
மாயத்திருக்கருப்பாம் வந்து. ௩௮

ஆகும்போதாகு மனைத்துமதிலொழிந்து
போகும்போதெல்லாமும் போகுமே-வேக
நவாசாரம்பட்டார்போ னலிந்துமடநெஞ்சே
அவசரப்பட்டாலாகுமோ. ௩௯

சல்லடைக்கண்ணாகித் தளர்ந்தாளருள்புரிவாய்
மல்லடையுங்கோகநகர் வைகுந்தா-நல்லடையும்
பாந்தளிரைத்தேர்காலன் பாணம்வருந்துதலால்
மாந்தளிரைத்தேர்காலாண் மார்பு. ௪௰

காரங்கமேனிக் கருணைக்கடலான்
சீரங்கநாதரேசெல்வரே-நீரங்கே
அள்ளியுண்டவெண்ணைக்கா யம்மையடிப்பாளென்று
பள்ளிகொண்டாற்போமோ பயம். ௪௧

படைப்பானுங்காப்பானும் பார்க்கிலருணேசன்
படைப்பானயனென்னல் பாவம்-படைக்கிலயன்
ஐந்துதலையிலொன்றை யானறுத்தபோதிலவன்
தன்றலையைப்பண்ணறியான் றான். ௪௨

நாறுங்கடம்பு நடையுடையும்பாவணையும்
வீறுமுனக்கேன்பழனி வேலவா-ஆறுதனில்
வெட்டுண்டானுங்களையன் வெண்ணெய்தனையேதிருடிக்
கட்டுண்டானுங்களம்மான் காண். ௪௩

தாதுமதுரை துவரைகடைமுன்
ஓதுகின்றமூவெழுத்து மொக்குமே-நீதி
சேகராசசேகரன்வாழ் சிங்கையெனுஞ்செல்வ
நகராயிழையார்நகை. து து-து-முத்து.) ௪௪

பூங்கோதைமாதர் புனைகின்றமுத்தாரம்
வாங்கோங்குடிக்கு வடுவென்றே-நாங்கள்

முலைக்கோடணிவதெல்லா முக்கண்ணன்சென்னிற்
தலைக்கோடுபட்டதழும்பு. சரு

இவ்வரையுமாக் கிரங்குவோர்தாமில்லை
ஐவரையுங்காத்தவ னாகலினால்-மைவரைசொல்
வானிரங்குமுத்துகிருஷ்ண மன்னனமதுதொண்டை
வானிரங்குவானென்றாண் மான். சசு

வாரிதாளஞ்சொரித மாலையினூடுருவிச்
சோனமாநாடதுவுஞ்சேர்ந்ததே-மூரிபதன்
அம்பொடலைகின்ற வாயிழைக்குநீகுதிரைக்
கொம்போகுலோத்துங்கா கூறு. சஎ

தேமிருக்குமாந்தளிரைச் செந்திலனமென்றும்
பூமுருக்கையத்திப் பொறியென்று-நாமிருக்கும்
வாய்ப்படுமேயென்றெண்ணி வாடிமனந்தளர்ந்து
கூப்பிடுமேயந்தக் குயில். சஅ

காமனார்வீட்டினிலே கள்ளன்புகுந்தானோ
சோமனாரைப்பாம்பு சூழ்ந்ததோ-மாமரந்தான்
தீப்பட்டுவேகுதே தியாகேசர்நன்னாட்டில்
கூப்பிட்டதேயந்தக் குயில். சகு

செந்தமிழோருய்யவன்பு செய்யவந்தசோழவள்ளல்
சந்ததமுஞ்சேரநா டாழ்குயிலே-வந்தனைசெய்
ஐங்கரனைவேலவனை யன்றழற்கண்வந்தவனைச்
சங்கரனைவாசுகியைத்தான். ருய

கருப்புவில்லைமுறிக்க-ஐங்கரனையும், கடலையடக்க வேலவனையும் சந்திரனைத்தேய்க்கவீரபத்திரனையும்,மன்மதனையெரிக்கசங்கரனையும் தென்றலையுண்ண வாசுகியையும் வந்தனைசெய்

முக்கண்ணன்வாழ்வெற்பை முறித்துவரியிட்டக்கால்
முக்கணனையப்பில்விழ மோதாதோ-முக்கணன்றன்
வேணிக்காகாமலர்வைத் தேகினன்மெல்லியலே
சாணிற்குலைந்தான் றலை.

முக்கணன்வாழ்வெற்பு - மேகால்-காற்று, முக்கணன் தேங்காய்முழுக்கணன் - வேணிக்கர்மலர் தாழம்பூ.சாணிற்குறைந்தான் ஒட்டைச்செடி.

சேலநகரேமதுரைசேர்ச்செழியனேசெழியென்
சாலவதிலுள்ளோரேசங்கத்தார்-சீலமிகும்
கம்பாசுதேவன்கடம்பவனவாசர்
தம்பாரிமீனாட்சித் தாய். ௫௨

மங்கையர்கள்யோனிமிசைவைத்திருக்குமாசைதனைப்
பங்குசெய்மிநூற்றிலொரு பங்கெடுத்துக்-கங்கைமதி
வேணியரன்பாதாரவிந்தத்தில்வைத்தக்கால்
காணலாங்காணுக்கெதி. ௫௩

துர்ச்சனரும்பொன்னுந்துடியுந்துரகதமும்
அச்சமறமுன்னிற்குமாயிழையும்-நச்சரவும்
கண்டித்தவெள்ளுங்கரும்புமிளநீரும்
தண்டித்தார்க்கல்லோ சயம். ௫௪

புட்டவல்பட்டாணிபொரிதேங்குழலப்பம்
பட்டவிழுந்தோசைவடையுடனே-சட்டமுடன்
ஓயாமற்சோறுகறியுண்டையாயபடைக்கும்
வாயாநமசிவாயா. ௫௫

குச்சிலியமாதர் குல்முங்குவலபத்தோர்
மெச்சுதமிழ்மாதர் வியன்முலையும்-சிச்சீ
தெலுங்கமடமாதர்சிங்காரக்கொங்கைக்
கலிங்கமெனவேசொற் கவி. ௫௬

இங்கிருக்கவென்றுலெமனைட்டானிவ்விடம்விட்
டங்கிருக்கவென்றுலயனைட்டான்-எங்ருவைத்துப்
பேணுவேனிவ்வுடலைப்பித்தாபிறைசூடும்
தாணுவேசொக்க நாதா. ௫௭

வெள்ளிதலைபொன்னின்மேவமகிழ்வீடாகி
பிள்ளைகளோபுத்திசொல்லும்பிள்ளைகளா-தெள்ளுமுகம்
வாடாவடிவுடையான் மனையாளானக்கால்
ஆடாரோவெற்றியப்பனார். ௫௮

அடியார்க்கெளியன்சிற்றம்பலவன்கொற்றம்
குடியார்க்கெழுதியகைச்சீட்டுப்-படியின்மிசைப்
பெற்றான்சாம்பானுக்குப்பேதமறத்தீட்சைசெய்து
முத்திக்கொடுக்கமுறை. ௫௯

இட்டசோறுகொழியலுப்பிடாதபுற்கையாயினும்
எங்குமன்பாதகனுக்கவின்பமாயிருக்குமே
பட்டபாடிபசுவினெய்பருப்புமுக்கனிக்குழாம்
பாளிதங்கடாளிதங்கள்பண்ணியாரவகையுடன்
அட்டபாறகுழம்புகன்னலமுதமோடுமுதவினும்
அன்பிலேடைளித்திடாதவசனமென்னவசனமே. ச

துங்கவடகயிலாயமுதலாமைந்து
துளுவொன்றுதொண்டைவளநாட்டெண்ணைந்து
தங்குநடுநாட்டிருபத்திரண்டுபொன்னித்
தலநூற்றுத்தொண்ணூறுமலேவாட்டொன்று
கொங்கேழுசிங்களத்திலிரண்டுவையைக்
குளிர்தமிழ்நாட்டீரேழுடமலாஞ்சூலச்
செங்கையார்தலமிருநூற்றெழுபானான்கில்
தென்பாலங்கயிலாயந்திருக்குற்றாலம். ரு

ஓதுமைந்திலொன்றிலைந்திலொன்றுயன்னவன்பிதா
ஊர்திதொட்டவேனின்மீதிலுற்றசாபநிருபனூர்
தாதுகொண்டகாளிமாலைசூடிதப்பிதம்பிசேய்
தன்குடைப்பிணவன்மற்றலைக்கிரீடதுவசனூர்
காதணன்பன்றந்தைபாகன்பின்னவன்பகைச்சுமைக்
கலையெடுத்தகையரையர்க்கதிபெறத்தவஞ்செய்தோன்
நீதிரூதைகொண்டுவந்தசிலைமதிந்தபதியினன்
சிரமரிந்தவன்கொள்பாரிசேயலாறுறைந்தே. சு

ஓதும் ஐந்து பஞ்சபூதம் அதிலொன்று நிலம்அதில் ஐந்து ஐந்துதிணை அதில் ஒன்று குறிஞ்சி அதற்குமன்னன்முருகன் அதன்மீதிலுற்றசாபம் தனுசு அதையுடையநிருபன்இராவன்அவன்தம்பி பனமாலைசூடிய பலராமன் அவன்தம்பிகிருஷ்ணன் அவன்சேய் மன்மதன் அவன்குடைதிங்கள் அதற்குப்பின் ஐவன் சழ் அவன் கிரீடம் அதைக்கொடியாக வுடையவன் துரியோதனன் அவன் நண்பன் கர்ன்னன் அவன்தந்தை சூரியன்அவன்பகவான் அருணன் அவன்பின்னவன் கருடன் அவன்பகை ஆதிசேடன் அவன் சுமைபூமி அவன்கலைகடல் அதை யெடுத்தகையர் அகஸ்தியர் அவரையர் பிரமதேவர் அவர் கதிபெறத் தவஞ்செய்தோன் அனுமான் அவன்றூதத வாயுஅவன்கொண்டுவந்தசிலை மேருசிகரங்கள் அவைகளைப் பதியாக வுடையவன் இராவணன் அவன்சிரமறிந்தவன் திருமால்அவன்கொள்பாரி

இலக்குமி அவள்கோயில் தாமரைப்பூ ஆலுறைந்து ஆலமரத்தின் கீழிருந்தது (இஃது பொருண்மேற்பிரிந்ததலைவன் ஆலின்கீழ்வைத்த அலர்க்குறியைக்கண்டு பாங்கி தலைவிக்குணர்த்தியது.)

தொடுத்த முத்தமிழுக்ககத்தியனெனவேதோன்றிய புவனச்சேரையர்கோன், சொலக்கணப்புறவ னிலக்கணக்கவியைத் துதித்தகங்களித்திடுங்களியேம், வடத்திணிற்புகுந்துமதுத்திறந்தவனார் வடித்த, கட்குடித்துநின்றவனார், வறுத்தகட்குடித்துக் குதட்டுகின்றவனார் மயக்கியுட்டியக்கமுற்றவனார், கடுக்கினைமிடற்றி லொடுக்கியிட்டவனோ கையிலேசிலம்பையிட்டவனோ, கனத்தநூற்கொடியைநாவிட்டவனோ கண்ணிலேகுழையையிட்டவனோ, முடுக்கியவயிற்றிலாழியிட்டவனோ முகத்திருபதக்கமிட்டவனோ,முளைத்ததோளொருபான்சதங்கையிட்டவனோமுழுப்பட்டகலாதிலையே. ௭

கடுவிஷம் சிலம்பு மலைநூறகொடி வாணிகண்குழை கட்செழி ஆழி கடல்இருபதக்கம் இருபதுகண் ஒருபான்சதங்கை ஆயிரங்கை

தேமதுரகவிவிரகன்றெவ்வைவருபெருமான்
செல்வன்சங்கரர்கானைத்தினம்வணங்குகளியேம்
யாமதுவுண்டாலுமதுமக்கடிமைவாபோல்
எமைமயக்குமோமயக்காதினியியம்பக்கேளீர்
வீமன்மகயத்தியனைகுபேரன்மகன்புதனை
வீறானைமுகனொருவன்விரும்பும்தன்குகனை
காமன்மகன்சயந்தன்வேதன்மகன்சிவனை
காலன்பாற்பிறந்தமகன்கடந்துளானே. ௮

வீமன் பிரமன் குபேரன் சந்திரன் விரானைமுகன் வீறன் ஐம்முகன் காமன் இந்திரன் வே மூங்கில் கால் காற்று.

சந்தப்பாவிருத்தப்பாகலிப்பாவெண்பா
தாழிசப்பாகொச்சகப்பாத்தனிப்பாவுக்கும்
விந்தையப்பாவாகியகிரந்தப்பாவும்
வெல்லப்பாவதுபோலவிகடப்பாவும்
எந்தப்பாவுரைத்திடினுமொருபேறில்லா
ஏதப்பாவித்தகன்திணைப்பாதத்தைக்
கந்தப்பாமுருகப்பாபோரிவாழ்வே
கையப்பாமெய்யப்பாகாட்டப்பாவே. ௯

ஆதிசிவன்செத்தானோவுமைசெத்தாளோ
 ஐங்கரனுஞ்செத்தானோவரிசெத்தானோ
வேதியனுஞ்செத்தானோநீசெத்தாயோ
 வெட்டவெளியானந்தம்பெரும்பாழாச்சோ
நாதியற்றுப்போனாயோவழிகாட்டாயோ
 நாயேனுக்கிரங்கிவந்து நலந்தாராயோ
பாதிவழிதனிலவதிப்படுத்துவாயோ
 பாதகா திருச்செந்தூர்பதியுள்ளானே. ௰

நீருஞ்சுமந்தேன் விரகெடுத்தேனித்தஞ்சுமந்தேன்சாணங்கம்
 நிகழவடிபடடுதைப்பட்டேநின்றேன்வையர்க்காளாக
ஆரும்விரும்பாத்துகிலுடுத்தேனழகுமேனிகரிக்கோலம்
 ஆனேனதனாலல்லோவுன்னடியாளுனக்குச்சரியானேன்
காரும்விரும்புங்கடுவணிந்தவனேகருணைப்பெருங்கடலே
 கமலத்தயன்மால்காணாதவாலகாலாவென்றுயரந்
தீரும்படிதண்ணருள்புரிவாய்சிவனேயமரர்க்கொருவிருந்தே
 தேவேதெய்வமறைப்பொருளேதிகழுங்கடகர்ச்சேவகனே. கக

காளமேகப்புலவர்பாடியது.

ஏரிகட்டியகொட்டிலரங்கமே யீரிரண்டுமுகன்வாயிலாவ, மாறு கன்னப்பன்வாய்மடப்பள்ளியே வாய்ந்தவோடைதிருவாலவதனமே, வீறுசோதித்தொண்டனில்லாளுந்தி வேட்டநற்கறிகாய்க்கின்ற தோட்டமே, நாறுபூம்பொழில் சூழ்தில்லையம்பல நாரிபாகற்கு நாடகசாலையே.

நடுவெழுத் தலங்காரம்.

திருமால்வாகனநாவாயிராசியொன்று
 சினைதெவிட்டார்மாதுலன்கோகிலமிவ்வேழின்
உருவாமேழெழுத்தினடுவெனக்குச்செய்தான்
 உகந்துபதினான்கினையுந்தானேகொண்டான்
ஒருபாசத்திருத்தினன்கையிலேற்றான்
 ஒருமதன்றனக்களித்தானுண்டான் பூண்டான்
பரியாயொண்கரத்தமைத்தானுந்தானிந்தப்
 பைம்பொழிற்றில்லையுளாடும்பரமன்றானே. கஉ

திருமால் வாகனம் நாகாரி நாவாய் கலசம் இராசி கன்னிகணைக வடு தெட்டார் ஆரார் மர்துலன் மாமன் கோகிலம் பல்லி இவற்றி

ண்-நடுவெழுத்துகள்காலன்வராமல் இவற்றின்ஏனையவெழுத்துகளின் பயன்நாரி-உமை, (கம்-கபாலம்) (கனி-பழம்) கடு-விஷம்) (ஆர்ஆத்தி மான்-எலிமிச்சை)

கூற்றுவனைவின்மதனையரக்கர்கோவைக்
கூனிலவைக்குஞ்சரத்தையிஞ்சிமூன்றை
ஏற்றுலகின்புறவுருவமாளத்தோள்க
ளிறவெறிப்பலிமையப்பெண்வெருவலேவக்.
காற்றொருமாலெனயளத்தால்வறலாற்கற்றைக்
கதிர்முடியாற்கரதலத்தாற்கணையாற்பின்னும்
ஊற்றழியவுதைத்தெரிந்துநெரித்துச்சூடி
உரிதெரித்தானவனென்னையுடையகோவே.
பொன்னைவரைக்கணைநூற்றுவரைக்காவைப்
பொருசிலையைக்கணைக்கடலைப்பொன்னைநின்ற
நன்மதற்காய்ச்சுரர்க்காயைவருக்காய்காதல்
நட்பினுக்காய் சசானகிக்காய்நடவைக்காக.
மன்னுசுருல்வடிக்கணையால்வளையாற்புள்ளால்
வயங்குதோள்வலியால்வானரங்களாலும்
உன்னுடற்சீறிச்சிறங்கொண்டமரில்வீழ்த்தி
முதலோடுங்கொண்டிருந்தடைத்தமேகூரானே.

இந்துமுடிக்குஞ்சடையாளரிருக்குந்தொண்டைவளநாட்டிற்
சிந்துபடிக்ககவிபடிக்கத்தெரியாமடவாயுன்றனுக்குக்
கொந்துபொடியென்பூமுடியென்கிழவாய்நரைத்துமுகத்திரைந்தும்
இந்தமுறுக்கேன்வீறுப்பேனெடுப்பேனின்னைகெடுப்பேனே.
ஏழானையடித்தபுலிதனையடித்தான்வீரசேனனென்றேகாட்டில்
வாழாமற்சிறுபுலிகளீப்புலியொடெலிப்புலியாய்வடிவங்கொண்டு
பாழாக்கிகாடெல்லாம்பரதவிக்கவடுகரடுப்படியில்வந்து
கூழாகிவயிற்றினிற்போம்பொழுதுகுணம்போகாமற்குமுறுந்தானே.
காவென்றுஞ்சிந்தாமணியென்றுசொல்லியென்கையிலள்ளித்
தகாவென்றுகேட்கத்தரித்திரம்பின்னின்றுதள்ளியென்னைப்
போவென்றுரைக்கவுநாணலங்கேயென்னபோவதிங்கு
வாவென்றிழுக்கவும்வகதேன்விராலிமலைக்கந்தனே.

## கொச்சகம்.

காவென்றுபேர்படைத்ததாய்க்கனத்துரும்போது
நீரென்றுபேர்படைத்தாநெடுந்தரையில்வந்ததற்பின்

வாரென்றுமென்முலையாராச்சியர்கைவந்ததற்பின்
மோரென்றுபேர்படைத்தாய்முப்பேரும்பெற்றாயே.

முன்னாளநீரளக்குமுடிமன்னர்காத்திருக்கு முனிகளென்னை, மன்னா மலோட்டுவிக்கு மாதர்சொற்கேட்பிக்குமடக்குமாட்டை, பன்னாகத் தலைதரிக்கும் பாதகர்சொற்கேட்டுவிக்கும் படிப்புண்டாக்கும், என்னாலுங்கிழலருக்கோரிடும்பாக்குநடைகொடுக்குமென்கைகோலோ.

கருந்தலைசெந்தலைதங்கான்றிருக்காய்கடையிற்சுற்றி
வருந்திக்குடவைக்குந்தாட்டிக்குங்கொத்திடுமாய்வதல்லால்
கரந்தைகளாண்டிலொருக்கால்வருவதுகண்டிருந்தும்
அரும்புக்குங்கொத்துக்கும்வந்தார்பிழைப்பதரிதென்பரே.

சங்கையிலர்மதன்விடுத்தபகழிதைத்த புண்வருத்தந்தன்னைநோக்கிக், கொங்கையையொத்திடங்கொடுத்துக்குங்குமச்சாந்தைப்பற்றுங்குளிரப்பூசிச், செங்கனிவாயிதழ்மருந்துமுள்ளுக்கே கொடுத்தெனக்குச்செய்தநன்றி, மங்கையரேயிந்திரவி தெற்குவடக்குதித்திடினுமறந்திடேனே.

ஏமிராவோரியென்பாளெந்துண்டிவொஸ்தியென்பாள்
காமிராச்சொன்னதெல்லாந்தலைகடைதெரிந்ததில்லை
போமிராச்சூழுச்சோலைபொருங்கொண்டைதிமமிகையில்
நாமிராப்பட்டபாடுநமன்கையிற்பாடுதானே.

சுந்தரகவிராயர்-விருத்தம்.

ஒருகோட்டுக்கலைமுனியுமொளிதிகழும்புலியாடையுடுத்தகோவும்
மருமலர்வாழ்த்திசைமுகனும்வானவர்கணுபகனுமயிடன்றானும்
கரியநிறத்திருமாலுமவாலியும்பராசனுமேகாம்நம்பால்
பெருமையிழந்தனரென்றார் சிறுமனிதர்க்கெப்படியோபேசுங்காலே

வாசவனும்பிரர்நகைக்கவுடலானொருவனராவடிவமானான்
தேசுபுகழ்கலைமதியுமுடலிழந்தான்மலர்வேதன்சிரமொன்றற்றான்
ஈசனுறல்விழிதிரந்தானிராவணசுந்தோபசுந்தரிறந்தார்மண்மேல்
காசினிப்புன்மானிடரோமோகசாகரமதனைக்கடக்கவல்லார்.

உணங்கியொருகாண்முடமாகியொருகண்ணின்றிச்செவியிழந்து
வணங்குநெடுவாலறுப்புண்டுமென்றமுதுகில்வயிறொட்டி
அணங்குநலியமெலிவெய்தியகல்வாயோடுகழுத்தேந்தி
சுணங்கன்முடுவல்பின்சென்றால்யாரைக்காமன்றுயர்செய்யான்.

கட்டிறலைதிருப்பிவைத்தாற் றலைவலிபோமோவந்தக் கதைபோலாட்டுக், குட்டியிதென்னடிசகியே செட்டிவயித்தியன் பள்ளிக்கொ

ண்டான்பாம்பின், பெட்டியினுங்கையிடுவனுண்டையும்பாய்ச்சிடுவனன்றுய்ப்பிலவாய்காயங், கட்டுவனிஃதல்லாதாறுமேதமதன் விடும்பகழிப்புண்டானே.

மரமதுமரத்திலேறிமரமதைத்தோளில்வைத்து
மரமதுமரத்தைக்கண்டுமரத்தினான்மரத்தைக்குத்தி
மரமதுவழியேசென்றுவன்மனைக்கேகும்போது
மரமதுகண்டமாதர்மரமுடன்மரமெடுத்தார். ௨௮

இராமசாமிக்கவிராயர்பாடியது.

மாலைதனைப் புனைந்தாலு மலரணையிற்படுத்தாலுமருவாபன்னீர், ஏலமுறத்தெளித்தாலு மெவ்வளவேனுங் குளிரவில்லையென்செய்வேன் கோலமுறுமணலியிலே கிளைகளோடுசுகம்படைத்துக் குலாவுமெங்கள், சோலைதனைச்சேராமற் காமவிடாய்தணியாதேதோகைமாரே.

பாலைநிகர்மொழிமாதே யென்னிடத்தில்பூரணமாய்பட்சம்வைத்துக், காளமுகிலனையகரன் மணலியில்வாழ் சோலையெனுங்கன்னன்பாற்போய், மாலைகேண்மறுத்தாலென்மனத்தைக்கேண் மறுக்கின்மதன் வாராவண்ணம், ஓலைகேண்மறுத்தக்காற் கிள்ளாக்குக்கேள்வேறென்றோதிடாயே.

அரக்கனலையிலங்கையை வென்றோன் மருகன்றணிகேச னன்பர்பானஞ், சிரக்கனலை யாமலுனைக் காப்பனென்றனையடிதே மொழியேமாலை, யரக்கனலை மதிவீசப் படுமோவவ் வேளைதனில்வாதுத்தேநீ, துரக்கனலைமதப்பயலேன் முனங்குளிக்கத்தகுமோசொற்றோகைநீயே.

என்னையவரறமறந்தும்யானவரைமிகநினைந்திங்கிருந்துவாட
முன்னைவிதிப்படிதானோமுற்பிறப்பிற்செய்தவினைமுடிந்தவாறோ
கன்னனெங்கள்பிரமன்வரதுங்கராமனியற்காசிநாட்டில்
அன்னவயற்குருகினங்காடனித்திருக்கமுடியாதென்றறைகுவீரே.

தன்மனையிரதமாகித் தன்மகன்வலவனாக்கித்
தன்மகன்பேரனோடு தனக்குமைத்துனன்காலாக்கித்
தன்னனைநாரியாக்கித் தானுமேரம்புமானான்
தன்மனமிடங்கொண்டுய்த்தசங்கரன்றனக்குமாயன்.

முன்னொருவூரின்பேராமுதலெழுத்தில்லாவிட்டால்
நன்னகர்மன்னர்பேராநடுவெழுத்தில்லாவிட்டால்
கன்னமாமிருகத்தின்பேர் கடையெழுத்தில்லாவிட்டால்
உன்னியதேனின்பேரா மூரின்பேர்விளம்புவீரே. ௩௨

மதுரை-துரை-மரை-மது.

மதுரைமுத்துக்குமர தொண்டன்றமிழ்போலக்கவிமதுரம்பொழியப்பாடும், சதுரருண்டோவென விரிஞ்சன்வினவிஞல்சேடனுன்றுனென்றுனோர்,பரமெனினுந்தோன்றுமன்மால்கொண்டுகடல்வீழ்ந்தான்பதுமன்சிறி, மதமுறு நாவைப்பிளந்து காதறுத்துமண்சுமக்கவைத்திட்டானே. ௩௩

மதுகரத்தையிகழ்ந்துகுயில்வடிவேலர்தமையழைத்துவாராவென்றே, இதமுறைத்துச்சென்றதென்ன வின்னமுங்காணே னதனுக்கிரக்கமேது, சதமிதெனவளர்த்தெடுத்த நாய்க்குதவாதார்க்குதவுதத்தையேநீ, முதுமரைசேர்க் குமரர்தமை யழைத்துவாமதப்பயலேமுடிக்கத்தானே. ௩௪

குருமூர்த்தமாய்வந்து வினையொழித்துமுத்திதனைக் கொடுக்கத்தியாகர், ஒருமூர்த்தியல்லாமன் மற்றுமொரு மூர்த்திகளு முண்டோநெஞ்சே, திரிமூர்த்தியெனபார்கள் வைரவர்வாகனமேறிச் சேனிற்சும்மாய், திரிமூர்த்தியெல்லாமொருமூர்த்தியுங்கதியிற்சேர்த்திடாரே.

இருக்கோலமிடுங்கலையுந் தெய்வசிகாமணிமுகில்வந் திணங்காநாளில், உருக்கோலவடிவமாஞன் மைந்தனுமைத்துனனுநிதமோய்விலாமல், மருக்கோலஞ்செய்வதினும் வடவனலைச்சொரிவதினு மயக்கமுற்றுத், திருக்கோலங்கொண்டமகடயங்குகின்றுன் மயங்குகின்றுன்தினமுந்தானே. ௩௬

முந்தனத்தைத்தூதுவிட்டேன்வரவுமில்லைமதராஜன்முனிந்தேவில்லால், எந்தனக்கிலக்காக மலர்வாளி யென்கிறு னினியென்செய்வேன், கந்தனத்தையகலாக பூம்பாவை வேலப்பன்கையாற்பூசுஞ், சந்தனத்தைசவ்வாதை நினைந்துமனதுருகுதடிதையலாளே. ௩௭

நெறிவிளக்கல்.

குருத்துக்கதலிபசுந்தேனையள்ளிக்குரங்குரட்டிக்
கருத்திக்களிக்குந்தருங்குடிவாழ்தருமண்ணல்வெற்பில்
பருத்திப்பொதிககிட்ட தீப்போலக்காமம்படைத்தவுந்த
ஒருத்திக்கொருவன்பகையோநடுச்சொல்லுமூரவரே. ௩௮

தொட்டிக்கலைசுப்பிரமணியதம்பிரான்வெண்பா.

வல்லவகுலத்திருக்குமன் னவாவாசமலி
நல்லவகுலத்திருக்குநாதனே-மெல்ல
வடிவாளைகொண்டமணவாளாகணிச்சி
வடிவாளைக்கொண்டென்னிடர்மாற்று. ௩௯

(குலத்திருக்குநெற்றிக்கண்)

கட்டளைக்கலித்துறை.

பொன்முகநோக்கிநின்றன் முகநோக்குமுன்போயினளென்
றுன்னிடவீழ்ந்தனள் கைதொடவுந்தனளுன்னுடனே
பின்னும்புணர்ந்திடமுன்னறிவற்றிடபெற்றபின்பு
பொன்னலமென்றனளேகரத்தாள்மணியிரங்கொடியே. ௪௰

ஒட்டக்கூத்தர்

தற்கோலிப்பாசம்பூதற்கேதட்டாமற்சாகைக்கேகிர்ப்பீர்
முற்கோலிக்கோலிப்பூசித்தேமுட்டாமற்சேவித்தேநிற்பீர்
வற்றேநெட்டையைப்பாரச்சேனமைப்பூதத்தேறித்தாவிப்போய்
நெற்றானுற்றலேப்பாகிற்சேர்நெய்த்தானத்தானைத்யானித்தே

புகழேந்தி.

விக்காவுக்காவித்தாவிப்போய்விட்டானட்டார்கட்நேர்புக்கார்
இக்காயத்தாசைப்பாடுற்றேயிற்றேடிப்போவைப்பீர்நிற்பீர்
அக்காடப்பேய்தொக்காடச்சூழப்பாடத்தீவெப்பாடப்பூண்
நெக்காடக்கானத்தாடப்போநெய்த்தானத்தானைத்யானித்தே

ஆக-செய்யுள்-௬௱௨.

---

இப்பதிப்பில் நூதனமாகச்சேர்த்த

பலவித்துவான்கள் பாடியபாடல்

கலித்துறை.

நித்தாவறிஞர்பிணியாளர்கல்விநெறியறியார்
பூத்தாரமஞ்சிவிருந்தொளிப்பார்பேரருட்கேசிவிகை
யூர்ந்தேசுமைசுமந்துண்போரிவர்களுயிரிருந்து
வீந்தாரிவரைவர்காணசெழியாதிருவேங்கடமே. ௧

கொடுத்தாவிகாக்கின்றகாவேரிவெற்றிக்குறைந்திடினு
மடுத்தேயண்டிநீருண்ணுவாராதுபோலிந்தயானிலத்தி
லடுத்தாரைரட்சிக்குந்தாயென்பார்க்கடையாளம்பிச்சை
யெடுத்தாகிலுங்கொடுப்பாய்வெள்ளைநாவலிருப்பவனே ௨

வெண்பா.

மாமிக்கோர்மாமியுண்டுவாணருக்கோர்வாணருண்டு
சாமிக்கிமேற்றகப்பன்சாமியுண்டு-பூமிக்குள்
எல்லாந்தெரிந்தவருமில்லைதெரியாதவரு
மல்லாமற்கண்டவர்களார். ௩

ஆங்காலமெய்வருத்தவேண்டாமதுவன்றித்
தேங்காய்க்கிளநீர்போற்சேருமே-போங்காலே

காட்டானைதின்றகனியதுபோலாகுமே
தேட்டாளன்றேடுந்தனம். ௪

சொல்லிச்செய்யார்பெரியோர்சொல்லிச்செய்வார்சிறியோர்
சொல்லியுஞ்செய்யாதவர்கசடர்-சொல்லுங்கால்
குலமாலைவேற்கட்குறிப்பறிந்துபார்க்கிற்
பலபாநற்பாதிரியைப்பார். ௫

முற்றுந்தில்லையும்வாசமுள்ளுமுனையுமெவர்
சற்றாகிலுஞ்செய்துவைத்ததுண்டோவன்புஞ்சர்க்குணமும்
பெற்றார்புரவிக்குங்கானதுகண்டுபேதையர்கள்
கற்றால்வராதுகண்டாய்கச்சிமாநகர்காவலனே. ௬

வெண்பா.

மிக்குப்பெருதியுமிகுகனல்பாய்ந்தாலும்
உப்பொழிதல்செல்லாவொளிகடல்பால்-மிக்க
இனநலநன்குடையராயினுமென்று
மனநலமாகவாங்கீழ். ௭

உடைப்பெருஞ்செல்வத்துயர்ந்தபெருமை
அடக்கமுநெஞ்சத்தினுக-நடக்கையின்
ஒள்ளியனலான்மேல்வைத்தகுரங்கின்கைக
கொள்ளிக்கொடுத்துவிடல். ௮

தத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமில்லையேயில்லையாகும்
தத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமெய்திடிலெய்துமென்றே. ௯

கதிரவனிலையேற்கண்ணிற்காண்பனமறையுமாபோல்
நிதியமொன்றிலையேலியார்க்குநீதிமான்ஞானபோதம்
துதிபெருகீர்த்தியாண்மைச்சூழ்ச்சிமந்திரவிசாரம்
சதிரபிமானமெல்லாந்தன்னிலேமறைந்துபோமால். ௰

கலித்துறை.

பாலுக்குச்சக்கரையில்லையென்பார்க்கும்பருக்கையற்ற
கூழுக்குப்போடவுப்பில்லையென்பார்க்குங்குத்தித்தைத்த
காலுக்குத்தோற்செருப்பில்லையென்பார்க்குங்கனகதண்டி
மேலுக்குப்பஞ்சணையில்லையென்பார்க்கும்விசனமொன்றே. ௰௧

மேவுமென்போகம்விளம்பில்பெண்ணுடையியன்கலன்பாற்
றூவியம்போசனம்தாம்பூலம்வீசுகந்தமன்பி
னுவெழிற்பாட்டலர்மெல்லணையாமிவைநண்கமைந்த
வாவிக்கடவுளருட்பாழிபெற்றவரசிடமே. ௧௨

வெண்பா

எண்கோவைமேகலைக்காஞ்சியிருகோவை
ஒண்கோல்கலாபமிருபத்தொன்று-பண்கோள்
பருமம்பதின்மூன்றுமுப்பத்திரண்டு
விரிசிகையென்றுணரப்பாற்று. ௧௩

மன்னவன்குணங்கொடி தெனவருத்தலுமதற்குத்
துன்னுபைங்கொடியடுத்த கொம்பதனையேசூழு
கன்னிமாதருமன்னருந்தங்களைக்காத்தே
பன்னுமிங்கிதஞ்செயுமவர்பாற்செய்வார்பரிவு. ௧௪

பாவிகளகத்தைப்போலும்பலவிரதியர்கள்போலும்
ஓவருசகாயர்போலு முறைமுறைசுற்றம்போலும்
மேவுவரவரைச்சேரின் மேன்மையரேனுமுய்யார்
பூவையர்முயலுமுன்னோர்பூனையைச்சேர்ந்தவாறே ௧௫

வேந்தருங்கொடுந்தீயும்வெவ்விடம்பொழிபகுவாய்
பாந்தளுஞ்சரியாதலின்னவன்பக்கல்
போந்துநண்புகொண்டடவி நீபுறக்குமாறென்னும்
மொந்திடும்படிக்கடிப்பதுமன்னர்தம்முறையே ௧௬

ஒருவருக்கமுதளித்தானும்பனேனுலகமாளு
மிருவருக்கமுதளித்தா லிந்திரன்பதவிசேர்வார்
மருவியபூசைசெய்து வந்தவரிளப்பையாற்றில்
திருமடவன்னதானஞ்சிவலயமாகுந்தானே. ௧௭

வெண்பா.

அருக்கனையுஞ்சோமனையு மைம்மூன்றுநாளதனிற்
பெருக்கவரவந்தீண்டிற்பேசுங்கால்செருக்களத்தின்
மன்னர்மடிவார் மடிவாரேயாமாசில்
அன்னமரிதாய்விடும், ௧௮

பருதியும்பஞ்சமாகிக் கார்மதிவெள்ளமாகுங்
குரிதியுங்கூச்சலாகும் கொடும்புதன்காற்றதாகும்

பெருத்ததோர்வியாழம்வெள்ளிப்போகமேரவியுமாகிற்
கருத்ததோர்சனியுமாகிற் கலகமும்பற்றறுதே. ௧௯

கல்லாடர்செய்பனுவல் கல்லாடம்நூறுநூல்
வல்லார்சங்கத்தி வந்தருளிச்-சொல்லாட
மாமதுரையீசர்மனமுவந்துகேட்டுமுடித்
தாமசத்தார்நூறு தரம். ௨௰

இடுகோட்டுமங்கை யெனும்பிற்புரண்மால்
சுடுகாட்டிலாடுவார் சுட்டி-நெடுகாட்டுஞ்
சம்பந்தாயென்புநின்பா றந்தாக்கிக்கொண்டிலனேத
கும்பந்தானென்னுமுலைக் கொம்பு. ௨௧

கலித்துறை

அரியெச்சில்போலவர்வெச்சிமஞ்சரியெச்சிலும்
எரியெச்சிலேழுமுனியெச்சிலும்போர்வேந்திழையாள்
கரியெச்சில்போன்றனளவிக்ரகிமச்சோழன்கனைத்தகன்றின்
புரியெச்சிலுண்டபுல்வண்ணனெச்சிற்புரந்தரனே. ௨௨

வாக்குமனமுடையானென்றார்தமணிமுடிநீ
தாக்குந்திறமையிருங்கோளன்வெற்பிறயனடுக்கம்
போக்கும்புனிதனுமாலும்புரந்தரனும்
நாக்குங்கழுத்துந்தலையுமில்லான்பகைநாநல்லவே. ௨௩

காயுங்கடுஞ்சுரமீதமென்றுகாட்டியதையுஞ்சொன்ன
வாயும்பகையெழும்பாலையிலேமணிமாமகுடம்
தோயும்புகழ்ச்சிச்சுந்தரபாண்டியன்தோகைவெற்பில்
தாயுந்தமருமில்லானிங்ஙனேனிநின்றதார்குழலே. ௨௪

ஆக-செய்யுள்-௯௰௬.



கடிகைமுத்துப்புலவர்பாடிய

மடக்கு.

கருப்பஞ்சிலையுமோர்கரமேகண்டேநானுஞ்சுக்ரமே
காமப்பயலுமோர்க்கரமே கணையைத்தொடுப்பான்சீக்கிரமே
வருத்தம்புரிவாரனேகரமே வல்லார்மடவார்நிசகரமே
மாமால்வெங்கடேசரெட்டன் வருவான்வருவானென்றிருந்தே

திருத்தும்படிக்குமனோகரமேசெய்தானினித்திவாகரமே
இனியில்வருவாயெனக்கரமேதெரியவுதித்தான்சக்கரமே
பொருத்தந்தருகண்ணகரமேபோர்வெட்சிலைவீராகரமே
பூவைமருஞ்சேகரமேபுகழ்ந்தேன்ரத்தினகரமே. க

கையான்முகத்தைந்துமலர்க்கண்ணலெனையும்பார்த்துமலர்
காலால்வண்டுகுடைந்தமலர்க்கனியையெனதுகுழற்கணிந்து
மெய்யானதைபேதடவியென்றன்மேலேயிலங்குமுடைமையெல்லாம்
வெவ்வேறாககளைந்தநணை மீட்டுநிறையாத்தரித்துமங்கே
கையாவிடையத்துகிலாநன்றாய்ப்பொதித்துமனம்விரும்பி
நகைத்தான்வெங்கடேசுரெட்டன்நானுமகிழ்ந்தவனைப்பார்த்தேன்
கையார்விழியாதமைக்கலவிவகையாலுருக்கிவசப்படுத்தும்
மார்க்கமவனுக்கல்லாமல்மாரன்றனக்கும்வாராதே. உ

தலைவனைச்சேர்ந்தவகைக்குங் கடலுக்குஞ் சிலேடை.

மடிமேலேந்திமலர்வாய்த்தேன்வழங்கித்தனம்பார்த்துகிரும்
வைக்கத்தனமேகசங்குமென்றுவணிவாய்முத்தம்பலகொடுக்கக்
கொடியினிடைகாவிசைத்தெழும்பிக்கொள்கப்பலைப்பாயசைக்கவந்து
கூடவரைச்சோமனுந்தோயக்கொட்டுமயிர்தம்கொப்புளிக்க
படியையளந்தகாலாற்கறங்காறைமிதித்துமடமாதைப்
பார்த்துமுனியேநிதுவெனவே பகர்ந்தோன்வெங்கடேசுரெட்ட
முடியுமுனையும்படைத்தவெற்றித் துரையைச்சேர்ந்தவிதம்போலத்
தோற்றுங்கடலோநானுனக்குச்சொல்லிக்காட்டவேண்டாமோ. ௩

அப்புறத்தொதுக்கடிக்கும்அத்தொழிற்கொருப்படுத்தி
அக்கணத்திற்றொடைக்குள் அப்படுத்தெழுப்பி
இப்புறத்திழுத்தொருத்திஎப்படிச்சமத்திகெட்டி
இத்தனைக்குமுத்தரித்ததிப்படிக்ககனப்படப்பை
குப்புறக்கிடத்தும்வித்தைகுற்றமற்றவித்தைகுத்து
குத்தெனச்சொலச்சொலிக்கொடுத்துரைத்தடுத்தடுத்து
மெய்ப்புறத்தொழிற்பயிற்குவெங்கடேசுரெட்டன்
விடியுமட்டுமனுபவித்தவித்தைநல்லவித்தையே. ௪

ஒருகரத்தில்விடவிலைப்பின்உபரிவித்தைமுதனடத்தி
உதிர்செலுத்துங்கரிகரத்தில்உரகனுக்கிமணியசைத்து
மருவியுப்புமழுதுடைத்துவரவெழுப்பியதிலெனக்கு
வலுமயக்கம்வரவரித்துமலரணைக்குள் விழவுயர்த்தும்

இருதொடைக்குளவணிருக்களணைமலர்த்திமுலைசுவத்தும்
இதழ்சுவைத்துமொருதரத்தில்இருவருக்குமனம்ருசிக்க
விருதுகட்டியனுபவித்தவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே. ரு

தந்திதங்கலந்துகண்டத்தரங்கமென்றுசந்த
தந்திளம்புரிந்தணைந்ததந்திரந்தெரிந்திசைத்து
பந்தெழும்புகின்றதென்றுபந்திகொண்டெழும்பவுஞ்ச
பந்தெருஞ்சுகம்பொருந்துபந்தயங்களும்பகர்ந்து
வந்துவந்திருந்தகொங்கைமந்தரங்குலுங்கவண்டு
மண்டுகொண்டைகொண்டலென்றுவந்தொதுங்குசண்டைகண்டு
விந்தைவிந்தையென்றியம்பிவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே. சு

மடியில்வைத்துமுலைபிடித்துவலியமுத்தமிடமுகத்தில்
வதனம்வைத்துமதனவித்தைவகைபிறக்கவவனுரைத்து
முடியுறைக்கநகமழுத்திமுதுகினிற்கைபடவணைத்து
முறுகிமெத்தவிறுகிவெட்கமுழுதுவிட்டுமெலவசைத்து
நெடியபுட்கள்குரலெழுப்பிநிலைதரித்தவிழியிமைக்க
நினைவுமற்றபரவசத்தினிறைவெனக்குவரவயங்கி
விடியுமட்டுமனுபவித்தவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே. எ

மடக்கு.

சுரதஞ்செயவேகடிதடலுச்சுரதந்தனையேதொட்டதுமீ
சுரதந்திரமாகதனையுமீசுரதந்த்ரமென்றெண்ணேனே
சரசஞ்சொலியேநகைத்ததுமிஞ்சரசந்தானேமுடித்தனுபூச்
சரசம்பிரமவேளெடுத்தசரசஞ்சலமுந்தவிர்ந்தேனே
கரகஞ்சமுமென்முலையானகரகந்தொடுமப்பேர்திலகங்
கரகந்தையும்போய்விட்டதரகரந்திருவமணமிதுவே
அரவந்தருட்குரன்முழங்கஅரவந்தனிலேநடித்தமுகில்
ஆமால்வெங்கடேசுரெட்டன்அனுபோகத்தைத்தொடுத்தானே. அ

மடக்கு.

சேலையுரித்தான்கடிந்துவிழச்சோலையுருட்டிப்பார்க்கையிலே
செவ்வாயிதழைக்கொடுத்தானென்செவ்வாய்நீவிப்பற்பதித்தேன்
மாலைசரிந்தபிடரினுக்குள்மாலையமைந்தபிறைபோல
வைத்தானகத்தைதக்கவணையுஞ்சுவைத்தாரீமிதென்றுரைத்தேன்

காலையிடுப்பிலிருக்கியொருக்காலைகையாலிங்கனத்த
கட்டியணைக்கத்தொடுத்தவகைக்கட்டிசொலவுமனம்வருமோ
வேலையெடுத்ததிரைகடலேவேலையெடுத்தமுருகனைப்போல்
வெங்கடேசுரெட்டனைமேவச்சமயம்வாய்த்ததுவே. ௯

மடக்கு.

கலசமுலையைத்தொட்டணையுங்கலசமதியாமெனிற்பிடித்துக்
கசக்கும்முலைக்காம்பையும்பருகக்கசக்குமெனவுநினைபாதே
சலவையுரிவேனுயர்ந்தபுயாசலவையினுநான்விடுவேனோ
சவாதுவழித்துக்கழுத்தினிற்பூசவாதுவரைநேரிதழ்பருகு
புலவிதனையேநினைப்பதுநான்புலவிதலவோசமயமென்றே
புகழ்சேர்வெங்கடேசுரெட்டபூபாவுனையேநானினைந்தேன்
நிலைவானதுவுக்குளிவந்தாநிலவாசமும்வந்தடிக்கவுநான்
நினைப்பாயலிலேமருவவுநீநினைப்பாயலிலேயென்றேனே. ௰

கனவில்மருமன்னவனெனதுகையைப்பிடித்துமடியில்வைத்துக்
காற்போர்குழலைக்கோதிபவன்கைபான்முதுகைத்தடவியுமென்
மனதுகுளிரமுன்புகருள்வழங்கியவனேயின்புமுத்தம்
வழங்கித்தலையைவளைத்தமாமாறிச்சுவைத்தான்வகைக்காரன்
சனகன்மகளைமணம்பொருந்துந்தாமோதரன்போலிருபுயமுன்
சாதிவகைக்கண்மலருஞ்சந்தரோதயம்போற்றிருமுகமும்
எனதுவிழியிற்குளிரவுங்கண்டிருந்தேன்வெங்கடேசுரெட்ட
மேந்த்ரன்கலவிதனைக்கடலே இன்னம்புகல்வேன்கேட்பாயே. ௧௧

ஆழியிடத்திலிருந்தாளென்றவளுமுரைப்பமகிழ்ந்துகணை
ஆழிகொடுத்தானதனுடனே அதிகவிளுமுத்தமுங்கொடுத்தான்
ஊழிகாலம்வாழியெனஉரைக்கத்தாதுயெமைப்புரக்கும்
உரவோன்வெங்கடேசுரெட்டன்உகந்துவெகுமானமுங்கொடுத்த
சூழியானையென்றமுலைத்துணைமேலேற்றிமுரகமெனத்
தொனிக்குஞ்சிலம்புமலப்பவனை துகிலுந்தரிக்கமனைக்குள்வந்தே
வாழியெனவேநானிருந்தேன்மாரப்பயலும்புறம்போமுன்
மையலொழித்துகண்பொருந்திமன்னன்வரவுங்கண்டேனே. ௧௨

மடக்கு.

கடலேயுன்போல்வந்தவளைக்கண்டேமகிழ்ந்தேன்வார்த்தையுங்கற்
கண்டேயுறைப்பதெல்லாநீகேண்டேயெனவுங்கண்டேனே
உடலேன்பசந்தாயென்றுளார் உறவேன்பசந்தாயுரைக்கவெனக்
கொருவரிலாதவாறென்றேன்உள்ளதெனவேறலையசைத்துத்

திடமேபுகன்ருள்புலிபுரந்தசெயமால்வெங்கடேசுரெட்ட
தீரன்கொலுவிற்சென்ருனென்செய்தியுரைத்துன்பவனிகண்ட
தடமென்முலைமார்பொதுமாதா தம்மிலொருத்திபதுமினிப்பெண்
தாமங்கொடுக்கவேண்டுமென்ருள்சாமிகருத்துமிசைந்தானே. கங

மடக்கு.

காமனிவனேயென்னில்வகைகறுப்பனிவனைச்சிவப்பென்பார்
காலைவேலனென்னிலவன்கண்ணீராறுங்கலந்திருப்பான்
பூமன்னவரைநிகருரையாப்பூமான்வெங்கடேசுரெட்டன்
புகழ்சேரெட்டப்புரந்தழைக்கப்புருகூதனைபோல்வரக்கண்டே
சோமன்தனக்குமாமனையேதுணையாயிருந்துமாமனையே
சூழபுலிக்குள்வழிபட்டேதுடித்தேன்மகனுய்வளைபட்டேன்
ஆமன்மதன்சேர்வைப்பறையேஆரம்மணிசேர்வைப்பறையே
ஆழநிலையாப்பயநிலையே அன்னையாளும்பயநிலையே. கச

கடலுக்குந் தலைவிக்குஞ் சிலேடை-மடக்கு.

கச்சங்கவடங்காக்கொங்கைக்கும்பசலைபொருந்தியனங்
கைக்கும்படிக்குமிருந்துமடல்கைக்குந்தரிக்கவெண்ணிமதி
உச்சம்பார்க்குமடவார்கள்உள்ளங்கவரக்காமனைப்போல் (லே
உதித்தோன்வெங்கடேசுரெட்டன் உலவப்பார்த்தேன் பெருங்கட
அச்சங்கூறுமுன்னிடத்தில் அச்சங்கூறுமென்னிடத்தில்
அம்பாசலசவாய்நீயுமதன்அம்பாலசைவுமெனக்குண்டே
மச்சங்கடவாதுன்னையுங்காமச்சங்கடவாதெனக்குமுண்டாம்
வணங்காரகுமுனக்கெனக்கும்வணங்காரகுஞ்சிலதியரே. கரு

மடக்கு.

வருந்துஞ்சனகிமகம்பார்த்துவரியிற்பலத்தைபின்பார்த்து
மணக்கோலஞ்செய்திருந்தவன்வேள்மணக்கோலஞ்செய்ததைப்பா
திருந்துவளையும்போச்செனவேதெரிவைமாதர்மயலாகுஞ் (ரான்
செவ்வேள்வெங்கடேசுரெட்டதீரனிளசைக்கடற்றுறைவாய்
இருந்ததிடனுகக்காவேயென்னைதிடனுகக்காவே
ஏற்றதாலத்திடந்தூரேஏசுந்தாலத்திட்டதூரே
பொருந்துமணலின்வாய்த்திட்டேபொறுப்பேனேதாய்வாய்த்திட்டே
புகிகாமதியானந்தினமேபொருகாமதியானந்தினமே. கசு

மடக்கு.

காரியனையகொடைக்குமுபகாரிதமிழ்பாராட்டும்விப
காரிமதியோசனையாலுங்காரியகருமப்பகர்வோன்

வேரிகணகத்திருமாதைவிழியுளிருத்திப்பகையனைத்தும்
வென்றோன்வெங்கடேசுரெட்டன்மேவுமிசைக்ககடற்கரைவாய்
வாரிமுசட்டிமலமுகல்மேவளேபோனதுவுமெழுகலமே
வந்தால்வருமீசுரப்பாறேமேயலெனக்குஞ்சுரப்பாரே
நீரினுறுமின்புறவேகெடுநாட்செலுமோநான்புலவே
நெய்தற்றடருங்கொடியாரேநேயரனைமார்கொடியாரே. கள

மடக்கு.

கனத்துப்புடைத்துப்பருத்துவிம்மிக்காம்புதிரண்டுகண்கறுத்துக்
காமன்மகுடம்போற்பரந்துகச்சுக்கடங்காக்கனதனத்தார்
மனத்துக்கிசைந்தவடிவழகன்மதவேள்வெங்கடேசுரெட்டன்
வைகைநதியும்வைப்பாநும்வந்துபெருங்கடற்றுறையே
உனக்குளேவாசஞ்சலமேஉள்ளத்துளவாசஞ்சலமே
ஒழியாதுப்புமயக்கமேஉண்டேதுப்புமயக்கமே
சினத்துமோதுவரியாரேதெரிந்துமோதுவரியாரே
வேணுக்கோடமலைத்தேனேசித்தங்கோடுமலைத்தேனே. கஅ

பாட்டுடைத்தலைவன் குணத்துக்குஞ்சிலேடை

மடக்கு.

தரியவமுதம்பழகுமதிதெரிந்தவாரம்பிரியாமற்
றீரத்திடறுநீங்காமற்செழிக்கவாய்மைகடவாமல்
வரியைபுரிந்துதமிழ்புனையவந்தோவெங்கட்டேசுரெட்டன்
மனதுநிறையுங்குணம்போலவளரும்பெரியகடற்றுறைவாய்
பெரியமீனேசினக்கயலேபெண்பால்வருகுமெனக்கயலே
பெருகுந்திரையிற்சொல்லீரேபிழைக்கத்தூதுசொல்லீரே
அரியின்மனையேமுடலையேஅமைத்தாரேவருமுடலையே
அரனுர்க்குரித்தாங்கணைக்கூடேஅணைகேள்மார்தாங்கணைகூடே

ஆகசெய்யுள்-கூகூ௫

பின்முடுகுவெண்பாவும் வெண்டுறையும்.

கல்விக்குஞானக் கருத்துண்டாங்காயமுறும்
தொல்வினைகளெல்லாந் தொலையுமே-வில்லைத்
தனிற்புயற்றிருக்கனுத்தன் வச்சிரப்புயத்தோர்
கற்பகத்தினைத்துதித்தக்கால். க

சிந்தாகுலந்தீருஞ்செய்கருமங்கைகூடும்
சந்தானமென்றுந்தழைத்தேறும்-பைந்தாமற்
றுனேவயத்தானேமலேப்பாவையளித்தானேமகத்
தானேமுகத்தானேநினேந்தால். ௨

செல்வம்பெறலாம்செழித்தபுகழ்சேரலாம்
வில்வம்புனேவார்விரிஞ்சேசர்-புல்லுமதன்
கோளேமுடித்தமரியக்கோதையிடத்தார்கமலத்
தானேமனத்தூடுநினேத்தால். ௩

அண்டர்தமக்கரசாமன்புயர்கொம்பாம்
மண்டருணர்தம்முயிர்க்குவன்னியாம்-பண்டுதிறற்
கஞ்சனஞ்சிடுங்கடம்பணிந்தெழுந்துகந்துசூரை
மிஞ்சிதஞ்சிறித்தெறித்த வேல். ௪

ஆதரவாயென்னருகிலஞ்சலென்றுவந்துநின்று
போதரவுசெய்யுமெப்போமே-ஓதுதமிழ்
சந்தமுந்தலங்கிர்தஞ்செறிந்துநன்குயர்ந்துதங்கு
விந்தைகொண்டிலங்குசெந்தில் வேல். ௫

இங்கிதமாநல்வாழ்வெமக்களிக்குமுற்பகல்செய்
சங்கடமால்வேலே தனிக்குமே-பொங்கமுறத்
தற்பார்த்தனுக்கிரங்கித் திடக்கருத்தனித்தமத்த
வெற்பினேத்துளேத்தவுக்கிரவேல். ௬

நீட்டும்வினேகளறுத்தின்பமுறவேயெனது
பாட்டுக்குகந்தருள்பாலிக்குமோ-நாட்டமிகும்
மண்டலங்கசண்டர்கண்டாதுண்டர்துண்டராவி
விண்டொடுங்கமண்டியுண்டவேல். ௭

உன்னவினிதாயிருக்குமோங்குசெல்வமும்பெருக்கும்
நன்னலருளேக்கொடுக்குநாடோறும்-பன்னும்
சகடமுருளநெடுருடுகமலசாணக்கருணேயறிமருகன்
விகடகரியினியமுருகன் வேல். ௮

ஊழ்வினேயைப்போக்குமேயுள்ளொளியைக்காட்டுமே
வாழ்வதற்கோர்வித்தாம் வளருமே-தாழ்வார்
தடபடவென்பதிர் கடலதின்முடிமிசை
விடவதிபொடிசெய்யும் வேல். ௯

ஓராருசென்னியொருமுருகாவென்றளவில்
தீராதவல்வினேநோய் தீருமே-போராடிக்

கொக்கரித்துவெற்படர்த்துக்கொக்கரக்கனைத்துணித்த
விக்ரமத்திருக்கரத்து வேல். ம

கந்தாகடம்பாகயிலாயமாமலையான்
மைந்தாச்சுவாமிவடிவேலா-சந்தங்
குறமகளாசைகொள்கணவாகுருபரனாகிய்குமரா
அறுமுகவர்பழனியின்வேலா. கக

அன்பர்பயங்கெடுக்குமத்திகிரியைத்துளைக்கும்
இன்பவல்லிக்கண்ணிக்கெதிராகும்-மின்பரந்த
வாகுதோளிலேறிமீவாகுசாரியோடியாடி
வேகசூரன்மார்பிளந்தவேல். கஉ

அஞ்சிமயல்சகியாதங்கமுறுகின்ற
வஞ்சியைச்சேர்தென்றணிகைவள்ளலே-பஞ்சமலர்
அங்கனுக்குங்கிரணத்தநதிமதிக்குங்கடலுக்
குங்குழலுக்குங்குயிலுக்கும். கங

வாங்குசிலைநுதலார்மாயக்கவியிலே
ஏங்கிமனமிளையாதே-பாங்களிக்காய்த்
தம்பியொக்கசண்டையிட்டுத்தந்தையைச்சுற்றந்தவொற்றைக்
கொம்பனைச்சற்றன்புவைத்துக்கூறு. கச

தாமரைப்பூந்தேனையுண்டுதாதனைந்துவண்டிமிர்ந்து
காமரஞ்செய்வாவிகள்சூழ்கந்தாசிலமாமலைவாழ்
பூவையரங்கந்தங்கம்பூகமிலங்குங்கண்டங்
காவையரங்கஞ்சங்கண்காண். கரு

வந்துமழைபொழியும்வானேவெஞ்சூர்தடிந்த
கந்தர்திருவிழாக்காலத்தில்-தொந்தரையா
நீர்த்துளியையீற்றிவிடனேர்த்தியலமாற்றிவிடு
கீர்த்திவருதாட்டனமொருகேல். கசா

போற்றுவார்வல்வினையைப்போக்குமேலவர்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமே-தோற்றறிய
சந்தங்குஞ்செஞ்சொற்கங்கம்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால். கஎ

ஆறுமுகமென்றளவிலச்சந்தவிர்க்குமே
தேறுவினைவர்தால்விலக்குமே-கூறுபுகழ்

மாரியொத்தசூரபத்மன்மார்பிளக்கவேகொடுத்து
வீரசத்திரான்மிகுந்தவேல். கஅ

வேலாவிராலிமலைவீராவனங்கொருபெண்
மாலாகியேநின்றுவாடுகிறாள்-நீலான
உற்பவக்கயற்கணிச்சியுத்தரித்திடச்சமர்த்தி
அற்பசிற்றிடைக்கொடிச்சியாள். கசு

கந்தனென்றுவேலனென்றுங்கானமயில்வீரனென்றும்
செந்தனென்றுமேன்புலவீர்செப்புகிறீர்-முந்திவிளங்
கூனற்பிறைசூடச்சிவனருக்குபதேசித்தருள்
ஞானக்குருவேடப்பயலை. உ0

பன்னிரண்டுதோளாபரங்குன்றாவெப்பொழுதும்
என்னிரண்டுதோண்மீதிலேயிருப்பாய் பொன்னி
கதிர்முடியப்பாகுகிடக்கனவரையப்பாபழனிக்
கதிபதியப்பாகுமரப்பா. உக

நோகாதோவேலாநீநோக்குமடவானுக்காப்
போகாவனந்தேடிப்போனக்கால் வாகாத
தினநினைந்திட்டுனைவணங்கித்திரியுமன்பர்க்கருள்செய்யும்பொற்
கனகதண்டைச்சிறுசதங்கக்கால். உஉ

வாரீர்பழனிவடிவேலரேகடம்பைத்
தாரீரென்சிந்தையினிற்றானுறையிர்-சோரீர்நீர்
கன்றுநஞ்சுபிஞ்சுமஞ்சுகண்களுஞ்சிவந்துபொங்க
என்றனங்களிங்கசங்கவே. உங

மேகநிறமான்மருகவீறுதணிகேசவிது
வாகடினமேவுவளராவியருள் வாகுவளை
நத்தத்தத்திற்பற்றிடச்சுப்பைகுடத்து
நிர்த்தத்திற்கிச்சித்தநீர். உச

பூவைக்குநண்ணுபகற்போதகமதாமெலிந்தாள்
வாவிக்கவின்றணிகைவாழ்குமரா-பாவிமதன்
அம்புரம்புகுந்தலைக்கவம்பகந்தணந்தெறிக்க
வெம்பிநெஞ்சமுந்திகைக்கவே. உரு

அம்பிறைக்குவைந்துமலரம்பிறைக்குநொந்துமிக
அம்பிறைக்குங்கண்ணட்கருள்புரிவாய்-நம்புதனி

கைக்கிரிக்குளுற்றசித்ரகைச்சடைத்தனக்குறத்தி
யைக்களித்தணைத்தவத்தனையே. ௨௬

எண்ணிடத்திலேகுமராவெண்ணாதேயேக்கமா
உன்னிடத்திற்கொண்டமயற்கோதாமே-துனணிரவு
சொல்லாப்பகட்டுமென்கண்செல்லாப்புரட்டு
பொல்லாப்பரத்தைவஞ்சிபோல். ௨௭

செங்கமலக்கண்கலங்கிச்சிந்தைநொந்திராமுழுதும்
வெங்கலைக்குஞ்செங்கலைக்கும்வேலோனே-அங்கசன்றன்
பூங்கணைமெத்தைத்தும்பூங்கொடிகத்திபட்டுத்
தாங்கணைமெத்தைதைத்துத்தான். ௨௮

சங்கநிதியோகம்வாழ்சண்முகனேநின்மோக
மங்கையெழின்மேனிகளம்வண்மருங்கு-கொங்கைசெங்கண்
கந்தந்தங்கந்தங்கம்பந்தந்தந்தம்
சந்தந்தந் தண்கஞ்சம்பார். ௨௯

நீமருவவாமுருகாநித்திலங்களுஞ்சிந்தக்
காமருதேன்பூட்டிநெடுங் கன்னல்வளைத்-தேமதனன்
வண்டுவரக்கண்டுளறிமதியும்பரிபோய்
வண்டுவாய்புலம்புவாள். ௩௰

நூறுமுகமாய்ப்புகழ்ந்துநூறாயிரம்பேர்தாம்
வேறுமுகம்பார்த்திருக்கவேண்டாமே-ஆறுமுகச்
சுத்தனைசித்தத்துக்கைத்துச்சொற்றமிழ்ச்சித்ரக்கவிக்குட்
கத்தனைச்சற்றுதித்தக்கால். ௩௧

பங்கயக்கண்வேலனைபைந்தொடியாபட்டிநித
மங்கிமிகவும்வளர்ந்துவாடுகிறாள்-செங்கமலர்
அன்னநடைமின்னலொளிசின்னவிடைவன்னமுலை
கன்னமொழிமன்னுமிவள் காண். ௩௨

எத்திக்கும்போற்றுமிவளையெழிற்குமரா
தித்திக்குநின்கனிவாய்த்தேனாறன்-முத்தமிட்டுச்
சித்திரைச்செப்புனத்தைச்சிக்கெனக்கட்டிப்பிடித்துச்
சித்தமொருப்பொற்பதத்திற்சேர். ௩௩

வேலவர்தாநேற்றணைந்தவிந்தையைநானேதுசொல்வேன்
கோலவடமோசையிடங்கொம்பனையே-சீலமுடன்

கட்டிமுத்தமிட்டணைத்துக் கட்டிமைக்கணைச்சுவைத்து
மெட்டிணைப்பதத்திலிட்டு மேல். ௩௪

வேலவனேநின்கல்விவிந்தையதற்கேற்றமங்கை
கோலவரிக்கண்சுழற்றிக் கொஞ்சுகிளிபோலமுலைக்
கச்சுக்குட்சிக்கச்சொக்கப் பொற்சுட்டிக்கட்டிப்
பச்சைப்பொட்டிட்டத்தைப்பார்.

ஏவிழியார்முரணிளணிலாக்கண்டுகெருங்
காவிமுகையவிழுங் காஞ்சியேமேவலரூர்ச்
சக்கரக்கரக்குதைக்கணக்கிலக்கெனக்கொள்
நக்கரக்கரக்கணக்கர் நாடு. ௩௬

நாலாநாள்சேர்ந்தணைந்தநன்னயத்தையெண்ணிமெத்த
மாலாநாள்வேலவனே மாரனெய்யும்-கோல:லே
வண்டுகுடியானகுழல் வஞ்சியெனமோபயந்து
வண்டுகுடியான்மருவ வா. ௩௭

வானுதித்தமாமதிக்கும் வாரிவிட்டவேள்கணைக்கும்
மீனுதித்தவாரிக்குமேதினிக்குள்-நானொரு
சிந்தைவாடிநொந்தசேதி செங்கைவேலர்பங்கிலோடி
மந்தமாருதஞ்சொலோது மா. ௩௮

செந்தழல்போல்வீசுதினிச் சேந்தணைவாய்வேலவனே
கந்தமலர்சோலைவண்டுங் கார்க்குயிலுந்-தொந்தமுடன்
பாடுதுவம்பும்தும்பும் பார்மதனுந்தும்வந்துஞ்
சாடுதுவம்புந்தும்புந்தா. ௩௯

வாகந்தாவல்லவென்றல்வாகந்தாராகிலுந்தா
கோகந்தாமீறிவளைத்தோய்ந்திடவே-நரகஞ்சேர்
மாலையிந்துசோலைவண்டுமாரனம்புசூழநொந்திவ்
வேழைநெஞ்சமேகலங்கினாள். ௪௰

பாகாருமின்சொல்வள்ளிபாகாதேவேந்தனருள்
வாகானகுஞ்சரி விவாகாநீ-யேகாவல்
என்றுநம்புவென்றணைந்த சிந்தையன்புபொங்கவந்து
நின்றுகொண்டிரங்குகந்தனே. ௪௧

வாதாவுன்னூனுநட வாதாவோராறிரண்டு
காதாவுன்சித்தமிரங் காதாநீதாவென்

சிந்தைதக்கிசைந்தபடி செஞ்சொற்கிரங்கியருள்
கந்தப்ரசண்டமுருகா. ௪௨

வந்தனையாவென்றுதுயர்மாற்றிமனவேட்கையெல்லாம்
வந்தனையாத்தந்தருளுமாதவா-பந்தனைய
கொங்கைமுரமங்கையொடுகுஞ்சரிபுடந்தழுவு
கங்கையுமைதந்திடு குகா. ௪௩

அந்தணர்கள்போற்றுமந்தணிகைவாழ்குமரா
வந்துகலந்துமருவாநாள் பைந்தொடுக்கி
மேல்படுத்தழுத்தநங்கன் வேல்படப்பொரிந்துதென்றற்
கால்படச்சரிந்ததென்பன் காண். ௪௪

மெத்தமயலாகிமெலிந்தயர்ந்துவாடுகிறாள்
சித்தமுவந்தாண்டருளுஞ் செவ்வாளே-இத்தலத்தில்
கண்டுமொழிகண்டஞ்சுகங்குல்குழல்கண்டஞ்சும்
வண்டுவிழிகண்டஞ்சு மான். ௪௫

இருபுறமுங்காவேரி யேர்மாலையாய்ச்சூழ
திருவரங்காவெங்கள்குல தேவா-வெருவ
எரிபுரிந்துவிழிசிவந்துயமனிருண்டவுருவுகொண்டு
வரவுகண்டுதிகிரிகொண்டு வா. ௪௬

ஒருத்திமிகமயல்கொண்டுன்சமுகம்வந்தாள்
திருத்தியணையென்றுவகைசெப்பி-யுரைத்திடினற்
செப்பமுலைச்சொற்பகழிகொத்தவிழிச்சித்திரவிற்
பொற்புருவத்துப்பதரத் தாள். ௪௭

பாலாழிநீங்கியிந்தப்பார்தனிலோர்கள்ளனுக்கா
மாலாமுசங்கொளித்துவந்தருளச்-சாலாழி
அன்றனைதக்கடித்திமுக்கவங்கவற்களித்தமுத்தி
இன்றளிக்கைவென்றனுக்கு நீ. ௪௮

பாரோர்புகழவரும்பங்குனியுத்திரத்தில்
ஆரூர்வீதியணுகினர்-நேரே
பணச்சர்ப்பந்தரித்துப்பொற்பதத்திற்கிண்கிணிச்சத்தங்
கிணுக்குக்கிண்கிணுக்கென்னவே. ௪௯

திருவுளவாயிற்சேவேறுமீசர்
மருவுளகொன்றைத்தார் வழங்கில்-வெருவுளகோ

சங்கமும்விழுந்திடாது தங்கமும்பொழிந்திடாது
திங்களுமகன்றிடாது தே. ௫௰

செங்கயலோநீலவண்டோசித்தசன்கைநீதவண்டோ
பங்கயமோமால்வளரும் பாற்கடலோ-தங்கமலி
மச்சிரநகைச்சிரவின்மெச்சபுரு
வச்சினவிடைச்சிவிழி பார். ௫௧

உன்மனதுமென்மனதுமோர்மனதாவொன்றிடினே
மன்பதனும்வில்லெடுக்கமாட்டானே-ன்மதியோய்
குன்றடைந்துபந்தைவென்று கொன்றடைந்தனும்பிகுன்ற
வென்றடைந்தகொங்கைமங்கை யே. ௫௨

மித்தமுநினைத்திரவினித்திரையுமற்றுருகி
சித்தயனெடுத்தவருடிக்கணை-தைத்துருகி
மெத்தமயலுற்றபிரமிக்கதலைசுற்றுதடி
தத்தையொருமுத்துமோ கா. ௫௩

வேலோகடலோமோகருவண்டோ
சேலோகணையோசிறுவாளோ- கோலமுடன்
தண்டங்கித்துண்டுருளத்தத்திவிழக்குத்துமுலை
கண்டங்கிக்காரிகடைக்கண். ௫௪

நீலமோவேலோநெடுங்கயலோவாரிதிசேர்
ஆலமோவம்புயமோர்மெங்கணையோ-நீலநிற
வாவிச்சோலைக்கருகில் வந்துபுனலாடுகின்ற
காவிச்சேக்காரிக் கண். ௫௫

சேலோகணையோபிணையோநற்றென்னவன்கை
வேலோநமனோ மிளிர்வண்டோ-தாலப்
பளபளென்றுஒளிமிகுநதுபவளமிஞ்சிநகைபுனைந்த
களபகும்பமுலைமடந்தை கண். ௫௬

முக்கனியிதழ்கொட்டாமுற்கதிரையிறகுமரா
விக்கநரைமிக்கவினிபுத்தமுதுசர்க்கரையில்
கிக்கிலைகசக்குதுநிசிக்கலையுத்திக்கிவத்தில்
அக்கரைபரக்குமடடா. ௫௭

ஆரார்பொறுப்பார்சொல்லாதித்தாவஞ்சிமன்று
சேராபராசசேகரா நேரே

சினத்துவட்டமிட்டுசெப்பணைத்துதித்தபொற்
றனத்திலிட்டமுத்துவெக்கை தான். ௫௮

இந்நேரநீயவளை யின்பமணமேபுரிவாய்
தன்னேரருணா சலதுரையே-மன்னுமதன்
பூவினம்பையேவநின்று போர்செய்கின்றதான்மெலிந்து
காவியங்கணாள் கலங்கி னாள். ௫௯

கோங்கினரும்போ குமிழியோபொற்பந்தோ
ஓங்குவரையோவொளிர்செப்போ-மாங்குயிலின்
மன்னுமொழியின்னடை டின்னலிடையென்னவரு
கன்னிவளர்சின்னமுலை காள். ௬௦

இத்தலத்தோர்போற்றுமிறைவனே தஞ்சைநகர்
வித்தகனேசிவாசி வேந்தேகேள்-சித்தசன்றன்
சமரிலங்கங்குழலுநந்தஞ்சதிரும்பெண்டிருமுகஞ்செங்
கமலமுஞ்சத்திரனுமஞ்சங் காண். ௬௧

பூமிதனிற்பேசும் புனிதாசிவாசிமன்னா
காமியின்மேலின்றுபதைகண்டதுகேள்-காமனவன்
மாகஃமுந்தோகையரு மாமதியும்பாலனமும்
சாகரமுங்கோகிலமுந் தாம். ௬௨

மண்டலத்தோர்பேசுகின்றயாலேசிவாசிமன்னா
கண்டஞ்சுங்கன்னிதனங்கைத்தாளம்-செண்டுசிமிழ்
கும்பம்புயக்கிரீடங்குஞ்சரங்கும்பைமேரு
பம்பரஞ்சிறந்தசூது பார். ௬௩

மாதங்கவத்திறற்குவட்டமளித்தோனுதவும்
மாதங்கவத்திரற்பின்வந்தகுகா
தங்கங்கம்பும்போதுந்தண்கஞ்சங்கண்டம்
பங்கந்தங்குஞ்சங்கம்பார். ௬௪

கடுமொழிசேர்சூதைவென்றகந்தரவிம்மாதின்
நடுமொழிகளங்கண்முனாநற்றாள்-ஓடுசேரத்
தந்தஞ்சுங்கண்டஞ்சுஞ்சங்கஞ்சும்வண்டஞ்சும்
பந்தஞ்சும்பஞ்சஞ்சும்பார். ௬௫

என்றுவடிவேலிளங்குமாரனைக்கண்டாள்
அன்றுமுதற்சேரமன்றாகியே-இன்றும்

திக்கனைத்துச்சொக்கிவட்குத்திக்கிவிப்பக்கத்தடுத்துச்
சுக்கெடுத்துந்தட்டிவைத் தூது. ௬௬

என்னைச்சொல்வாரல்லதென்னைவிதித்தருகன்
றன்னைச்சொல்வாரில்லையித்தாரணியில்-நண்ணி
தனைமறந்தாளெனைமறந்தா ளினிதுரந்தாளனைபொருந்தாள்
எனைமறந்தாளுனைமறந்தா ளென்று. ௬௭

அன்றயன்மால்காணு வடிமுடியைக்காண்பதற்குத்
தென்றிசைக்கோனென்னதவஞ் செய்தானோ-வென்றிதிகழ்
ஆடரவாளரநீறணிதோளா வாதிரைநாளாமாதுமணாளா
தோடவிர்காதாமாகடவூரா சொல்.

தென்றலுலவுந்திருக்கடவூரெம்பெருமாள்
மன்றலத்தெரிந்தேமதவூரும்-கொன்றைக்காப் (ந்தும்
பொன்பரவுந்தீண்கொங்கையிரண்டும்புண்படநொந்துன்பமிகு
அன்புதிரண்டும்பெண்கொடிநெஞ்சஞ்சும் ௬௯

பாலனுக்காவென்றி பகட்டேறிவந்தெதிர்த்து
காலனுக்குக்காலா கடவூராமேலோர் (சன்
கரும்புகொண்டங்கெதிர்ந்துவந்தங்கசன் பெருஞ்செஞ்சரங்கன்
மருண்டுநெஞ்சங்கலந்துமென்றன் மான். ௭௰

தொண்டருடன்கூடித் துதித்திரண்டுகண்ணாரக்
கண்டுதொழுவேனோ கடவூரா-பண்டோர்
அமுதுதிருஞ்சிறுகடத்தன் றெழுமுனக்கன்பரைமருட்டும்
சமனையெற்றும்பரிபுரற்செந்தாள். ௭௧

என்றுதொழுவேனெளியேனளிமுரலு
கொன்றையணிதென்கடவூர்க்கோமானே துன்றும்
கனற்பொரிக்கற்பகத்திலுற்றுகறுத்ததெற்குத்திசைக்குளுக்கத்
தனச்சினத்துட்டுதைத்தபத்மத்தாள். ௭௨

பற்றிப்பணிந்து பரவவரந்தருவாய்
கற்றைச்சடையாகடவூரா-வெற்றிநெடுங்
கொண்டலொக்குங்கண்ட சத்தங்கொண்டெதிர்த்தங்கருக்குஞ்
சண்டனைக்கண்டன்றுதைக்குந்தாள். ௭௩

ஆற்றுமோநெஞ்சத்தடங்குமோகொண்டமையல்
கூற்றுதைத்தென்கடவூர்கோமானே-மாற்று

நாதட்டமதன்கணைகளைத்ததுளைவழியே தென்றல்வந்துசுவைத்துத்தள்ளி, விட்டவெறுங்கூட்டையினிச்சுட்டதனாலென்னபயன் வெண்ணிலாவே. ௧௬

புவிக்காதிபதியிளசை புரந்தவெங்கடேசரெட்டன் புலவோர்சொல்லும், கவிக்காதிவள்ளலைக்கண் டாசைகொண்டாளுக்கமுதைக்கரைத் தப்பால்வார்த், துவிக்காதிவ்வளவேனும் புகட்சகியேமுகத்தைத்துடை நன்னீரு, தவிக்காதிதேசுக்காளுலும்வைத் தாதிவளராமத்தைகைக்குநாமே.

பொருவாசிங்கொருநகுல னிசைவெங்கடேச ரெட்டன் புயங்கண்டாயோ, இருவாசிக்கெனக்கலையை யுடுத்துவணிதிருந்தவளை யெங்கேதேடு, மருவாசிக்குங்குழலை முடியுனக்குதரிப்பிடந்தான் மகளேசீச்சீ, தெருவாசிக் கினதுமவன் கைம்மருந்தான்மெய்மறந்து திரிகின்றாயே. ௧௮

போரவிசையஞ்செலுத்த வேங்கடேசரெட்ட யேந்திரன்மேற்புதுமால்கொண்டோன, சரவிசையங்கசமாரன் கருப்புவில்லைவளைத்துவலக்கையாலெய்யும், சரவிசையங்கரத்தில்வந் துதைத்துருவியப்புறம்போஞ்சகிக்கமாட்டேன், இரவிசையும்புதுந்தொளித்தாணிளங்குயில் காணீருமெனக்கிரங்குவீரே ௧௯

புடவிகடகடெனவுடைபடவடவைசிதறவருபொருத்தார்ச்சீறும்
கடவிகடகளிற்றுதயனிளசைவெங்கடேசுரெட்டன்றருவான்முல்லை
அடவிகடவுனதுகுடைவலமதரகயபோகவனிலத்தேதரை
நடவிகடநிமிர்முடிகவிதாடிபரிதிரிதயமிதோநான்கண்டேனே. ௨௰

கற்றனமின்னுவகென்சொன் முனியென்றுயயனம்பாற்கலங்கித்தாபம், உற்றமின்னாமுதங்கசந்தனையாராதநெஞ்சேபணந்தோர்க்கங்கை, யற்றனமினனுளுதவுமிசைவெங்கடேசுரெட்டனியநோக்கப்பெற், றனமின்னுமையின்றேறொழிந்ததயன்மாதரந்தபேசார் தாமே.

ஆனுக்கேபழகனெங்க ளிளவெங்கடேசுரெட்ட னன்னையீசன், தானுக்கேவிருந்திட்டா னென்னலர்கள் யெங்குருதித்தசையைச்செங்கை, வானுக்கே விருந்திட்டான் வாதாராராலவ்வயல் மலர்க்கைவாளி, வேளுக்கேவிருந்திட்டான் வெண்மதிக்கேபெண்மதியை விருந்திட்டானே.

அனங்கலக்கணந்தெரியாள்சிறுபேதைவிரகமிவட்கதிகமையோ
மனங்கலங்கப்பக்கமில்லையுன்னையன்றியாதலினால்வாராதாலே
தினங்கலக்கணீருகுத்துத்தேடுகிறாள்வாடுகிறாடிரண்டகும்பத் [னே
தனங்கலக்கவருள்புரிவா யிளசைவெங்கடேசுரெட்ட தமிழ்க்கோமா

எனக்குடைந்தையானவெங்கடேசரெட்டனருகிலழைத் திருத்தி வைததுத், தனக்குபைங்கபநீரவெனைத் தழுவாதமடக்குறையைச் சகியச்சொன்னேன், உனக்குடம்பெலாங்கசக்கும் பாலனமுங்கசக்கு மழகுற்றகொங்கை தனக்குடங்காத்தொளிகேட்கு மதன்படையும்வந்திணிக்கைகலங்குந்தானே. உச

மாலை மணிமுடிதரித்தமருவலர்கள்சேனைதனைமடியத்தாக்குங்
கோலமதகளிற்றிதயனிளசைவெங்கடேசுரெட்டன்கூடாநாளில்
பாலனந்திவலையருந்தாள்சிறிபாட்குமதிக்குமென்னபகையோமேனி
வேலைகடுக்கலத்தைவிட்டேயெழுந்தலைந்தகாகமெனமெலிகின்றாளே

ஓங்கியராமாமதியாதவன்போலவரவுமிடையுடையுந்தன்னால்
நீங்கியராமாரசத்தால்வருந்துவதற்கிரங்கவேநேமியாத (ள்
பாங்கியராமாவெனக்கண்பார்த்துவருவாய்வந்தென்படக்கையாள்வா
வாங்கியராமாபூமாவிளசைவெங்கடேசுரெட்டமன்னரேறே. உசு

கனத்துவரைபோற்புடைத்த கொங்கைமங்கை கொண்டமையல்கண்டுகந்தா, வனத்துவரைச்சென்றமவர் கொய்திவனே யெங்கவந்தான்வந்தானப்போ, துனத்துவரைப்புனந்திகவு சொல்லாரைத்தாக்கியவர்ததுருவவேண்டிச், சனத்துவரையாக்கும்வெங்க டேசுரெட்டமேந்திரனே தளசிங்கேறே. உஎ

தரும்பலிக்குமருமலரைத்தாக்கும்வெங்கடேசுரெட்டசாமிமாலை
வரும்பலிக்குநினைத்தபடிக்கிப்போதுதப்பாதுவலத்திருந்த
திரும்பலிக்குரலைப்பார்க்கிச் செயமடிபெண்ணேமதனன் செங்கையா
லெய்அரும்பனுக்குமென்னபயஞ்சுகமாவாள்வாயுன்னதிட்டந்தானே

மின்னமருங்கொடியனையசின்னமரங்கெடியமுலைவிம்மதானுள்
முன்னமரும்பெடுத்திமதன்றன்னமரந்தொடுக்கவெகுமோகமாகி
அந்நமருந்தென்னினுமீதென்னமருந் தென்னவின்றேதயர்கின்றாளே
சொந்நமருந்தமிழ்ப்புலவர்க்குதவும்வெங்கடேசுரெட்டசுகுணமாலே

சடங்கலாமகட்கிளமாந்தளிசேர்முத்தம்பொரியற்சகிக்குமாவன் மடங்கலானையைப்பாயும் வாறுபோற்சீரு தென்றல்வருமா சொர்ணக்

கும்பமுலைத்திங்கணுதற்கொம்பைவெறுத்
தம்புதொடுத்தங்கசன்விட்டாம். எச

காணப்பெற்றோமிரண்டுகண்ணாரக்கண்டன்பு
பூணப்பெறறோமனமே பேசாமீத-சேணிற்
புரம்புரம்புரிந்திடும்புரந்தரன்தரும்
பயம்பரந்தருஞ்சிதம்பரம். எரு

கண்டேன்சிதம்பரத்தைக்கண்குளிரமெய்ஞ்ஞானங்
கொண்டேன்சிவாயவென்றுகும்பிட்டேன்-வண்டேகேள்
நீண்டசெம்பொற்காண்டகும்பிற்பூண்டசெங்கையாண்டரங்கத்
தாண்டவன்றன்பூஞ்சறங்கைத்தாள். எசு

தேரோடும்வீதியெலாஞ்செங்கயலுஞ்சங்கினமும்
நீரோடுலாவிவருநெல்லையே-சாரோடும்
கந்தரத்தரந்தரத்தர்கந்தரத்தரத்தர்
கந்தரத்தரத்தரத்தர்காப்பு. எஎ

வல்லாளகண்டாவடுகநாதாசுவர்க்க
வல்லாளகண்டமயல்கொண்டு-பொல்லாத
சித்தன்சரத்திணைந்துதிர்த்தகண்ணன்முத்துடன்கை
நத்திழந்திடத்தயங்கினாள். எஅ

பூவணைமேனாட்டம் பொருந்தாதிருப்பவனைக்
காவடுநாதாதென்கால் சீறித்-தாவிவர
இக்குவிலிநற்கணைக ளிக்கணமெய்க்கவதி
அக்கினிதரக்கவலையாய். எகூ

தாண்டவாவென்று தருளந்தனியிருந்தேன்
ஆண்டவாவந்தென்னை யாளென்றுமீண்டுமதன்
தொட்டநஞ்சம்பிற்கிரங்குஞ் சொற்றளர்ந்தென்றத்தையங்கம்
சுட்டவெண்டிங்கட்குடைந்தஞ்சும். அ௰

பந்தளவுகந்தளபந்தணையணிந்தமுலை
கொந்தனகபந்தமுமிகுந்தமுகில்-அந்தமுள
தந்தெனமெலிந்தவிடை தந்தவரிவுந்தரளம்
எந்தநகரிந்தமயிலை. அக

தேசமதனிற்பேசவந்தேவாசிவாசிமன்னு
வாசமலர்மாலையணிமார்பாநீ-நேசமொடு

நாடுமடமாதுமதனனுமதியானுமுக
பாடுமடவாளையணைவா. அஉ

பாரதனிற்பேசும் பரனேசிவாசிமன்று
சீரமைந்தமாதுகொங்கைச் சித்திரங்கண்-டேரமர்க்கும்
பங்கயங்கிண்ணஞ்சிலம்பும் பந்திதங்குஞ்செங்குடங்கம்
பங்கயந்தண்டெங்குமஞ்சும்பார். அங

சித்தசனல்வாடுகிறேன் சேர்ந்தணைய-வேளேயிது
வித்தைசெய்யவேண்டாங்காண் வேலவனே-நித்யப்
படிக்குத்தணித்துப் படுத்துத்தவித்துத்
துடித்துத்திகைத்திப்படி. அச

எய்யவந்தகாமாவுனக்கிங்கிடமில்லை
உய்யவந்தானென்னோடுறவானன்-செய்யமலர்த்
தேனைவிடுபூவைமுடிதின்றுவடுகைக்கரும்பை
மீனையொருசாக வில். அரு

வேலனேவேளூர் வினைதீர்த்தவனுதவும்
பாலனேசேனு பதிவேளே-சீலனே
கோங்கரும்பிற்கொங்குகொங்கைக்கூந்தல்கொண்டாற்காந்தளம்
பூங்கரும்பிற்காங்கடம்மிற்பூ. அசு

சுடுமோவிளங்தென்றல்தோகையின்மேலம்பு
படுமோமெய்வாதைப்படுமோ-கடவூரா
நீரணக்கார்வேணிநம்பா நீலகண்டர்மேனியின்பால்
ஆரணங்கார்காலசங்கரா. அஎ

பேதையேன்காணப்பெறுவதெந்நாள்வேலவர்க்கோ
தாதையேன்செம்பொற் சபாநாதர்-மாதவத்துச்
சாத்துலங்கண்காடேத்தவும்பிந்தாப்புயங்கம்போற்றவுந்தித்
தாத்தெயென்றுந்தூக்கிடுஞ்செந்தாள். அஅ

எல்லாருநன்றாயிருக்கட்டுமேனிக்குள்
வில்லாருந்தென்பழனிவேலோனே பொல்லாத
பாதகப்பரத்தைவைத்த பாசமெத்தமுற்றுமத்தைப்
பேதகப்பரத்திவிட்ட பேர். அகூ

வையம்புகழ்பழனி வாசன்குமாரன்முரு
கையன்தழுவி யணையாள் தையல்

மதியமூன்றுவளைகமூன்று மதனனம்புபடவுமூன்று
மதிமரந்துமிகவருந்துவாள். ௬௰

வேலாவிராலிமலை வித்தகாநின்மீதின்
மாலாகவேயொருபெண் மையல்கொண்டாள்-மேலான
வட்டமிட்டபொற்றனத்தி வச்சிரபதக்கமொய்த்த
கட்டிழைக்குச்சிறுக்கி காண். ௬௧

மையுமணையும் வனப்புமிழந்தானமது
செய்யும்விதமென்ன சித்தசவேள்-எய்யும்
தனிச்சரத்தைத்தடுப்பதற்குத் திருத்தணிக்கர்த்தனுக்கெதிர்க்க
கணத்தினிற்புக்குரைத்திடத்திடத்திடக்கார். ௬௨

வைத்திடவேளாவி மருமத்தினஞ்சம்பால்
எத்திறைடரிதைக்கா மீசரே-நத்ததிர்த்த
முத்துரத்தினத்தைவைந் திழைத்தவத்திரத்தையுற்ற
மத்தகத்தினத்திமெத்த மால். ௬௩

பாகாகவின்சொலுடைப்பைந்தொடிமேற்கோபமென்ன
வாகாமதன்கணையால் வாடுகிறாள்கீழாகி
காநகரிலேநிதமும் வானவர்கடேவர்பணி
கானளினமானவடிகா. ௬௪

அம்புலியூர்தன்னையடைமின்பணிகள்
அம்புலியூர்விண்ணுலகையாள்வீர்காள்-அம்பொரு
கத்தினயனத்திலகுகைத்தலயனிர்க்கரிய
கத்தினியனத்தியிடத்தான். ௬௫

வாடுகிறாளின்மாலைவாங்கக்கிளியொன்று
தேடுகிறாளின்மாலைவாங்கிளியொன்று
அனகனம்புசொரியவிந்துவனலைமொண்டுவிசிறவெம்பி
மனதுநொந்துகலையிழந்தமான். ௬௬

நீரோதிருவழகர் நீரோகரியமுகில்
நீரோதிருமலைமேனின்றருள்வோர்-நீரோ
வளர்ந்தசெம்பந்தங்கள்கொண்டெழுந்துமண்டலங்கள்புண்
டளர்ந்துகொண்டடங்கலுண்ட மால். ௬௭

சித்திரமாங்கூடற்றிருவரங்கப்பெருமாள்
மெத்தனவேபஞ்சணைக்குண்மேவியாள்

செங்கையுஞ்சங்குப்பொருந்துந்திங்களுமெங்குந்தயங்குங்
கொங்கையெங்குங்குங்குமந்தங்கும். ௯௮

நாராயணரேராமபத்திரரே
காராம்பசுமேய்த்தக்காளியன்மேல் நீரோமுன்
தொக்கணகதிக்கணத்தொந்திமிதிமிந்திமிதி
நக்கனகவென்றோடினார். ௯௯

உறகில்லைமாமொழியீரொற்றித்தியாகர்
சிறுபிள்ளையோவீண் செருக்சோ-பெருகியதோ
தொக்கணகதிக்கணத்தொந்திமிமிந்திமிதி
நக்கணகவென்றோடினார். ௱

பூமாலைபாமாலைபூண்டசட்டைநாயகமே
மாமாலைமின்கொண்டுவாடியனை-லாமாலை
இந்தாளும்வந்தாளுமின்றுண்மெலிந்தோடி
வந்தாளகந்தாளு வாய். ௱க

மீனக்கொடியானே மின்னையணைவதற்குத்
தானெனவேவந்த தயாபரனே-ஏனையவற்
கென்னபலனென்னநடை யென்னவிடையென்ன விதழ்க்
கன்னலெனுந்துன்னுமிதலா. ௱௨

ஆலமோவேலோ வலைகடலோவம்புயமோ
நீலமோமாரனெடுங்கணையோ சாலச்
சிறுத்தவிடைபருத்தமுலை சிவந்தவிதழ்வெளுத்தநங்கை
கருத்தகுழலொருத்திகடைக் கண். ௱௩

நீரோசிதம்பரனார் நம்மதியோ-தென்புலியூர்
நீரோசுடலைக்கு னித்தனார்-நீரோ
கடத்தகளிற்றினைக்கறுத்துறப்பிடித்திழுத்
தடத்தறுத்துரித்துடுத்தவர். ௱௪

போற்றுவார்வல்வினையைப்போக்குமேபூமலர்க்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமே-சாற்றவிளங்
கந்தந்துங்குஞ்சொற்கந்தம்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால். ௱௫

வன்மத்தைநின்மன தில்வையாதேபாவியேம்
கன்மத்தைநீக்கிகரையேற்றாய் சென்மகதா

ஞமலேயுண் ஞமனுமின் ஞர்மூலேயுண் ஞமனுமண்
ஞமலேயுன் ஞமுலேயாம்மா. ளகு

மேகங்கவிந்ததுபோன் மேலெழுந்தகாலனைக்கண்
டாகந்தளர்ந்துநெஞ்ச மஞ்சாமுன்-மாகடலூர்ப்
பூதநாதவேதகீத புவிதாதாதேடபோதா
மாதுபாககாலாகாலாவா. ளஎ

ஆர்செய்தவஞ்சனையோ வாறுமுகவேலர்மலர்த்
தாரீரதுற்றதென்னகாப்பனையோபாரதினில்
சூதுகற்றசக்களத்தி தோதகத்திடச்சிலேக்குள்
ஓதுசெப்படக்குவித்தையோ. ளஅ

கச்சிக்கச்சாலேக் கடவுளடியைத்துதித்தால்
இச்சிக்கச்சாலேயிளா வின்பமோர்-மெச்சிக்க
நித்தநித்தம்விர்த்தியுற்றந் நிட்களத்தை-பெற்றமுத்தா
பத்தியைச்சித்தத்தளிக்கும்பார். ளகூ

அன்னைவடிவம்மைபோற்றி யக்தரியைச்சிந்தித்தால்
பின்னவடிவம்மையுற்றும் பேதுரு-முன்னைவினைப்
பந்தமுந்தவிர்த்துமேவு சந்தமுந்துவிர்ந்துஞான
சிந்தையுந்தணிந்திடாதோர். ளய

என்றுடுங்காமீசரின்பவடிவைத்துதிக்க
அன்றும்வினைவிட்டகலுமே-குன்றுமல்
தொங்கிட்டதோதறிகிடத்தோதரிகிட
தொங்கிட்டதாதரிகிடதா. ளகக

## திருமுடுகுவெண்பா.

திங்கடும்பைகொன்றையுஞ் சிறந்தணிந்துகொன்றுநின்ற
அங்கியம்பகன்பயந்தவன் பகந்தாதங்கமென்னும்
தேகத்தேனேகுருவர் செய்நட்டோனேபனிரு
வாகுற்றனேபெருமானே. ககஉ

கன்னிமுகநன்னிலவு கன்னலிதழின்னலவு
பன்னுநகைபன்னமுற் பன்னிருகை-மன்னவநின்
முன்னயிலேயென்னவிழி மின்னலிடைபின்றுசடை
அன்னநடையின்னமறிவாய். ககரு

உக்ரகிரியுக்ரகட லுட்கவயவெட்போடியர்
கக்ரகிரிக்கப்பாலுந்தாண்டுமே-விக்ரபவை
வேன்முருகன்கந்தன் வியாசன்குகன்கரிய
மான்மருகனேறுமயில் ககச

கந்தனந்திமிர்ந்தகொங்கை சந்ததம்பசந்ததிங்கு
வானங்கடம்பையுந்தவந்தொழுந்துலந்தைதங்கு
நேசபாசமோ பொல்லது நீநிலாவிலேருலாவ
வாசலாழுலாசவேலவா. ககரு

வாமமேவுசீதரர் சிவாசிராசநேயமோக
காமமாகிசோபமானகாமிவாம-தாமமேவு
கெங்கைபங்கும்பைம்புகொண்டை கொண்டல்வண்டநந்து
செங்கைபங்கயங்கண்வண்டுசேர். ககசு

வெண்பா.

அங்கிபாணூர்தியானவிருமதிக்கும்
தங்குபன்றியையிரண்டுந்தந்திடவே-யெங்கும்
உரைக்குங்காண்மைந்தற் றொருவநடுவுற்ற
துரைக்குத்துரையே நீசொல். ககஎ

அங்கிரியூர்தி ஆடுதித்திறை அரனூர்திஇடபம்வைகாசிபன்றி வ
ராகன்.

இத்தையணையவுருவில்லரின் விடும்போதே
வைத்தசுரையோதடுக்கமாட்டாதே-கொத்துலவும்
அங்கமுகக்காத்துறைசை யம்பலவாணன்புயத்துச்
செங்குவளைத்தாரிணையே தேடு. ககஅ

இத்தையல்நைபோதேவு புஷ்பாணம்தகர் ஆடு.

ஆகசெய்யுள் கூாககு.

கடிகைமுத்துப்புலவர்பாடிய

விருத்தம்.

கராமடியச்சக்கரந்தொட்டெய்தவெங்கடேசரெட்டன்கமலப்பூநீ
கராமடிதொட்டானதும்வரவழைப்பார் காணேனங்கணைமார்சேவ
கராமடிபட்டிடுபேரிவாரிதியாமிவளையெவர் காப்பாரோசகங் (ளே
கராமடிவிட்டிறங்காதே பேதையின்மேற் கணைதொடுத்தான்காமவே

கன்றுதொட்டுக்கனியுகுத்த கீர்த்திவெங்கடேசுரெட்டா! கமலக் கண்ணு, கன்றுதொட்டதத்தனையுங்கைநெகிழ்ந்ததறியாதோகலையுஞ் சோர்ந்த, கன்றுதொட்டரவிக்கையெல்லாங்காமனம்புகிழித்தறுபார் கருத்துந்தானே, கன்றுதொட்டுப்பட்டசிட்டுப்போன்மெலிந்துவாடு வதுங்கண்டிலாயே. உ

வளவனைநேராகவிசைவளர்த்த வெங்கடேசுரெட்டன் மருவாகா ளில், வளவனைமாரையும் வெறுத்தாண் மாரனும்பூங்கணையேவ வரு ந்தியேய, வளவனையே நினைத்திருந்தாண்மடலெழுதவறியாளாய் மரு ங்கிலேது, வளவனையாடையுமிழந்தாள் வண்டிறங்காள் கண்டசெய் திவழுததுவீரே. ௩

பாகப்பாவருமையறியிளசைவெங்கடேசுரெட்டாபகரக்கேண்மோ
பாகப்பாமொழிவிழியாணியேறிவருங்களிற்றைபார்த்தாளாங்கொம்
பாகப்பாமதிக்கவராவென்றாளம்மதியுதிக்கப்பயந்தேயீசன்
பாகப்பாவையினுகமானாள்யானின்றெடுத்தபாவைதானே. ச

கருக்கோட்டையாளும்வெங்கடேசுரெட்டமேந்த்ரனென்னைக் க லந்தபோகக், கருக்கோட்டையானுமடிசகியேமுன்போலின்னுங்காம னுந்த, கருக்கோட்டைநிகர்வீசைமுறுக்கிவரக்காணிலவன்கங்குன்மா வைக், கருக்கோட்டையம்பினையும் பறிவெருட்டுதலைவாசல் கடக்கத் தானே. ரு

சந்தானமேநிகர்குமாரமுத்துசாமிசகோதரவான்பொன்னே
சந்தானமேருவெனநிறைந்தகுமாரெட்டனைத்தழுவாவாயா
சந்தானமேதரிக்கக்கூடுதிலேயவன்மருங்கிற்சகியேநீபோம்
சந்தானமேலேறியுபரிசெய்தாற்றீருமடிதனக்குத்தானே. சு

திருமாலையம்புதொட்டசிலைமாரனம்புவிக்குட்டிடவான்முல்லைத்
திருமாலையம்புபஞ்சூழ்குமாரவெட்டமனைச்சேரச்செய்தானுள்ள
திருமாலையந்தெளிந்துசுபசோபனம்பொருந்திச்சிவனைநேசித்
திருமாலையந்தோறும்போயுனைநினைத்துதெரிசிப்பேன்றிருமின்னாளே

மாதங்கங்கோடிநிலவறைக்குளொளித்தானுமந்தவழியேகம்ப
மாதங்கங்கோடிவிடச்சென்றடிக்குமுயிர்தரிக்குமோசிவாரா
மாதங்கங்கோடிகலுங்கடலொலிக்கென்செய்வனினிவந்துசேர்வாய்
மாதங்கங்கோடிதமிழ்க்குதவும்வசுவப்பமதிமந்திரிநீயே. அ

தமிட்டாரா ணுவம்பெருக்கிவந்தெதிர்த்தவேண்முரசுசத்தங்காது
தமிட்டாராவெனப்புலம்புஞ்சிறுபேதைவிரகமதுதணியவேமுத்
தமிட்டாராமதிமுகத்தின்முகமழுந்தவேபுணரச்சமயம்வாணர்
தமிட்டராதரந்தெரியுமெங்களெட்டேந்திரமகிபாதமிழரேறே. ௯

பரத்துவசத்துருத்தாயர்பாயன்மிசைப்பூவைமுலைப்பணைப்பிலேம
கரத்துவசப்பாவிமலர்தூற்றுவர்நாணுற்றுவனேகாட்டிலேழு (ற்
மரத்துவசத்தொருகணையாலெய்தவெங்கடேசுரெட்டன்மருவாநாளி
சரத்துவசக்குரங்கெனவேதனித்திருந்துமுடியாதுசாற்றினேனே. ௰

நிலமாதுதிலகனெங்களிளமைவெங்கடேசுரெட்டநின்னைப்பார்த்த,பலமாதுவதனமும்பொற்பசலைகொண்டாய்மகளேபெண்படையாமேகங்,குலமாதுரங்கமென்றகிள்ளையின்மேன்மாரன்வருங்குறியைப்பார்த்துச்சொலமாது குலுங்கையிலேதொடுவளையுந்தோற்றிநின்றதணிவுதானே. ௧௧

கலக்கடமானத்தொனியைமுழக்கமனமலைந்தடையார்கால்சாய்ந்தோடப், பெலக்கடமாநகக்களிற்றை நடத்தும்வெங்கடேசுரெட்டன பிணையலீந்தான், சிலக்கடமாமரக்குயிலையொடுக்குகடற் றொனியடக்குதென்றற்றேரை, விலக்கடமாமதப்பயலேதலைக்கடைவாசலைக்ககடக்கவெருட்டுவேனே. ௧௨

திருக்கரங்கம்வகுத்தவயில்செலுத்துபடையான்கமலச் சேக்கையாமா, தருக்கரங்கம்பயிற்றுதுரையிளசைவெங்கடேசுரெட்டன்றழுவாநாளில், அருக்கரங்கம்புரந்திடவுமம்புலியும்வெம்புலியோலாச்சேகண்டாய், உருக்கரங்கம்பரந்திடைக்க வுருச்காமம்பிதந்தானென்றுருகுவாளே. ௧௩

பொரக்கலக்கமுற்றவருக்கிரங்கும் வெங்கடேசுரெட்டன்புயங்கண்டாண்மேல், உரக்கலக்கமற்றகணை மதன்விடுத்தாலென்ன செய்வாளோகோகிண்ணச், சரக்கலக்கம் மியன்கடைந்த செப்பலத்தானேதிரண்டதனத்தினூடே, வரக்கலக்கண்ணீருகுத்தாள் வண்டினங்காள் கண்டசெய்தி வழுத்துவீரே. ௧௪

இத்தரமே சத்துணிவாரென்சகிமார் வஞ்சகிமாரென்றால்வேளம், புத்தரமேவத்தனமே பண்படுமே யென்புகல்வேன் புலவோர்க்கேபோ, தத்தரமேகத்திணையாய்த்தழைத்தவெங்கடேசுரெட்டன் றழுவிணூலே, துத்தரமேதித்தனையு முன்னாலே விளைந்ததன்றோ வொருநிலாவே. ௫௧

கொட்டமிடு மருவலர்க ளிட்டகோற் கட்டைக ளனைத்துங்கொழிதூளாக, வட்டமிடும்பரிநகுலனெட்டமராசேந்த்ரனென்னைமாருவ

ருடங்கலாமதிதனமானனமாஞ்சேர்வாய்மருவார்கூடியுத்தம்தொடங்கலாற்பவுரிகொண்ட தருமவெங்கடேசுரெட்டசுகுணமாலே. ௯௧

திருவிருக்குமணிமார்ப னிளசைவெங்கடேசுரெட்ட நீரனென்னை மருவிருக்குமணிகணவனெனச்சேராநாண்மோசமயக்கத்தான்மேல், விருவிருக்குமணிவளையுமேகலையுஞ்சேர்ந்திடுமேன் மேலுந்தேன்பால், அருவிருக்குமணியலுங்காந்தந்தரளமெனவருங்கண்ணருவிதானே. ௯௨

குருவடியைவணங்கும்வெங்கடேசுரெட்டமேந்திரன்முன் கூசாமற்போய், இருவடிவெல்லாம்பாருவீணையைமீட்டனுராக மிசைத்தனேகந், தருவடிதெள்ளமுதுநவரசமொழுகும் படிபடிசவ்வாதுபூசி, மருவடிபெண்ணேயினிமேன்மகராசியாய்ச்சுகித்துவாழ்குவாயே.

கன்னியுன்றன்மேற்பிரியமையாமற்றோரையிவள்கண்டான்மூன்று, மன்னர்தனிலேயொருவன் பெயரையடிக்கடிவழுத்துவாளனத்தைத், தென்னவன்றன்மாலையென்றுண்மதியையதிறகடையெழுத்தாய்த்தீர்த்தாளோயா, நன்னயகுணாகர குமாரவெட்டராஜேந்திர நளினமானே. ௯௪

பொன்னிலங்கைராவணனைவென்றிவிடையாட்களகம்புளகக்கொங்கை, தென்னைநேராயிருக்குஞ்சொல்வார்த்தைகண்டுபயந்தேன்மகாவிற், பன்னிவடிவூர்கணிகம்பம்பரம்பையாகுமிவட் பரிந்துசேர்வாய், சொன்னமொழிதவறாதகுமாரவெட்டராஜேந்த்ரசுகுணமாலே. ௯௫

மெலக்கணக்காப் பொருந்துவோமெனவேளை மணங்குறிக்கும் வேளைபார்த்து, நிலக்கணக்காமனம்புகுந்துந்தாகப் பாயவெனமேனிரைத்தாளெண்ணிச், சொலக்கணக்காவழக்காகநானறிந்தவளாதெரிந்தவளாதுயரமெல்லாம், இலக்கணக்காரிகைதேர்ந்த குமாரவொட்டபூபதிபாலியம்புவாயே. ௯௬

அரைத்தசந்தனம்பொருந்தா ளமளியின்மேற்கண்டுயிலா ளரக்கன்மௌலி, நிரைத்தசந்தனம்பாலேதுடைத்தமருகப்பன்வரநினையாளன்னை, இரைத்தசந்தனம்பசலைக்காற்றும்மென்றோளபரவை யிடத்திலேசென், றுரைத்தசந்தனம்பாருக்குள்ளிலையோதிவாகரனொளிக்கின்றாரே. ௯௭

அரமியஞ்சேர்ந்திளவாழைக்குருத்தைவிரித்ததிற்கிடத்தவதுவுஞ்சூடா, கரமியங்கொள்ளாதெழுந்துதிரையில்விழுந்தாளதனைக்கண்

டுதாய்மார்,சரமியங்குசோலையோ வெனமூக்கிற்கையைவைத்தார்சு த்யவாய்மைத்,திரமியங்கும்கிருவைவமருதப்பனுக்கிச் செய்திசொல்லி த்தெளிவிப்பீரே. ௩௯

திரிந்தலரிகலையடக்குங்கிருவைவமருதப்பசெயசிங்கமென்னைப்
பொருந்தலரிதாயிருந்தாற்பூத்தானஞ்செய்யாரோபோர்வேளையோ
வருந்தலரிகுளையலரிமாவலரிபூவலரிமாதர்கீழ்பால்
இருந்தலரிவாராமுன்னிரவிதனின்மதியம்வந்தாலென்செய்வேனே.

வரைத்தூற்றநெடுங்காட்டு வழிபுலவோரலையாமல் வளர்த்ததா ய்போல், உரைத்தூற்றுமலைபுரந்த துங்கமருதப்பனொருநாளுஞ்சே ரான், கரைத்தூற்றுநறும்பாலு மன்னமும்வெண்டேனதனைக்கண்ட லோமா, றரைத்தூற்றுமெனவிடுத்துத் தாய்க்கிழவிகூடநின்றுசலஞ் செய்தாளே. ௪௰

செருத்தாக்குமதப் புலியேதிருமலைவேலப்பாநின்செவ்வாயூறல், அருத்தாக்கு மரிக்கமுதங் கசப்பாகுமணைவேண்டாளேயோவாழைக், குருத்தாக்குமதைவிரித்துக் கிடத்தினுஞ்சூடெனவெழுந்து கொள் வாள்காமக், கருத்தாக்குமுதநாதன் கங்குல்வரக்கண்டுமுனைக் கணடி லாளே. ௪௧

எடுத்துவரிமுறத்தினிலிட்டிழைத்தகுறிபலித்ததென்ன வெண்ணி த்தந்த, வடுத்தவரிதழுக்கேறுமெனக்கனிவாய் மடுத்துருஞ்சுமாதை ப்பாடு, படுத்துவரிம்மாதரென்றார்சொல்பவரார்வலத்திலங்கைப் பதி மேற்சென்று, கடுத்துவரிதனைப்பொருத திருமலைவேலப்பனிதைக்க ண்டிலானே. ௪௨

பொருந்தமரங்கசசரத்துக்கல்லாமலம்புலிக்கும் புரம்போவென் ன,இருந்தமரஞ்சிதமொழியாளிப்பாடுபடமுறையோவெமதூதாணி கருந்தமருமெனையளியேயென்னளியேயாச்சியர்தங்கலையைவாரிக், கு ருந்தமரங்குழைத்தேறுந்திருமலைவேலப்பனிடங்கூறுவாயே. ௪௩

திருகலகுவாய்ப்பறந்துசிறகொடுக்கியிருந்துகடற்சேலைவாரிக், கு ருகலகுவளையொதுக்குங் கூடலில்வாழ்திருமலைமேல்கொளுவினீபோ ய், இருகலகுகலைமொழியாளித்தனைமாலானுளென் றிசைத்தேயன்ன ம், பருகலகுவளைத்தாரை யாகிலுங்கேட்டாளெனச்சோ பனஞ்சொ ன்மானே. ௪௪

சருக்கரையமுதுகனிதேன்கலந்த தமிழ்முனிநிகர்வான்றறியார் பெண்டர்,கருக்கரையமுனிவிசயகிரிவேளைச்சின்னேபகன,வானுசைப்

பெருக்கரையவளவலவென்றலேக்கேறிமயக்கினதுபித்தமூர்ச்சைத், திருக்கரையவுடதமெடுகரைத்துமெல்லப் புகட்டமுதுசெலுத்தென்றுளே.. சு௫

பொருவதற்குச் சிலேக்காமன் வருமுனமே மதுரையிற்போய்ப் பொறிவண்டீர்காள், செருவதற்குப்புகழ்விசயன்றிருமலேநரேந்த்ரன் வரச்செய்வீரிங்கு, வருவதற்குத்தாமதித்தான்மாலேயொன்றுகேளுமந்தமாலேதானுந், தருவதற்குமதியானேன் மையலேயாயினுந்திரும்பத் தரச்செய்வீரே. சுசு

தெந்தனம்பேசுங்கொழுநற்கயல்கொள்ளுஞ்சேல்விழியீர்திரண்டமேரு, பந்தனம்போற்றனமுடையீ ரின்சொலுரையானுரைக்கும்படிநீர்கேண்மின், எந்தனஞ்சேராதவெங்கடேசுரெட்டன்தனையணிழக்கவெழுந்துபோன, சந்தனஞ்சும்மாவந்தாற்பூசலாமெனக்குமதன்றனக்குந்தானே. சுஎ

விருத்தப்பாகலித்துறையும்வெண்பாவுங் கொச்சகமும்விரிவாய்ச்சொல்லக், கருத்தப்பாவெனதுமகள்காமனரவிந்தமலர்க்கணையாலெஞ்சில், இருத்தப்பாலனம்வெருத்தாளிணையுமவள்சகிதனையுமேசுருணி, வருத்தப்பாத் திரமலவேயணைந்திடுவாய் திருமலேவேல் வரிசைமாலே. சுஅ

வீறுதரமேவலரைவென்ற வெங்கடேசுரெட்டன் மேவவேண்டி, நூறுதரமாகவண்டைத்தூதுவிட்டாளனமருந்தாளுந்தாள்கண்ணீர் ஆறுதரமேற்பாயவனங்கன்பூவாளிமுலேயாணையூடே, ஏறுதரமாச்செவியைதுளேக்குதென்றே யோலமிட்டாளெனச்சொல்மாதே.

இக்கோடிவளேப்பனென விருகோடியிளம்பிறைக்கீர் வெழுந்துவானில், முக்கோடிவளேப்பமதனற்கோடிகணைதொடுத்தான்முன்னிற்பாவோ, கொக்கோடியிரையெடுக்கு மிளசைநகர்செழிக்கவருங்குமுணுவெட்டுத், திக்கோடிபுகழ்படர்ந்தவடமலேயா கடமலேமுன்சென்றமாலே. ௫௦

கெஞ்சுமாதங்கமுகம்பார்த்திருக்குந்திருமலேவேர்கிரியிஞனீர்
அஞ்சுமாதஞ்சுமந்துபெற்றபலன்கிடைத்ததெனக்காறுமாதங்
கஞ்சுமாதந்ததனைப்பெற்றிழந்தோர்போற்றிரிந்துகலங்குதேழை
நெஞ்சுமாதம்பனுக்குநேர்ந்தொருவன்பின்றொடர்ந்து நோகின்றுளே

திடக்குவடக்கடக்களிற்றுன்கம்பளவல்லக்கர்குலன்தெற்குப்பூர்வகுடக்குவடகடற்கரசன்மலே யாண்டிராசன்முல்லேகொடுவந்துன்னே

மடக்குவடக்கனசெய்வண்மதப்பயலேயுனக்கினியொவ்வாதுபேரி அடக்குவடக்கயமீதின் சடக்குநடக்காதினிமே லறிந்துபாரே. ருஉ

இலக்காரமணியாள்கண்ணிமைபொருந்தாண் மன்மதனெய்த புண்ணில், கலக்காரம்பெய்ததெனக்கதிர்மதியுஞ்சுழன்றெரிப்பக்கன ன்றுளென்றே, சொல்க்காரம்மியமாகவிலக்கணநாற்கவிபுலமைத்தொ ண் ஞானோர்க்குப்,பலக்காரமருள்விசயகிரிவேலாஞ்சின்னோபதிச்செ வ்வேட்கே. ருஙு

இப்பளப்பாறையிற் படுக்கச் சொல்லுதீர்செடிமறைவோ விலை லச்சூழ, உப்பளப்பாறையுமாச்சுக் கண்டு ...றுவெகுகோபி யும்மைக் கண்டால், கொப்பளப்பார்க்கினும்பார்ப்பான்பேனைப்பார்க்கினும் பா ர்ப்பன்குணமில்லாத், தப்பளப்பாவிருக்குதையா கினைவமருதப்பம ன்னுதமிழ்க்கோமானே. ருச

கட்டளைக் கலிப்பா.

ஆரசந்திரணத்துமண்டுண் ... ருவருத்துவிருவிருப்பாகிபே (யா ஊரசந்திரவிற்பாதிசென்று ... றங்கிலாண்மகட்கென்செய்குவேனே தீரசந்திரகாவியிடக்கயாசிங்கவுத்தண்டதூர்த்தண்டனேரண வீரசந்திரகிரிநகராதிபாவெங்கடேசுரவெட்டமராசனே. ருரு

தடக்கயத்தலரெல்லா மெடுத்துவேள்சமரச்சோலையில், வந்தா னெனவதை அடக்கயத்தையுந்தாயர்கொன்றுல்வெறிபாட்டுத்தா னி வளாசையைத்தீர்க்குமா, கடக்கயத்தடையார் புலிகைக்கொண்டுகெட் டுஞ்சந்திரகாவியிடாலெனும்,இடக்கயத்தன்னிலைநாட்டுமாமண்டலே சுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ருசு

கலக்கைவாளியையார்தடுப்பார்தென்றற் காற்றுக்காற்றவளோ மடவார்வசை,சொலக்கைவாய்பொத்திமெய்சேர்ந்திருக்கவுந்தோகை மோகந் தொலையாதுபாரைய உலக்கைவாரியடிக்குங் கடாசலத்துந் யனேகனே யொன்றின்மராமரத், திலக்கைவாலியைப் பார்த்தெய்த மாமண்டலேசுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. ருஎ

குரங்கிக்காய்ந்திளந்தென்றலுமன்றிலுங் கோபங்கொண்டதனு ன்மாதரேதுசெய், வரங்கிக்காபொரவாவென்றழைப்பர்கள் மறுத்து ப்பேசவும்வாயிலைமாங்குயில், அரங்கிக்காவென் றிருந்திசைபாடவு மாற்றுமோ மயலாற்றுதபேதைக்கே, இரங்கிக்காவிக்ரமார்க்காசெக மண்டலேசுரர் வெங்கடேசுரெட்டேந்த்ரனே. ருஅ

தானவாரண மாமுலையாளுக்குத்தா னவாவெண்டளப்பத்திலைமையல் ஆனவாறுமறியாளிவள்கண்ணீரானவாறுமறியார்மின்னுரந்தோ

வானவாகண்டலாமண்டலாதிபாவானவாவளவாமதுராபுரி
மீனவாவிசயாமீனகேதனுவெங்கடேசுரவெட்டமராசனே. ௫௯

துரையத்தந்திகலைமுலைமேல்வைத்துத்தோயுநாளெந்தநாளோ விர
கத்தை, விரையத்தந்திவளவுஞ்செய்தாலிந்தமெல்லியற்கென்னசொ
ல்லியான்தேற்றுவேன், தரையத்தந்திவரையெந்துமேகம்போற் றணி
ந்தகொம்புபடத்தன்னிழலைப்பாய்ந், திரையத்தந்திநடாத்தியமாமண்
டலேசுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௬௰

அந்திராமனமுன்மேலென்றுற்பகலடங்குமோமையலாணுனுமை
யநீ, வந்திராமனம்பேதைக்குவேளம்புவச்சிராயுதம்போல்வந்துதைக்
குமே, முந்திராமனம்பாலுண்டவாரிதிமுழக்கமேசலியாளேயிளசை
வாழ், இந்திராமனுவேந்தாசெகமண்டலேசுராவெங்கடேசுரெட்டேந்
த்ரனே. ௬௧

கொடிக்கத்தத்தும்மலையு மடக்கிநெற்குறியும் பார்த்துக்குணம்
பார்த்துப்பாரத்திந்தப், படிக்கத்தத்துவனேசோரச்சோருமென்பால
னத்துக்குன்பாலனம்வேண்டுங்காண், அடிக்கத்ததுகளேயும்பரப்பி
ழுதண்டகூடமுகடும்படரென, வெடிக்கத்தத்தும்பரியாதிருமலைவே
லுராஜவிவேககுலேசனே. ௬௨

பூசத்தந்திமுலையும்புண்ணுக்கினீர்போதும்போதும் புழுகும்சவ்
வாதுமா, காசத்தந்திமதியுஞ்சுடுமென்ற காமப்பேய்கொண்ட கள்ளி
க்கென்சொல்லுவேன், மாசத்தந்திசையெல்லா வதிரவேமந்தரத்தை
மருப்பிட்டிடத்தள்ளி, வீசத்தந்திநடாத்துந்திருமலைவேலுராசவிவே
ககுலேசனே. ௬௩

ஓரராவுண்டுமிழுமதிப்பிள்ளையூரராவுறங்காதபெண்பிள்ளைமால்,
கூரராவுகணைகடொட்டான்மதன் கும்பராசிகொழிப்பதுமுத்தமாம்,
சூரராவிதுடிப்பத்துடிப்பத் திண்டுணைக்கராசலந்துண்டிக்கக்கண்டிக்
கும், வீரராகராவதிருமலைவேலுராசவிவேககுலேசனே. ௬௪

சங்கராவையகமும் பழிக்குமந்தாயர் தூற்றிலெனும்பேதைநெ
யமுடை, அங்கராவையழைக்குங் கழைக்குரலனங்கவேளையழைக்கு
மென்றெங்குமால், கங்கராவையடர்வதுபோலொருகைக்கடாசலங்கா
ல்சாய்த்தாக்கிய, வெங்கராவையிடறுந்திருமலை வேலுராசவிவேகக்கு
லேசனே. ௬௫

சந்தனத்தைவிடுக்குமுன்னே வில்வசந்தனத்தை யலைப்பகைத்
தெய்வன, சந்தனத்தைத்துளைக்குதுபாலுங்கசந்தனத்தையுமப்படிச்

செய்ததே, சந்தனத்தையணிதிண்புயாசலத்தாருவேதண்டமிழ்க்கவிஞோர்தவம், சந்தனத்தைத்துசங்கட்டியிந்தருடந்த்ரனே முத்துமந்தரிந்ரேந்தரனே. ௬௬

பூரிக்குஞ்சரமாவாராமர்கொங்கைபூவைதாங்கப்பொருதத்தொனிக்கடல், பேரிக்குஞ்சரபம்போலுந் தென்றற்கும்பெருமயக்குற்றுருகக்கண்டாங்குவேள், நேரிக்குஞ்சரமுங்கொண்டுவந்து போர்நிறைந்திட்டானினிநீவந்துசேர்மத,மாரிக்குஞ்சரமீதாகுமிந்திராவன்யராயவசுவப்பதூயனே. ௬௭

நகத்துவாரயிலாங்கண்ணிகொங்கை கணையவாரறத்தைத்தவழித்தென்றல், புகத்துவாரஞ்செய்தாலநதவேளம்பைப்பொருங்கவாரம்புயக்கண்ணிதந்துசேர், சகத்துவாரஞ்செயுந் தென்னிளசைராசத்துவாரத்துக்கோர் மந்த்ரியாய்வந்த மகத்துவாரஞ்சிதவசனு நரவாகனுநம்வசுவப்பதீரனே. ௬௮

கருத்தவாவிலையாள்கரனுய்வருங் காமனுலுடல்வாடா தின்றின்பத்தை, அருத்தவாவிலையாயினிப்பேதையோ வாவிதாங்கரிதாகுமையாகண்பார், திருத்தவாவிலையாத்தன்னைநல்கிய செந்தமிழ்க்குத்தியாகாநிணப்புலால், மருத்தவாவிலையாரயில்வேற்கராவன்யராயவசுவப்பதீரனே ௬௯

நேற்றிருந்தநிலவுமந்நேரமென்னினைவிருந்த நினைப்புமிளந்தென்றற், காற்றிருந்தசுகமுமுன்னுனையென் கருத்திருந்ததும்யாதென்றுசொல்லுவேன், சேற்றிருந்தசெந்தாமரைப்பூவின்மேற்றிருவிருந்தது போலச்சிம்மாசனம், வீற்றிருந்ததுரையே திருமலைவேலுராசவிவேககுலேசனே எ௰

நிருதராகவனந்தந்தகங்குலிந்நேரத்தேமதனேறியவூர்திமேல், வருதராகவனந்தமங்கையைமருவுவாய்மலர்மஞ்சத்தின்மீதிலே,விருதராகவனந்தங்களஞ்செறிவேந்தன் ராவணன்சென்னிபத்தீர்ந்திடப், பொருதராகவனந்தந்தகுஞ்செய பூபனேவெங்கடேசுரெட் டேந்த்ரனே. எக

தடக்கடக்கயலோவிடமோவிழி தாமரைக்குமிழோசிமிழோதிரண்,டிடக்கடக்குடமர்முலைமாமதனெய்யவாடியுருகுதல்பாரையா, உடக்கீட்க்குக்ரமாங்கும்பகன்னனை யுசிதவிந்திரசித்தைச் செயங்கொண்ட, திடக்கடக்கயங்காத்தமனேகராசிதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. எஉ

உரைக்கத்தத்துவப்பொருளாகிய வொருவன்கைவில்லுக்கொப்பா மிவள்கொங்கை, வரைக்கத்தத்துவ சக்கரன்போரிது மட்டுண்டோ வத்தமூட்டுதல்பார்க்கிலாய், தரைக்கத்தத்துவளையுமெழுப்பிப்பூச்ச க்ரவாளத்தைத்தாக்கிக்கடல்கடந், திரைக்கத்தத்துவயப்பரியாமண்ட லேசராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. எஙு

விகடத்தந்திமதிகாயமார வேள்விடுத்தவத்திரந்தைத்தூடுருவியெ ன்மகடத்தந்திவலையாருங் கட்புனல்வடித்துத்தந் திசைவெறுப்பாவ லோ, சகடத்தந்திப்பரித்திரள்கூட்டியசத்துரத்திரட்டைக்குத்திடத் திரும், புகடத்தந்திக்குதயா செயதராபூதராவெங்கடேசுரெட்டேந்த் ரனே. எச

பருதியாகமகமாகமூர்மதிபணையெக்காளம்வெடியாமலரம்பு, விரு தியாகமகன்வச்ரமாமிவைமின்பொறுத்திடுமோசேர்திருவருட்கொரு தியாகமகவாசகங்கற்றோற்குறபணுவெங்கள் குப்பணவேண்மைந்தா, வருதியாகமகமேருநேர்செல்வவன்ராயவசுவப்பதாயனே. எரு

பண்ணப்பம்பரமன்னமுணுமலே பாற்றுப்பம்பரஞ்சோர்ந்தும்யல் கொடு, வண்ணப்பமபரமாங்குயமீறிமேவவிரும்பம்பரக்கண்ணினருட் சேரையா, தண்ணப்பம்பரவைகூழ்பதியரசருங்கப்பம்பரந்தேகொடு, வந்தடி, விண்ணப்பம்பரமென்றே தொழுஞ்செகவீரரா மகுமாரவெ ட்டேந்த்ரனே. எசு

உன்னக்காவடிப்பூப்பரியாண் டியும்புகாள்வடிபாலையருந்தென, எ ன்னக்காவடி வேண்டாமென்றோதிறுமேல்துக் காவடிவங்காமற்சேரு வாய், அன்னக்காவடியாற் கமுகாசலததாதிக்காவடிமைத்திறம்பூண்டு க, வின்னக்காவடிவேலாவென்றுஞ்செகவீரராமகுமார வெட்டேந்த் ரனே. எஎ

ஆரிச்சந்தநயம் படிப்பார்மத ஞலச்சந்தனக் குண்டாகியேபினும், தேரிச்சந்தனவே சொலுவாயெனச் செப்பிச்சந்தநங்கைதனைச் சே ருவாய், பூரிச்சந்தனம் விம்மியமாதரைப்புலப்பச் சந்தனதாகவுளத் தில்லை, வேரிச்சந்தன மார்பகத்தாய்செக வீரராமகுமார வெட்டே ந்த்ரனே. எஅ

சம்புதைக்குங்கருங்காலன் போற்கங்குல்சாரவேலை யொலிக்குப்ப யந்துநோக், கம்புதைக்குமென்யெண்பிள்ளை மேலினிக்காமராசனெ டுத்துத்தொடுத்திடும், அம்புதைக்குமுன்னேயணைந்தா லிவள்ரவிதக் குமிப்பூவிலிருக்குநம், புப்புதைக்குணிதியெனவாய்த்தவெம்பண்ணி யா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. எகூ

## கட்டளைக் கலித்துறை.

மாதானைவேந்தர்க்குமேலோன் பெரியசுவாமியையென்
மாதானைமெல்வரக்கண்டனள் கண்மயங்கியுஞ்சம்
மாதானைபோவரக்காணேனென வாதுவளவுக்குளம்
மாதானைபோச்சென்றுவந்தாளினிச்சொல்லவாயில்லையே.

அச்சங்கபாணிபதம்போற்றிச் செந்தமிழ்க்கன்பியற்றி
அச்சங்கமேவுந்திருமலைராயனைந்திலனேன்
அச்சங்கலாமதிக்கென்றிருந்தேனெந்தனக்கைதநால்
அச்சங்கமாகத்துளைத்தான்மதப்பயலம்புகொண்டே.

அத்திக்குதையன்றிருமலைவேலப்பனன்புசொல்ல
இத்திக்குதையன்கருத்தென்னவோமதிசென்றுகுணக்
குத்திக்குதையன்கதிர்காட்டுமோவிருகொங்கையின்மேல
தத்திக்குதையமட்டேறுதுகாமன்சரங்கள்வந்தே.

கலவளைக்குண்டிவள்கைவளைபோனதுங்காரிகையார்
சொல்வளைக்குந்தந்தரம்போலத்தைப்பதுஞ்சொல்பவரார்
கல்வளைக்குஞ்சரியாஞ்செவிச்சானகிகாண்புனைய
மெய்வளைக்குஞ்சிலையானே திருமலைவேலப்பனே.

முடிக்குமருப்புக்கிசையாப்பைங்கூந்தலம்மூரிமதன்
பிடிக்குமருப்புக்கிலக்கல்லவேயெதிர்பேசுமொன்னார்
குடிக்குமருப்புச்சுடவேற்றுவித்துக்கொடிமதில்மாய்த்
திடிக்குமருப்புக்களிற்றுனிளசையிலெட்டமனே.

நடக்கத்தளிச்சிறிகாண்பூட்டிமாரசரந்தனமு
கடக்கத்தளித்தலைதோற்றுட்குந்தோற்றுகடாசலத்தை
நடக்கத்தளிக்குட்பதைத்துக்கிடக்குமொன்னார்கண்முறை
இடக்கத்தளிக்கப்பொரும்வெங்கடேசுரெட்டேந்திரனே.

செல்லுக்குநல்லிக்குநேரோதிமங்கலச்சித்தசநேவள்
வல்லிக்கிணையில்லைவல்லிக்கிலைதந்தமாதனஞ்சொன்
முல்லைக்குமானுக்குமாந்தளிருக்குமிம்மூன்றினுக்கும்
பல்லுக்குமேல்வருமன்றைவெட்டேந்திரபாண்டியனே.

(முல்லை-பல்) (மான்-கண்) மாந்தளிர்-மேனி.)

கவளம்வளைக்குக்களவுகெய்தோன்வஞ்சகப்பிணைவேள்
துவளவளைக்குஞ்சிலையான்மருந்தப்பதுங்கண்வுரான்

தவளவனைக்குத்தடையிடுவாரில்லைசந்தசொல்ல
அவளவனைக்கும்பிடப்படுமோதண்ணளிக்குலமே ௮௭

இந்திரச்செல்வன்றுரைபூவிக்காத்தப் பளிங்கிவள்பால்
வந்திலனின்னமும்வேள் கணைபால்கண்வளர்சசிமு
கந்திரள்சானுவில்வைத்தகுமரகர்க்கடக
சந்திரயோகங்களாமடவீர்கனி தந்திடமே. ௮௮

வெஞ்சத்தமரந்துளைக்குந் திருமலைவேனுவந்தால்
வஞ்சத்தமரம்பனுக்குமஞ்சேனன்னைவாய்க்குமஞ்சேன்
கெஞ்சத்தம்ரங்கசப்போரைவெல்லுவனீயுமென்னை
அஞ்சத்தமரஞ்செய்வாயோ வலைசெறியம்பரமே. ௮௯

வெண்பா.

புத்தியின்பேர்க்குள்ளாய்வேள்பொற்றொடிக்கிமுன்புவந்து
சத்யப்பேர்மீதுசரந்தொடுத்தான்-நித்தம்
குருபதம்பராவுமனுகூலாபொன்மாது
மருவும்வெங்கடேசுரெட்டமா. ௯௦

புத்தி-மதி-சந்திரன்-சத்தியம்-மெய்-தேகம்.

அத்திதனையூர்ப்பசுப்பேராக்கிச்சினந்தடித்துச்
சித்தனென்மேற்சமரஞ்செய்தானை-முத்தமிழ்க்கெந்
நாளும்பசுங்கனகநல்கிமுதல்வள்ளலென
வாழும்வெங்கடேசுரெட்டமா. ௯௧

அத்தி-சமுத்திரம்-ஊர்ப்பசு-நகரா முரசு.

மன்னன்வெங்கடேசுரெட்டமாநிதிபாற்றூதுரைத்துக்
கன்னிதார்வாங்கிவரக்காண்கிலனே-மின்னுபசும்
சொன்னவடிவாயிலங்குந்தோகைரதிகணவன்
கன்னல்வளைத்தெய்யுங்கணை. ௯௨

கனை-காண்கிலேன்.

தண்ணமுதபாஷிதவிஸ்தாரன்வெங்கடேசுரெட்ட
புண்ணியவான்வந்துபுணராநாள்-உன்னமுது
மாமனத்தையேகுமட்டவம்புவிட்டாள்பால்கொடுத்த
வீமனதைதபெரெடுத்தாள்மின். ௯௩

வம்பு-கச்சு அது கசத்தல் வீமன் பிரமன் அவன் அத்தை:சத்தி
அதி வாந்தி.

தண்டமிழ்தேருத்தமத யாளுவெங்கடேசுரெட்ட
மண்டலிகன்கூடிமருவாநாள்-செண்டு
முலைமானுட்கின்னமுதுகொடுக்கவாட்டுத்
தலையானுண்மான்மயக்கத்தால். ௬௪

ஆட்டுத்தலைவேண்டாமென்று-அசைக்கிறதலை.

தெள்ளுதமிழுக்கருடியாகிவெங்கடேசுரெட்ட
வள்ளன்மேலாசைகொண்டமானுண்மேல்-துள்ளும்
கயவாளிவேட்குவரி கைமுரசனுற்பங்
கயவாளியேவானேகாண். ௬௫

கயவாளி-திசைச்சொல்-அதற்கு-இழிந்தோனென்னும்பொருள்.

கொங்கைகும்பகோனமரிகூந்தனுமோகூடலா
தங்கும்விழியம்பாசமுத்திரமா-பைங்கனக
மேருவெங்கடேசுரெட்டமெந்த்ராவிவள்சசிபுற்
ருருடையானூரிடையதாம். ௬௬

கொங்கை-கும்பவட்டம்-கூந்தல்கூடு-அம்புல்-தார்-பணிமாலைஊர்-வஞ்சு-அது-ஓர்கொடி.

மெய்யன்வெங்கடேசுரெட்டவேந்தன்பாற்சந்துரைத்துத்
தையல்கண்ணிவாங்கித்தரவிலையே-கையதினுற்
றுண்டித்தான்மென்றுமென்றுதுப்பினுன்மாரணையும்
கண்டித்தாளச்சமற்றுன்காண். ௬௭

விலை-கருப்புவில்லை.

பூத்தூக்கி-ஆதிசேடன்-உண்டவன் அவனுலுண்ணப்பட்டகாற்று அதையேறிக்கொண்டவன் மன்மதன்-மரத்தூககி-இலக்குமியைத்தாங்குந்தாமரை.

நற்றமிழ்வாணர்க்குநிதிநல்கும்வெங்கடேசுரெட்ட
கொற்றவன்றுரன்றியரன்கோயிலின்முன்-உற்றகொடிக்
காலைவிட்டப்பாலேநீங்காததுமுன்றுண்டபட
வேலையிட்டதேது விடு. ௬௮

அரன்-கொடிகால்-பரமசிவன்-துசஸ்தம்பம்- அதை-நீங்காதது இடபம் அதன்முன்னிராசிமேடம் அது-ஆடு.

கன்னன்வெங்கடேசுரெட்டகாண்டிபன்மேன்மாமோக
சன்னதங்கொண்டாட்குமுல்லைத்தாரல்லாதென்னசெய்தீர்

தையன்முன் பூமுன்னட்சரமுற்றதைத்தெரியச்
செய்யும்பேரென்னசெயும். க00

தையலென்னுஞ்சொல்லுக்குமுன் பூமுன் அட்சரப்பு அதுஉற்ற அபுதையல் அதைக்கட்டுவது மை ஆடு.

தாண்டுபரிதூண்டுதிடசாலிவெங்கடேசுரெட்ட
பாண்டியன்மேலாசைகொண்டபைங்கொடியைவேண்டியே
ஒன்றிரண்டாய்போகவொருத்தனையிங்கேன்கொணர்ந்தீர்
யின்றுயர்க்கென்செய்யும்விடும். (ஒரு ஆடு)க0க

கல்விகரைகண்டதும்பன் கம்பன்வெங்கடேசுரெட்ட
வில்விசயன்றென்னிளசைவெற்பிடத்திற்சொல்வதென
கட்செவியுமம்புலியுங்கங்கையுமோர்வெம்புலியிற்
பட்சமுறவைத்தார்பதி. க0உ

கட்செவிஅரவு அம்புலி இந்தகங்கை அம் இன்மூன்றுஞ்சேரின் அரிவிந்தம் புலி வேங்கைமரம் (வேங்கைமரத்தின்மீது தாமரைமலரிருந்தது.

சங்கநிதியென்னத்தழைத்தவெங்கடேசுரெட்ட
சிங்கமிளசைச்செழுங்கிரியில்-அங்குகண்டேன்
மானிலத்தைமுற்றுமொருவள்ளநடுவாதியந்தந்
தானிருப்பதேதந்திறகத் தான். க0ங

மால் மலம் முல்லை வள்ளல் பாரி தீடுஅப்பாரியென்னும்சொல்லின்நடுவில் ஆதியென்னுஞ்சொல்லின் அந்தம்கண்டவெழுத்தாகியதில் இருப்பது பாதிரி பாதிரிமரத்தின்மேல் முல்லை மலரிருந்தது.

தாலமுற்றும்வாழ்த்துமிந்தர தாருவெங்கடேசுரெட்ட
வாலகிருஷ்ணவிம்பன் மணிவரையின்-மேலு
மருக்கமழூகன்மாமலையுமொருசந்தி
இருக்கவதிற்கண்டுகொண்டேனின்று. க0ச

மாமலை இலக்குமியுள் வீடாகியதாமரை சந்திமூங்கில் மூங்கிலின்மேல் தாமரைமலரிருந்தது.

தங்கள்குலதீபமென்த்தாரணியோர்கொண்டாடும்
எங்கள்வெங்கடேசுரெட்டமேந்த்ரன்வெற்பில்-செங்கணரி
உண்டதுடனவனின்றாதினதுஞ்சேர்ந்தவன்பேர்
கொண்டதின்மேற்கண்டேன் குறி. க0ரு

அரியுண்டது பூமி அதுக்கு அவனூதினது சங்கு அதுவளை இவ்விரண்டுஞ்சேர்ந்தது குவளைமலரி அவன்பேர்விண்டு அதுமூங்கில் மூங்கிலின்மேற் குவளைமலரிருந்தது.

அழகிசக்கதேவிக் கனந்தம்பணியால்
விழையுங்குமாரவெட்ட வேந்தே-பழகுமொழி
கூந்தல்களமல்குலநடுசொன்னேன்கனகம்
ஏந்துதனமாந்தளிர்மெய் யாம். ளசு

சக்கு கன் ஏவு பாணம் இக்கு மொழி அல்கூந் நல் நந்தம் களம் பணி அல்குல் ஆல் அகடு கனகம் தனம் மாந்தளிர் மெய்.

ஏகாம்பரரிடப்பேரில்லாததாழ்வுசொல்லப்
போகாதுவேறு புகலிலையே-பாகார்ந்த
சந்தமதுரத்தமிழுக்ககத்யனென
வந்தவெங்கடேசுரெட்ட மா. ளஎ

ஏகாம்பரிடம்-கஞ்சி.

திரைக்கலைக்குத்தையலென்பதேயிருபத்தேழென்
னரைக்கலைக்குத்தையலனேகம்-உரைக்கவொண்ணு
தந்தம்ப்ரசண்டாவரசர்சிரோரத்நமென
வந்தவெங்டேசுரெட்டமா. கoஅ

திரை கடல்கலை அதிற்றோன்றும் சந்திரன் தையலிருப்பத்தேழு அவன்மனைவிகள் இருபத்தேழு நட்சத்திரங்கள்.

சென்றலர்ந்தார்சேர்முத்திருளப்பபூபதிபான்
மன்றலர்ந்தார்வாங்கிவருமளவும்-குன்றமுலை
ஏழாயிரம்பண்ணையில்லுடம்புவாடாதே
ஏழாயிரம்பண்ணையில். ளகூ

ஏழாய் பெண்ணே இரு அம்பு அண்ணையில்மதனபாணம்பொருந்துவதனல் ஏழாயிரம்பண்ணை ஒருர்.

கூன்கலைநிலாவின்குளிர்ச்சிபொருக்காதுகல்வி
மான்கலையில்லாமன்மருளுமா-தேன்கலையச்
சந்தநறுங்காவின்மந்திதாவுமிசைநகர்
வந்தவெங்கடேசுரெட்டமா. ளய

நீகாவிதுராநெருப்பாமிவற்குவிலக்
காகாவிதுராகதம்புரிவார்கன்னியர்கள்

வாகாவிதுராமராமரதிமாரவச்ர
தேகாவிதுரா திருமலைவேலேந்திரனே. கககூ

அங்காவித்தாராவணைவதுகண்டின்பமொரு
பங்காவித்தாராபதியேயென்-றேங்குவளோ
துங்காவித்தாராதுணைமுலையாராசைகொள்ளும்
செங்காவித்தாரா திருமலைவேலேந்திரனே. ககஉ

ஆகசெய்யுள் கஉரு.

# நாகூர்முத்துப்புலவர்பாடிய
## கட்டளைக்கலிப்பா.



தனதனுகநடாத்தியடர்ந்தபூச் சரத்தைவாங்கித்தனத்திற் றொடுக்கம, தனதனுகதவில்லாமின்போன்மெய்யசந்தசந்துசந்தேசொலென்றுண்மினுள், தனதனுகணத்தொம்மெனப்பையினிர்த்தம் புரிந்தசரணசரோருகா, தனதனுகவளரும்ப்ரதாபவித்தாரனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. க

கனகனங்கம்பிளந்தளிர்கொந்தள கங்களந்திருக்காயமின்மேன்மற்ற, கனகனங்கம்பிளந்தலைகண்டு கொங்கைக்குளேவினன்சேராததென்கொலோ, கனகனங்கம்பளகோத்திராவருட்காதலன்றனைக்காத்தடிமைகொண்டு, கனகனங்கம்பிளந்தநரசிங்ககாருத்தாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. உ

கடகரிக்குமதனுனவர்செயுங்காயந்தேர்ந்தனரோவளவன்னைமார், கடகரிக்குமரிவாழுவேலன்முன் கட்டிஞரதிலென்ஞரதி லென்ஞமொன்ஞர்க்குவி, கடகரிக்குருவிக்கன்றுகண்ணருள்கர்த்தர் தாளிணையைத்துதிநேமகா, கடகரிக்குநிருபாவிளைசைவாழ்கருணைமால்வெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௩

தந்தப்பாதுகடீர்மருங்கம்பிருதாரையா மிந்தமாதைமின்ஞர்சந்தம், தந்தப்பாதுகனற்றவரம்புவேடாஞெளிக்கச்சரமுல்லைதாசர, தந்தப்பாதுகவிப்பட்டம் வாலியைத்தாக்கியேயவன்றம்பிக்குத் தந்துதந்தப்பாதுகை தம்பிக்குநல்கியதாருவேவெங்கடேசரெட் டேந்த்ரனே. ௪

கனதனந்தனதாவலிஞலந்தக்கனிக்குமாமலையாமிடைமின்னும், சினதனந்தனமாறகூறரிதரிதென்னுமல்குற்றிருவையணைகுவாய், மண

தனந்தனமாடைகமிழ்பகர்வாணர்க்கீந்துமகிழும்ப்ரதாபனே, தனதனந்தனவென்றாடுவோரருடங்கிவாழ்வெங்கடேசரெட்டேந்ரனே.

இந்தக்காவனங்கற்கோர் கவிகையாவிருந்துகாந்துதி யானென்னசெய்குவேன், பந்தக்காவனமம்மைகண்டப்பி யெப்படியங்கேகுவன்பாங்கியென்றாள்கலி, சிந்தக்காவனசத்திரசோம தியாகசற்குணபாகமனோகரா, சந்தக்காவனஞ்சூழிளசைப்பதித் தானமால்வெங்டேகரெட்டேந்த்ரனே. ௬

இருபந்தந்தமெனும்பொற்பயோதரமென்னசொல்லரதிக்கெண்மடங்கிவள், சொருபந்தந்தச்சிவிகையில்வந்தனள் சொந்தமாகவுவந்தனை வாய்சுடர், தருபந்தந்தமனிய வெற்புப்பெற்றித்தாய்த்துலங்கித்தனைநம்புவோர்க்கெலாம், நிருபந்தந்தமனதின்படிச்கருணேசனே வெங்கடேசரெட்டேந்த்ரனே. ௭

தரகலாதனங்கன்சமர்க்கோலஞ்சமைந்துபாணமெய்தான்பூவலவர, கரகலாதனகும்பம் பெரறுக்குமாகன்னியே யெனைக்கண்பாரென்றாள்புல, வரகலாதனன்மார்க்கசிலாக்கியமாவசந்தி பாகவரோதயா, பிரகலாதனன் புள்ளத்திருந்தருள்பேருக்குமால்வெங்கடேசரெட்டேந்த்ரனே. ௮

மாதமந்திரணம்போலிருந்ததைமலைக்கொப்பாகவளர்த்ததுமாரன்கைச், சூதமந்திரவோருகமாமதி சோர்ந்துதானிந்தவேந்திழைவாடுமோ, போதமந்திரசக்கினியைக்கவ்விப்பொழிலிற்றாவும் புகழ்க்கழுகாசல, வேதமந்திரமெய்க்குகனைத்தொழும்வெங்கடேசரெட்டேந்த்ரனே. ௯

வருதுகட்டுமுட்டெல்லாங்கடந்துபூவாளிவேள்கயவாழிமுரசமதிருதுகட்டுவசனமலமலைத் தென்றலாங்கொடுந் தேரைநடாத்தியே, பொருதுகட்டுவதனத்திற்சாடவே பூத்தொடுத்தனன்சந்திரகாவிடால்,விருதுகட்டுமதிபாவிளசைவாழ்வெங்கடேசரெட்டேந்த்ரவசீரனே

தந்துகந்துகந்தாகந் தணிக்குநீர்த்தடமருங்குதனமல்குற் றையலே,யமுந்துகந்துகந்தாகணப்போழ்திலுன்மோகத்தூதுமொழிவனென்றேவந்தேன், வந்துகந்துகந்தாகழுகாசல வாசகாவெனவாழ்த்துமுன்பாகட்டுங், கந்துகந்துகந்தாகப்புரட்டுங் கடாசலாவெங்கடேச ரெட்டேந்த்ரனே. ௧௧

நம்பரக்கரையானனராகிய நாதர்முன்பு நமைவேண்டிச் செல்கவென், றும்பரக்கரையாயனுப்பத்தன துருவிலாமதன் யுக்தத்துக்கெண்செய்வேன், அம்பரக்கரையான திற்பாளய மன்றிறங்கியளர்ந்திலங்காபுரி, வம்பரக்கரையாசுகத்தால்வென்ற மாதவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௧௨

அத்தன்கண்ணுக்குத்தோற்றுன்றன் மாதலாலரிபிரம்மாதிக்குந்தோற்றனவன்மகா, எத்தன்மாமணேயென்னுந்தமைய னென்றேசொல்வோன் கணேயெய்யாம லெய்கிறான், கத்தன்பூவுலகேழையுமேயொரு கவிகைகீழலிற்காத்தருளும்பரி, சுத்தன்மன்னுங்குமாரவெட்டேந்தரன் சோதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௧௩

உமையராசியையூரும்பிரான்வள ரோங்கநேருந்தனத்தாளுணமகிழ்ந், துமையராசிய மாய்க்கூட்டிவாவென்றுசொல்லி யென்னையுன்பால்விடுத்தாள் பொன்னூர், சமையராசிற்சொரூபா வென்றீசரைத்தன்கையாற்றொழுதுங் கன்கைவிடணற், கமையராசியராயருள்வல்லவாபுகழாகராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௧௪

சங்கதாதரளங்கால்கமுகதாதன்கழுத்திணையென்றுட்குன்றுநின்று
துங்கதாதரமகஞ்செய்யிலத்தோகைதேகத்தைமாரன்வருத்துலான்
அங்கதாதரநீதூதுசெல்லென்றவாரியாரணவீர்யப்ரதாபனே
வெங்கதாதரவீமசெயதராவெங்கடேசுரவெட்டம்புயனே. ௧௫

பூவலாரைமுதலானகற்பங்கள்புரிந்துகிட்டைவசித்திருந்தாலுமென்
ஆதலாரையும்விட்டுவிடாதந்தவரிப்பிர்ம்மாதிகளானுலுந்தானென
மாவலாரைமலரதினுலெய்யின் மங்கையுள்ளமயங்காதிருக்குமா (னே
மேவலாரையடக்கிச்செயம்பெற்றவிசயனேவெங்கடேசுரெட்டேந்த்ர

அஞ்சக்கஞ்சனங்கைபாலனந்தசோகமேவவடரவிடுகுழ (ன்
தஞ்சக்கஞ்சனமெல்லாங்கரைத்திருதனத்தைநீலத்தடவரையாக்கமா
மிஞ்சக்கஞ்சனந்தாழக்குலுக்குமெய்ம்மின்னேமேவிவிரகந்தணித்திடாய், வஞ்சக்கஞ்சனகத்தைத்துணித்தவாவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௧௭

கந்தரப்புயருஞ்சடையார்பகைக்காமன்வந்துகணேபேவவேயினுள்
அந்தரப்புயலின்பேர்மிருத்தனளணையின்மீதணைவாயணவாய்வர
தந்தரப்புயங்கப்பணிமீதுசெய்தத்தென்றுடுஞ்சரணும்புயாதிட
மந்தரப்புயபாரசெயதரவாசவாவெங்கடேசுரெடடேந்த்ரனே. ௧௮

அந்தராசலவன்பன்றிபோற்பகையார்ப்பரிக்கவளர்க்கிசைந்தெய்தமின், பந்தராசலனேபயந்தாள் வெறுப்பாயுரைக்கிற்பலரென்சொல்லாருல, கந்தராசலவாவூரின்வாய்பறைக்கவுலேமூடியுண்டாகொண்டகாதல்தீர், மந்தராசலவாகாசயதராவாசவாவெங்கடேசுரெட்டேந்திரனே. கசு

முனசநங்கைமுகன்கண்ணிருந்துறமுற்றும் வெந்தவன்வந்திகல்செய்யவே. தினசநங்கைக்குதுகஞ்சிதட்டுது சேலைசேர்ந்திருகாலையும்பின்னவே, இனசநங்கையது கொட்டிக்கொட்டிவந் தேசவேமயன்மீசுரமாகுது, வனசனங்கைமருவும்புயாசலா வாசவாவெங்கடேசுரெட்டேந்திரனே. உ௰

படங்குமாதங்கரேக்காற் சமைந்திட்டபாரக்கொங்கைக் குறியுஞ்சமீபந்தான், சடங்குமாதங்கழிக்குமுன்னுமிதுசமயம்கட்டித்தழுவாவிடில்லவா, அடங்குமாதங்கள் சித்தமென்பாக்கியமணையவேண்டுமுன்னுண்மூலமென்னவே, தொடங்குமாதங்கமுன்வந்தமாதவாதுங்கனேவெங்கடேசுரெட்டேந்திரனே. உக

வாசக்காந்தண்மலர்க்கையினுலனே வாரிவாரிப்பன்னீரொடுசந்தனம், பூசக்காந்தல்பொருமலயர்ந்துவாய் புலம்பத்தாமமும் வெம்பமின்னார்களும்,ஏசக்காந்தமுரைக்கிலென்செய்குவாளெய்துவாய்குறமாதுதெய்வானைக்கோர், நேசக்காந்தருள்பெற்றுவாழ்மனுநீதனே வெங்கடேசுரெட்டேந்திரனே. உஉ

வந்துவாரவையநடத்திச்சிலேவளைத்துச்சித்தசன்கமாங்கணையேவப்பு, குந்துவாரளவும் பிதிர்த்திடக்குடைந்துகொங்கைக்குடத்தையுமேயனே,கந்துவாரமதாக்கிவிட்டாலிந்தக்கன்னியென்செய்குவாள்காண்கவியினுல்,சிந்துவாரமதிலணைகண்டவாசீதராவெங்கடேசுரெட்டேந்திரனே. உ௩

அரிசிராவணத்தாலடைந்துந்தொனியமருதில்லைபதைமுனியுண்ணவும், கரிசிராவகப்பகலோன்வருங் காலமானதெக்காலமெருடரும், பரிசிராமுழுமேளாபகுடாரிநீ பாரவில்வளைத்துத்கரதாஷண, திரிசிராவிழுவோர்பாணந் தொட்டவாசீதரா வெங்கடேசுரெட்டேந்திரனே.

தொடுக்கவத்திரம்வேளது தானிந்தத்தோகைமெய்யைத் துளைத்தூடுருவவே, கடுக்கவத்திரண்மேல்விழுமீயெனக் கலங்குவாட்குன்னலங்கலின்றீகுவாய், இடுக்கவத்திரங்காவென்றழைக்கவந்திடக்கரைத்

திகிரிக்கிரையிட்டவா, உடுக்கவத்திரமில்லாதவர்க்கருளுத்தமாவெங் கடேசுரெட்டேந்த்ரனே. உரு

சீதமாரம்பனங்கன்றெட்டான்றனத்தினைத்துளைத்துத்தடாரிக் குதந்தம்பு, சூதமாரம்பம்ராமாராமாவெனசொல்லுவேன்சந்துசொல் லவிம்மாதர்க்குள், நீதமாரம்பலாதி செய்வாரென்றன்னேமக்காமந்த ணிமூலமென்னவே, போதமாரம்பஞ்செய்யமுன்வந்தவா போசனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. உசு

பூசுகந்தந்தனத்திற்பொரிந்ததுபொருக்கெழும்பியிப்பூவைதன் மரலுக்கே, நீசுகந்தந்தடங்கலின்றித்தரநேமஞ்செய்திவள்காமந்தணி த்திடாய், தேசுகந்தந்தராவணன்சேய்தலைசிக்கெனக்கொண்டுவாவெ ன்றிலக்குவற், காசுகந்தந்தராமாபெரும்புகழாகராவெங்கடேசுரெட் டேந்த்ரனே. உஎ

பொருப்புக்குஞ்சரியாகப் புடைத்தெழும்பூண் முலைக்கன்னிமீ தேசமர்செய்யத், துருப்புக்குஞ்சரியேறிமெய்யெங்கணுந்துளைக்கமா ரன்வளைக்கவவன்செங்கைக், கருப்புக்குஞ்சரிசாமரிழற்றுந்திங்கட்கு டைக்குங்கலங்குவளோமன, விருப்புக்குஞ்சரிகாந்தற்குவைத்தவாவீ ரனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. உஅ

அடிதங்கச்சியிவளென்னமோதெரியாதுசிந்தையயருகிறளிந்தா, பிடிதங்கச்சிவிகையிலிருந்துநம்பிள்ளைதான்கிளிப் பிள்ளையல்லோமய ல், கொடிதங்கச்சிப்பரி போற்சென்றேவரக் கூறென்றுளிகல்கொண் டோரமர்கண்டு, துடிதங்கச்சிமையப்புயங் கொட்டுமுத்துங்கனேவெ ங்கடேசுரெட்டேந்த்ரனே. உகூ

அரகதத்தை மதன்சிந்தைதன்னில்வைத்தம்பரத்தை யடித்தார் ப்பரித்துமே, துரகதத்தைநடத்தியம்பாலுமென்று வதனத்தைத்து ளைத்துவிட்டான்கொண்ட, விரகதத்தையெவர்தணிப்பார்மலர்மெத் தைமீதினில்வைத்தணைவாய்மணி, மரகதத்தையணியும்புயாசலாவாச வாவாவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௩௰

அனங்கனம்பனந்தந் தொடமெய்பசந்தசந்துவாடு வதல்லாவி டைக்கிரு, தனங்கனம்பனந்தாரானிருக்குநற்றலத்தின் பேர்க்கொடி தாங்காதுபெற்றதாய், மனங்கனம்பனம்பின் போமிருத்தந்தமாதர் சொல்லும் வசைக்கிலக்காகிய, மினங்கனம்பனஞ்சேர் சூதஞாயினுள் வெங்கடேசுரவெட்டநரேந்திரனே. ௩௧

மாதவாவினமட்டலர்நீள்புய மாலைமாலையகற்றுவதாசடை, யாதவாவினஞ்சொல்லுந்துராகதவன்னைவாயை யடக்குவதார்மலச், சீதவாவினந்தங்கந்தரமெனுஞ்செல்விக்கோர்மொழிசொல்வியலைந்திடாய், போதவாவினங் காத்தருண்மாதவா போசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௩௨

இருதனங்கனிக்குச்சிலைபோற்புடைத்தெழுந்துவிம்மி யிறுமாந்திடக்கயல், விருதனங்கனிக்குச்சிலைவாங்கி மாவிசைகொண்டுருவிப்பாயவாளியாற், பொருதனங்கனிவர்க்கமுண்ணுமன்மால் பூண்டிருக்கச்செய்தான்றமிழ்வாணர்க்கு, வருதனங்கனிவாய்த்தருமன்னவாவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௩௩

என்னிலங்குச் சலராசதராசருக்கேற்றதா மலரிங்கேவரநீபோய், முன்னிலங்குநங்காரியம்யாவதுமொழியென்றாள் பைங்கிளிதான்மருவுவாய், நன்னிலங்குவலயத்திலீதெனநாட்டுந்தென்கருக்கேட்டைக்கதிபனே, பொன்னிலங்குமணிமார்பனே திடபோசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௩௪

அரகராசலங்கொண்டபுண்போன்முலையாளைவிம்மவதிற்றென்றுருவவே,உரகராசலவன்குளிராதனலுருக்கிறானந்தமாரற்கிம்மாதருந், தரகராசலராசியதாமயறுனையணைப்புணர்வாய்மேலமென்றதோத், திரகராசலங்காத்த சக்ரேசுவராசிதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

கஞ்சரஞ்சப்பெடைபோலுமென்னடைகமலத்தாளிருங்கண்ணிணையானது, பஞ்சரஞ்சர்க்கரைவட்டுரைமுலைப்பருப்பதத்திலறுபதத்தான்றொட்டான், வெஞ்சரஞ்சப்பிரமஞ்சகோளகை மீதிருந்திருந்தமின்னுளைமேவுவாய், வஞ்சரஞ்சப்பொருஞ்செயதோர்த்தண்டாவாசவாவெங்கடேசுரெட்டேந்திரனே. ௩௬

மாமனுக்குமகனாகவந்த காமனுக்கும் பெற்றுவளர்த்தவட்குங்கலைச், சோமனுக்குமினத்தார்க்குமஞ்சிமெய்சோர்ந்து வாடினள்சேர்ந்தணைவாயினி, தாமனுக்குமினியகுமாரெட்ட தருமனுக்குங்குமாரமுத்தேந்திர, பூமனுக்குஞ்சகோதரனே திடபோசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௩௭

என்னவாவிதுரா சியமாநடையேலுமாமகள் காலொடுகொன்மிகப் பின்னவாவிதுரானவறாவவா பிரமனிப்படிச்செய்தானென்னார்கள்வா

ய், கொன்னவாவிதுராகத்தெறிசை குடிபுகக்கையிற்கோதண்டம்வா ங்கியே, மன்னவாவிது ராபுகழாகராவாசவாவெங்கடேசுரெட்டேந்த் ரனே. ௩அ

சொலங்கக்காகொண்டமோகத்தினல்வருஞ்சோபதாபந்துலக்க வென்றுட்டிமே, விலங்ககாமசரத்தாலும் பூந்தளிர்மெய்யிளைத்தனள ல்லாமலொப்பிலா, நலங்கக்காரிசுகக்காரிமேவவிந்நாளுமேநல்ல நாளை டையார்மனம், மலங்கக்கால்கொண்டடார்பரிமேல்வரும் வாசவாவெங் கடேசுரெட்டேந்த்ரனே. ௩௯

சரந்தராதரங்கண்டா மதன்விடுத்தானெனது குழந்தைதனியே மால, பரந்தராதரளக்கச்சிறுக்கும்பொற் பார்பயோதரபாரத்தைத் தாங்கவே, உரந்தராதரவம்போற்றுவண்மருங்கொசியுமுள்ளம்வசியா யணைந்திடாய், புரந்தராதரணிக்கதிபா செயபூதராவெங்கடேசுரெட் டேந்த்ரனே. ௪0

பிலிக்குஞ்சரவங்களைக்கொத்திப்பிடித்துத்தாக்கப்பெரும்பகை யின்றிக்கா, லாலிக்குஞ்சரபஞ்சிங்கமீதுசென்றடிப்பபோல்வந்தடிக்கு துதாயென்ற, நீலிக்குஞ்சரசம்பேச்சு மாச்சிவணிணைவுங்காணுங்கனவு மிங்கேயொரு, வாலிக்குஞ்சரமேவியராகவாவாசவாவெங்கடேசுரெட் டேந்த்ரனே ௪௧

அராவுக்கேகணையே செவியன்பரதல்லபெற்றவணைக்கேமின்னுரு ம்வம், பராவுக்கேகணைபேகுழலாக்கியபண்ணுக்கேநொந்த பெண்ணு க்கிரங்கியின், றிராவுக்கேகணைமேற்சென்றிருந்து நல்லின்பலீலைசெய் தன்பாய்மருவுவாய், மராவுக்கேகணை யேவியராகவாவாசவா வெங்க டேசுரெட்டேந்த்ரனே. ௪௨

அல்லைமாலைமருதங்கிளியைமின்னுரை நால்வகைத்தானையதாக்கி விட், டெல்லைமாலையும்விட்டடார்ந்தேறிநானிருக்குமாலையத்துட்புகுந் தேதன்கை, வில்லைமாலைவளைத்துவளைத்தம்மைவிட்டுவேணமட்டுமீறி னன்மேவுவாய், குல்லைமாலையணிமாலைப்போற்றிய குமுணனேவெங்க டேசுரெட்டேந்த்ரனே. ௪௩

தடிக்கவில்லைமுலைதிரண்டேமகள் சமையவில்லைமணந்தான்குமு குமென், றடிக்கவில்லைபொடிபுனுகத்தர்சேர்த் தணியவில்லைய்தற்குமு ன்மாரன்போர், முடிக்கவில்லைவளைத்தாற்குழந்தைதான் மோசந்தாங் கவுமுற்றுதென்னுர்துடி, துடிக்கவில்லை வளைக்குமகோரவுத்துங்கனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. ௪௪

மஞ்சலக்கணங் கன்புறவேகட்டி மருவுதற்குளவாவைத்திருக்கு நாள், அஞ்சலக்கணலார்க்கே தெரியுநின்னுவலோவளங்காதிரங்காதவன், நெஞ்சலக்கணப்பெற்றியின்வெண்ணெயாநிலாவில்வந்துகலவிசெய்வாயையா, பஞ்சலக்கணமுத்தமிழாதர பாஷிதாவெங்கடேசு ரெட்டேந்த்ரனே. சரு

சத்திக்கும்பணிலக்கையினுன் பெற்றதயன்போர்க்கு விநயமின்னுரைச்சு, மத்திக்கும்பணியாய்நிரைத்துச் சரமாரிபெய்யவென்மானுரைதானுரைக், கத்திக்கும்பணிசேர்ந்தனைகாண்கிலான் காதலாவிப்போதணைவாயையா, எத்திக்கும்பணிவேந்தமகாமண்டலேசுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. சசு

தனதுமெய்க்கு மலரணையானது தழலிறைக்குந் தனச்சுமைபாலிடை, மினதுமெய்க்குந்துவளுமிம்மானந்த மேனகைக்கும் வெகுமிச்சநானுண்மை, சொனதுமெய்க்குமரன் பொற்பதாம்புயந்தொழுந்தொழும்பன்குமாரெட்டபாண்டியன், மனதுமெய்க்குமுயிர்த்துணைவாபுகழ் வாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. சஎ

இட்டங்கட்டியவாறேயல்லாது வேறில்லை சிந்தையிதெல்லாஞ்சுவாமிய, திட்டங்கட்டியபரஞ்சியாற்செய்த சித்ரமஞ்சத்திற்சேர்வாய்தினஞ்சட்ட, வட்டங்கட்டி யங்கங்குடிக்கின்ற ராவணனை வென்றன்புவைத்தவன்றம்பிக்குப், பட்டங்கட்டியராமாநவரசபாஷிதாவெங்கடேசுரெட் டேந்த்ரனே. சஅ

பருதியானவரீராறுபேருங் கோபாக்கினிமிஞ்சிவருவதுபோன்மதி, வருதியானதாற்காற்றேனென்றுளேயோமலடிருந்துபெற்றேனிந்தப்பிள்ளையை, ஒருதியானமதுகுலதீபம்போலுதித்துமோகத்துக்குள்ளாகினுளையா, குருதியானமறவாதவாபுகழ்க் கொறறவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. சகூ

அம்பமாமுனிவாய்மூலக்கண்ணைச் சல்லடைக்கண்ணுகவனங்கனெய்யச்சொன்ன, விம்பமாமுனிருந்தபடிக்கிலை மேனிமாகலைக்யாணியிவளையா, கம்பமாமுனி தம்பெறவந்துதற்காத்தவாவெகுநேர்த்தியதாந்தமிழ்க், கும்பமாமுனிபோல்வந்துதித்தவாகொற்றவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ருய

ஆக-செய்யுள்-தஉஎரு.

இராமநாதபுரம் சமஸ்தானம்.

மானேஜரவர்களாகிய

# பொன்னுசாமிதேவர்மேற்

## சந்திரசேகரகவிராஜபண்டிதர்பாடிய

வெண்பா.

திருமடக்குத்தன்னிறமாஞ் செய்யும்புயமும்
பொருமகட்குப்பொன்னம் புயமுந்-தருபொன்னு
சாமிவள்ளன்மாலேதந்தான் றன்கமலவானேநற்
சாமிவண்ணமாலேதரா தான். (நிறம்-மார்பு)

இய்பூர்தகர வெடுத்ததிருமான்மருகன்
மையூர்குமரன் மலரடிக்கு-மெய்யூர்
மனத்தையளித்தபொன்னு சாமிக்குமானே
அனத்தைமறந்தாளென்றறை (இய்பூர்தக்ரம்-திக்கிரி) ௩உ

வெறிவிலக்கல்.

ஆடிமாதம்பவனி புயத்தரன்றியே
ஆடிமாதம்பார்கண்ணீர் மாற்றி-நீடுமயல்
போக்குமோவன்னாய் புலவர்மிடியைக்கொடையான்
நீக்குபொன்னுசாமி நிருபன்.

பின்முடுகுவெண்பா.

பொன்னாரம்பூணும் புகழ்பொன்னுசாமிவள்ளல்
துன்னுகள்ராமன் றுயர்புரியார்-மன்னனிதேன்
நக்கரும்புமற்சுரும்புநற்கரும்புதைக்கொள்ளும்வேள்
எற்கரும்புபுண்ணுய்க்கவெய்வனே. ௪

அளகைப்பொறித்தகொடி யண்ணலடிபோற்றும்
அளகைக்கோனும் பொன்னுசாமி-துளிமதுத்தார்
தந்தான்மதனடங்கத் தண்மதியந்தானடங்க
இந்தாவிந்தாமுகத்தாயிது. ௫

புறங்காட்டல்-கட்டளைக்கலித்துறை

செவ்வேரிகழ்தான் மாமலர்ச்சேவடிசிந்தைசெய்யும்
தெவ்வேரிகபொன்னு சாமிபாலன்றன்-சிக்கிரிவாய்
வெவ்வேறினமணி மேவமுகக்கட-நீர்மறைத்து
உவ்வேறினமத கவ்வினேக்காட்டலென். ஞெண்டொடியே.

உவ்வேரின-மதக-முதுகு.

கைக்காரர்நிதிதருதேனுசிந்தாமணிகண்ணன்கார்த்தி
கைக்காரர்நிகாவரங்கொடையோன்பொன்னுசாதுநடக்
கைக்காரர்வரையிற்பவனிவந்தான்கண்டுமால்கொள்காரி
கைக்காரர்துணைபுரிவாரிறவாதுகருணைசெய்தே. ௭

கலிப்பா.

என்றுகண்டவிந்துவைப்போலிவன்முகஞ்சோர்ந்தாளம்மா
என்றுகண்டனம்பாலுமெனவலாலென்கண்ணே
என்றுகண்டங்கம்மவதழந்திடுமுரையர்க்கிளிக்கே
என்றுகண்டனனீர்தடுப்பாயெழிற்பொன்னுசாமிமன்னு. ௮

வாராக்கொங்கைமிசைமரும்பொன்னுசாமிவள்ளல்
வாராவெல்லாமதியழலாங்தென்றலன்றில்
வாரார்கலியொலியும்வருத்தமனநொந்தனள்சொல்
வாராநீயல்லாலம்மன்னர்பெருமன்றனக்கே. ௯

போதம்புடனேமதியளிநற்பூங்குயிறென்
வாதப்புரிதுயரால்வாடுமிவளைப்புரப்பாய்
போதம்புரமெரித்தோர்கோதும்வேள்விபொற்கமல
பாதம்புனைபொன்னுசாமியென்னும்பார்த்திபனே. ௧௦

கட்டளைக்கலிப்பா.

அச்சுப்பொற்புலவரைமதித்திடுமண்ணலேபொருமங்கசன்தாளியாம்,நச்சுப்போதுதுரக்கத்துரந்தனனூணும்பூணுந்துகிலுமிவடனங்கச்சுப்போனதுங்காணான்முகவைவாழ்காவலாவளகேசவிவள்கண்டுங்கைச்சுப்போனதுமுண்டிலள்கொண்டைசேர் கண்ணியைப்புரப்பாய்ப்பொன்னுசாமியே. ௧௧

அத்திகத்தவடுத்துக்கராவினையட்டவாழிநெடுமான்மருகனற், கத்திகத்தன்சந்தாசலச்செந்தூர்வாழ் தாருகாரிவலாரிமகணைகைப்,பத்திமுத்துக்குறத்திமணாளனைப்பணியுனம்பொன்னுசாமிவதிபனைத், தித்திக்கத்தகுமென்மொழிகூறநீ சேரச்செய்திடுவாம் மடக்கிள்ளையே.

ஆரம்பூணும்வரைக்குயமீதிலே யணங்கவேடன்மலர்க்கணைதூவவே,ஆரம்பூணுண்டுசிலுந்துயிலுநல்லமணைகழங்கும்மடக்கிலையும், ஆரமேபூணுந்துறந்துமெய்சேர்ந்தன ளவளைக்காத்தணைத்த ளேவதுன்பாரமே, ஆரம்பூணுடைநற்குத்தவீரனே மண்ணலே பொன்னுசாமிகுபேரனே. ௧௨

எங்குந்தம்புகழோங்கவளித்தழூவேழுவள்ளல்களுமிதனீகையால், தங்குந்தங்குமிவறகே புகழெனச்சாற்றுஞ் சற்குணனும்பொன்னுசாமிமா, தங்கமேற்கொடு போந்தவனோர்தினஞ் சாரும்வீதிற்கண்டார்மயல்கொடு, சங்குந்தங்கலே யுந்தரியாதுந் தளர்ந்துநாணமுந் தாமிழந்தார்களே. கச

மட்டுத்தார்சணை யான்மதன்மாதினை வருத்தத்தான்மனநொந்து மயங்கிப்போற், கட்டுத்தார்புரவிக்கொருவீரநின்கருத்துத்தானிரக்கிப்புயமேவுபூ, மொட்டுத்தார்தர வாங்கிவரச்சொன்னாள் முத்தத்தார்நிறையொத்த முறுவலாள், தட்டுத்தானுரையாமலருளரிச்சந்த்ரனே பொன்னுசாமிநரேந்த்ரனே. கரு

பாலனத்தை விடுத்தநின்கண்ணிவள் பாலனத்தை விடுத்தனள் வேணிகோ, பாலனத்தை யுடையோன் மருகன்கோ பாலனத்தையல் பாகனருள்பரன், பாலனத்தையணி நாகிவள்ளிகோபாலபற்பம்பணி பொன்னுசாமிநீ, பாலனத்தைப்புரிசிலைமாரணம்பால்வழுத்தப்படாமலிப்பாவையே. கசு

## விருத்தம்.

மானேசரந்தொடுத்தமதனங்கம்விழத்தெரித்தோன் | மான்மலர்க்கோமானேசாதவாபரவும்பரனன்பன்சேதுபதிமன்னன்வாயில் (ன்
மானேசராம்பொன்னுசாமிவள்ளலென்னேயவர்மருவநல்ல
மானேசராகும்வகைநீபுரிந்தாலிவ்வுலகில்வாழுவேனே. கஎ

## கொச்சகக்கலிப்பா.

சுரர்க்கோர்சுவையமுதைத் தூநெடுமாலீந்தனன்பூ
சுரர்க்கோரறுசுவைசேர் தூவமுதையீந்தனைநீ
மண்டலத்தின்மூன்றடிமண் வாவிரந்தான்றீனர்கள்க
மண்டலத்தில்தரவுமாங்கிதிசொரிந்தனைநீர்.

## இது தரவு * எனவாங்குதனிச்சொல்.

சக்கரத்தானிருதர்களைத்தான்றணித்தானாரணனஞ்
சக்கரத்தானுட்பகையைத்தான்றணிந்தாய்நீசபையில்
எல்லார்வணக்கடையீந்தரிமானங்காத்தான்
எல்லார்க்குநீயாடையீந்தபிமானங்காத்தாய்
நல்லாரடிகவர்ந்தனாராயணனறிந்த
நல்லாரணிநங்கினைநீநானிலத்தில்

இவைமூன்றுந் தாழிசை.

வான்றருவெனவேவழங்குகொடையோய்
மீன்வருகண்ணினள்விழைவெனுநறவை
உண்டுகளித்தேயொளிவளைசோரக்
கண்டுபாலனமுங்கொண்டிவளணைமேற்
கண்டுயிலந்துதொண்டைதாய்துடிப்பக்
காவினீர்வாரவோவியம்போன்றனள்
கருப்புக்கழையைக்குழைத்துத்தேனருளி
அருப்புக்கணையைவிடுத்தனனங்கவேள்
வெம்புலியேறெனவிண்மிசையூர்தரும்
அம்புலியோவிவயாவிமேற்றுவின
தேர்வறுகென்னலுங்காவுறுகுயிலும்
தண்ணினஞ்சிந்தும்பெண்ணேவாழன்றிலும்
சந்ததமுடற்றும்வெந்துயர்தணிப்பாய்
நன்னயவிராமநாதபுரம்வாழ்
பொன்னுசாமியெனும்பூபதியே.

ஆக செய்யுள் ௬உ௯௧.

## தனிப்பாடற்றிரட்டு.

முற்றிற்று.

—(*)—



உ

சிவமயம்.

# தனிப்பாடற்றிரட்டு-செய்யுளகராதி.

தனிப்பாடற்றிரட்டு-செய்யுளகராதி.

முற்றுப்பெற்றது.

